**ஊன்ஆரப் பணிந்துஎழுந்துஅன் பால்கரங்கள் குவித்தே**
**உறவழுத்தி அருட்குருவே என்பாசத்து ஒழிவு**
**தான்ஆம்எத் திறத்தினால்ஆம் எனவினவல் சீடன்**
**தனதுவிதி வத்துஉப சன்னத்துவமாம் அன்றே.**

நான் என்பதன் பொருள் யாது? எனக்கு இந்தப் பிறவி வந்த விதம் எப்படி? இது யாரால் அழியும்? என்று சிந்தித்து மலர் கனி முதலியவற்றைக் கையுறையாகக் கொண்டு சென்று, கெடாத சிறந்த விவேகம், அடக்கம், வைராக்கியம் முதலான நற்குணங்களை உடைய குருவைச் சரண் அடைந்து, அவர்முன்னர் மண்ணின்கண் உடம்பு பொருந்த வணங்கி எழுந்து நின்று பயபக்தியோடு கை கூப்பித் தலை மீது வைத்துக் கொண்டு மிகவும் போற்றிப் புகழ்ந்து, கருணைக் கடல் ஆகிய சற்குருவே என் சம்சாரம் எந்த விதத்தினால் அழியும்? என்று கேட்டு விண்ணப்பம் செய்வது, சீடன் விதிப்படி, சரண் அடையும் தன்மையாகும்.

**16.** **அனையவனது அதிகாரம் தெரிந்துஅருளால் நோக்கி**
**அஞ்சல்ஓம்பு என்றுஅபய கரம்சிரத்தில் இருத்தி**
**புனையவரும் சுருதியுத்தி யால்அவனதுஅ நான்ம**
**புத்தியினை ஒழித்துத்தா தான்மியவாக் கியத்தால்**
**நினையலரும் ஒருபிரமம் நீயேஎன்று உள்ள**
**நிலையைஉணர்த் துதல்குரவன் உபதேசம் ஆகும்**
**இனையஉப தேசமுறை உத்தேசத் துடனே**
**இலக்கணம்சோ தனைஎனும்மூன் றினையும்உடைத் தாமால்.**

அவ்விதம் வினாவிய சீடனது பக்குவத்தை ஆராய்ந்து அறிந்து, கருணையுடன் நோக்கி, நீ அஞ்ச வேண்டாம், நாம் உபதேசிப்பதைப் கடைபிடிப்பாய், என்று கூறி அபயக் கரம் நீட்டி, அஞ்ஞானம் நீங்கி ஆன்ம ஞானம் உண்டாகட்டும் என்று, அவன் தலை மீது கை வைத்து, எப்போதும் புதுமையாக விளங்கும் சுருதி வாக்கியத்தாலும், யுத்தியினாலும் அவனுடைய தேகம் முதலியவைகளில் நான் என்ற புத்தியை நீக்கி, தத்துவமசி மகா வாக்கிய உபதேசத்தால், நினைத்தற்கு அரிய ஒப்பற்ற மேலான பிரம்மம் நீயாய் இருக்கின்றாய் என, இயல்பான நிலையினை அறிவித்தலே குரு செய்யும் உபதேசம் ஆகும். இவ்வுபதேச முறை உத்தேசம், இலக்கணம், சோதனை என்று மூவிதமாய் இருப்பதாம்.

17. அறியஉணர்த் துறுபொருளை நாமமாத் திரத்தால்
அறைந்திடுதல் உத்தேசம் ஆம்*களகம் பளம்ஆம்
குறிஉடையது ஆன்எனல்போல் அப்பொருளில் சிறந்த
குறிஉரைத்த இலக்கணம்அவ் இலக்கியம்ஆம் பொருளில்
செறிவுஉறும்அவ் இலக்கணம்உண் டோஇலையோ என்னத்
தெரிந்திடுதல் பரிட்சைஓர் பொருள்அறிந்து பெறற்கு
பொறிஉறல்செய் காட்சியாம் அளவைமுத லாகப்
பொருந்துபிர மாணங்கள் எட்டுஉளவாம் அன்றே.

அம்மூன்றினுள் சீடன் அறியும்படி (அவனுக்கு) அறிவிக்கும் பொருளின் பெயரை மாத்திரம் கூறுதல் உத்தேசமாம். கழுத்தில் கம்பளம் போல் அடையாளம் உடையது பசு என்பது போல அந்தப் பொருளின் சிறந்த அடையாளத்தைக் கூறுதல் இலக்கணமாம். அந்தப் பொருளின்கண் அந்த இலக்கணம் இருக்கின்றதா இல்லையா என்று ஆராய்ந்து பார்த்தல் பரிட்சையாம். அப் பொருளினை உணர்ந்து பெறுதற்கு காட்சி முதலான எண் வகைப் பிரமாணங்கள் (எனும் அளவைகள்) உண்டு.

18. கடமுதலாம் அவற்றினது காண்கைஅது தானே
காட்சிபுகை யால்அங்கி ஞானம்அநு மானம்
திடமருவும் அவ்அநுமா னம்பதிஞை ஏது
திட்டாந்தம் எனும்அங்கம் உடைத்துஅவற்றுள் பதிஞை
இடமலை வெவ்அழல்உடைத்து என்பது புகைஉண் மையினால்
எனல்ஏது மடைப்பளிபோ ல்என்பதுதிட் டாந்தம்
உடைமைஉணர் ஆத்தன்உரை யால்நதிதீ ராதி
உறுகனிஆ திகள்உண்மை ஞானம்ஆக மம்ஆம்.

இவற்றுள் காட்சி (பிரத்தியட்சம்) பிரமாணம், கடம் முதலாக உள்ள பொருள்களின் ஞானமாம். அநுமானப் பிரமாணம், இம்மலை புகை உடையது என்னும் ஞானத்தால் அது நெருப்புடையது என்னும் அறிவை உண்டு பண்ணுவதாம். உறுதியோடு கூடிய அந்த அநுமானப் பிரமாணம், பிரதிஞ்ஞை, ஏது, திட்டாந்தம் என்று கூறப்படுகின்ற மூன்று உறுப்புக்களை உடையது. அம்மூன்றினுள், பெரிதான இம்மலை வெம்மையான நெருப்பினை உடையது, என்பது பிரதிஞ்ஞையாம். புகை இருப்பதனால் அக்கினி

* *களகம் = கழுத்து*

உண்டெனக் கொள்வது ஏதுவாம். அடுக்களை போல் எனக்கொள்வது திட்டாந்தமாம். பொருள்களின் இருப்பை உள்ளபடி உணர்ந்துள்ள உண்மை உரைப்போன் வாக்கியத்தால் “ஆற்றங்கரையில் மரங்களில் பழம் முதலியன இருக்கின்றன” என்னும் அனுபவ அறிவினால் கூறப்படும் அவ்வார்த்தை ஆகம (சப்த) பிரமாணம்.

19. **பகற்பொழுது உண்ணான்ஒரு வன்இளை யாமை கண்டு**
**பரிந்து இரவுஊண் கற்பித்தல்காண் அருத்தா பத்தி**
**அகத்தில் இலைஉறு தேவதத் தன்எனில் இருப்பன்**
**அவன்வேறு ஓர்இடத்தில் எனத்தெரிந் திடுதல் தன்னை**
**தகப் பெரியர்கேள்வி அருத்தாபத்தி என்பர்**
**தகுபசுவோடு ஒக்கும்மரை எனுமொழிகேட்டு இருந்தோன்**
**புகப்படரும் வனத்தில்அதன் விடயஞா னந்தான்**
**பொருந்துதலே உவமானப் பிரமாணம் ஆகும்.**

பகற்காலத்தில் உணவு உண்ணாத ஒருவனது உடல் இளையாமல் பருத்து இருத்தலைக்கண்டு, அவன் இராக் காலத்தில் மறைவாக உணவு உண்கிறான் எனக் கற்பித்தல் காட்சி அருத்தாபத்தியாம் (திருஷ்டாருத்தாபத்தி). “தேவதத்தன் என்போன் இப்பொது வீட்டில் இல்லை” என்று ஒருவன் சொன்னால், அவன் வேறோர் இடத்தில் இருக்கிறான் எனக் குறிப்பால் தெரிந்து கொள்ளுதலைத் தக்க பெரியோர்கள் கேள்வி அருத்தாபத்தி (சுருத்தாருத்தாபத்தி) என்பர். மரை என்னும் காட்டுப் பசு நீ அறிந்த பசுவோடு ஒப்பாகும் என்று கூறக் கேட்டவன், விரிந்துள்ள காட்டிற்குள் சென்று, காட்டுப் பசுவைக் கண்டு, தனது ஒப்புமை விடய ஞானம் காரணமாக, பசுவும் காட்டுப் பசுவும் ஒப்பாகும் என்ற ஞானத்தை தான் அடைதலே உவமானப் பிரமாணமாம்.

20. **இந்நிலனில் கடம்இல்லை என்பதனால் தோன்றும்**
**இன்மைஉணர்வு அபாவமாம்ஆ யிரம்ஆ கியஎண்**
**தன்னில்ஒரு நூறுஎனும்எண் உண்டுஎனும்ஞா னந்தான்**
**சம்பவமாம் இம்மரத்தில் இயக்கன்உளன் என்னும்**
**சொல்நிகழ்வில் வரும்இயக்க விடயஉணர்வு அதனைச்**
**சொற்றிடுவர் அறிஞர்ஐ திகம்ஆகும் அளவை**
**என்னஇவண் தொகுத்துஉரைத்த காட்சிமுத லாய**
**எண்வகையில் சமயர்கொளல் இன்னஎன உரைப்பாம்.**

இப்பூமியின்கண் கடமானது இல்லை எனத் தோன்றுகின்ற கடத்தின் அபாவ ஞானமே அபாவப் பிரமாணமாம் (அனுபலப்திப் பிரமாணம்). ஆயிரம் என்னும் எண்ணில் ஒரு நூறு என்னும் எண் உண்டு என்கின்ற ஞானமே சம்பவப் பிரமாணமாம். இந்த மரத்தில் யட்சன் இருக்கின்றான் என்று பிறர் கூற, அதனால் மற்றவர்க்கு வருகின்ற யட்ச ஞானத்தை ஐதிகப் பிரமாணம் என்று அறிவுடையோர் கூறுவர். இங்கே பிரமாணங்கள் என்று தொகுத்துக்கூறிய பிரத்தியட்சப் பிரமாணம் முதலிய எண் வகையில் சமயவாதிகள் கொள்ளுதல் இத்தன்மையானவாம்.

21. புகல்உலகா யதனுக்குக் காட்சிஒன்றே சைன
புத்தவைசே டியர்கள்தமக்கு இரண்டுஅனுமா னத்தோடு
உகல்அரும்சாங் கியர்க்குமூன்று உரையொடுநான் குவமை
யொடுநியாயர்க்கு அருத்தாபத்தி யொடுஐந்து ஆகும்
மிகுபிரபா கரற்குஆறுஆம் அபாவமொடு பாட்ட
வேதாந்தி கட்குஆகும் எனஅறிகதெரி வுற்று
இகல்அரும்ஒண் புராணிகர் கள்தமக்கு அளவை
எட்டுஆம்என்று உரைப்பர்சம் பவஐதிகங்கள் உடன்அன்றே.

உலகாயதன் என்று கூறுகின்ற சார்வாகனுக்குக் காட்சி எனும் ஒன்று மட்டும் பிரமாணம் ஆகும். சைனர், பௌத்தர், வைசேடியர் என்பவருக்கு அனுமானப் பிரமாணத்தோடு இரண்டாகும். சைவரோடு சாங்கியர்க்கு ஆகமப் பிரமாணத்தோடு மூன்று ஆகும். நியாயவாதிக்கு உவமானப் பிரமாணத்துடன் நான்கு ஆகும். மேன்மை மிக்க பிரபாகரர்க்கு மேற் கூறிய நான்கு பிரமாணத்தோடு அருத்தாபத்தியும் கூடி ஐந்தாகும். பாட்டனுக்கும் வேதாந்திக்கும் அபாவ அளவையுடன் ஆறு ஆகும். நல்ல புராணிகர்கள் தமக்கு மேற்கூறிய அளவையொடு சம்பவப் பிரமாணம், ஐதிகப் பிரமாணத்தையும் சேர்த்து எட்டு விதம் என்று பிரமாணங்களைக் கூறுவார்கள்.

## திருக்கு விவேகம்

22. திருந்திய வேதாந்தநூல் இயம்புருவ திருக்குத்
திருசியம்என்று இருபொருள் அங்குஅவற் றின்முதல்
திருக்கில்வரைந் திடுவசுவகதம்தன் சாதிவிசா திகளாம் மற்றவை
மூன்றினுக்கும் உதாரணம் முறையே மொழியின் விரிந்தநிழல்
தருநெடும்பூம் பனைமரம்ஒன் றிற்கு ஞிமிறினங்கள்
புக்குமுகூத்து உழுது பெருகுறு தேன்

**அருந்துநறு மலர்முதல் ஆயினவும் வேறு உள்ள**
**அணிமரமும் கல்முதலா யினவும் போலாமால்.**

திருத்தமாய் உள்ள வேதாந்த நூல்களால் கூறப்படுவன அறிவு (திருக்கு) என்றும் அறிபடும் பொருள் (திரிசியம்) என்றும் இருவகைப்படும். அவ்விரண்டு பொருள்களில் முதலில் திருக்குப் பொருளில் இருந்து நீக்கப்படுவன, சுவகத பேதம், சசாதி பேதம், விசாதி பேதம் என்பன. முறையே அம்மூன்றிற்கும் சான்று கூறும் இடத்து, பரந்த நிழல் தருகின்ற நீண்டு உயர்ந்த அழகிய கிளைகளை உடைய மரத்திற்கு வண்டுக் கூட்டங்கள் உள்ளே சென்று மலரும் பக்குவத்தில் உள்ள அரும்பைத் தன் முகத்தில் உள்ள மூக்கினால் கீறி அதன் மூலம் பெருகிவரும் தேனை அருந்தும் படியான நறுமணப் பூக்கள் முதலியனவும், அம்மரத்திற்கு வேறாய் உள்ள அழகிய மரமும் கல் முதலியனவும் போலவாம். கூறப்பட்ட மரம் ஒன்றிற்கு இலை, மலர்,காய், கனி முதலாயின சுவகத பேதமாம். அந்த மரத்திற்கு வேறாக அது போல மற்றொரு மரம் இருத்தலே சசாதிய பேதமாம். அம் மரத்திலும் வேறான இயல்புடைய கல், மண் முதலாயின விசாதிய பேதமாம்.

**23. நிரவயவம் ஆதலினா லும்சத்து வேறு**
**நிகழாமை யானும்இறை தனக்குமுதல் நடுவுஇன்று**
**ஒருவுறுக இவ்உலக காரணமாம் மாயை**
**உண்மையினால் இறுதியதுஇல் என்பதுஎன்கொல் என்னில்**
**வரைவுதரு சித்திரிகன் சித்திரசத் தியைப்போல்**
**மாயையும்சின் மாத்திரமாம் பிரமத்தின் வேறாய்த்**
**தெரிவதுஇலா மையின்என்றும் சச்சிதா னந்த**
**சிவத்தினுக்கு விசாதிஇலை என்றுஉணர்க தெரிந்தே.**

அறிவு வடிவான பிரம்மத்திற்கு வானம் போல அவயவம் இன்மையாலும், அதற்கு வேறாக சத்துப்பொருள் விளங்காமையாலும் அந்த பிரம்மத்திற்கு சுவகத பேதமும், சஜாதிய பேதமும் இல்லை என்று தெரிந்து அவற்றை விட்டு விடுக. இவ்வுலகத்திற்குக் காரணமாய் உள்ள மாயை இருத்தலால், முடிவில் கூறிய விசாதிய பேதமும் இல்லை எனக் கூறல் எவ்விதம் என்று கேட்டால், ஓவியம் எழுதுகின்ற ஓவியனது சித்திர சத்தியானது அவனுக்கு வேறு இல்லாதது போல, உலகக் காரணமான மாயையும் அறிவே வடிவான பிரம்மத்திற்கு வேறாக விளங்காமையினாலே எப்போதும் சத்து சித்து ஆனந்த வடிவான பிரம்மத்திற்கு விசாதிய பேதமும் இல்லை என்று ஆராய்ந்து உணர்க.

**24.** **சுருதியினுள் ஏகமேவாத் துவிதம் என்னும்**
**சொற்குஇடையுள் ஏகம்எனும் சொல்அதனுக்கு அயிக்கம்**
**அரிதில்உணர் ஏவஎனும் இடைச்சொற்குத் தேற்றம்**
**அத்துவிதம் எனும்மொழிக்குத் துவிதவிலக் காகக்**
**கருதுபொருள் வருதலினால் இம்முறையே மாயா**
**கற்பனைகள் கடந்துநிர வயவம் ஆகி என்றும்**
**திரிதல்இல்சின் மயம்ஆகும் ஒருபிரமம் தனக்குத்**
**தெரித்தசுவ கதமுதலா யினமூன்றும் இலையே.**

சாம வேதத்தின்கண், “ஏகம் ஏவ அத்துவிதம்” என்று சொல்லப்படுகின்ற தொடரினுள் இருக்கின்ற ஏகம் என்னும் சொல்லுக்கு சீவப்பிரம்ம ஐக்கியமும், அருமையாய் உணர்தற்கு அரிய ஏவ என்னும் நடுவில் இருக்கும் சொல்லிற்கு நிச்சயமும், அத்துவிதம் என்னும் சொல்லிற்கு இரண்டாவது பொருள் இல்லை என்று ஆராய்ந்து அறிதற்கு உரிய பொருள் வருவதால், இம்முறையே மாயா கற்பிதங்களை இயல்பாகவே நீங்கி நிரவயவமாய் எக்காலத்தும் மாறுதல் இல்லாத சித்து மயமாய் உள்ள ஒப்பற்ற பிரம்மத்திற்கு முன் கூறிய சுவகத முதலிய பேதங்கள் மூன்றும் இல்லை என்பதாம்.

**25.** **அத்தியா ரோபம்அப வாதம்என இரண்டாய்**
**அறைகுவர் கற்பிதம்அத்தி யாரோபம் உள்ள**
**சுத்திஊடு இலாதஇர சதம்விளைத்தல் போலச்**
**சொல்பிரம சத்தின்இலா உலகதுகற் பித்தல்**
**எய்த்துஇதுதான் வெள்ளிஅதுஅன்றுஇப் பிஎனல்போல் ஓர்ந்து**
**இறைமெய் பொய்உலகம் எனத் தெளிதல்அப வாதம்**
**மெய்த்தபொருள் அறியும்இலக் கணம்மூன்றாம் அவைதாம்**
**விளங்குஅதத் துவாவிருத்தி தடத்தமொடு சொரூபம்.**

அத்தியாரோபம் எனவும் அபவாதம் எனவும், யுத்தி இரண்டு என அறிஞர் கூறுவர். அத்தியாரோபம் எனப்படுவது உள்ள கிளிஞ்சலில் இல்லாத வெள்ளியை உள்ளதாகக் கற்பித்தல் போல, அதிட்டானமாகக் கூறும் பிரம்ம சைதன்னியத்தில் இல்லாத உலகம் உள்ளதாகக் கற்பித்துக் கூறுதலாம். அபவாதமாவது, ஆராய்ந்து இது சற்றும் வெள்ளியன்று கிளிஞ்சலே உள்ளது எனத் தெளிந்தாற் போல, சுருதியுத்தி அனுபவம் மூலம் விசாரித்து, பிரம்மம் மெய் உலகம் பொய் என்று ஐயம் திரிபு அறத் தெளிவாக அறிதலாம். இங்ஙனம் மெய்யாக உள்ள பிரம்மப் பொருளை அறிதற்கு ஏதுவாய இலக்கணம் மூன்றாம். அவை அதத்துவாவிருத்தி, தடத்தம், சொரூபம் என விளங்கும்.

26. **ஆகமுத லனநேதி அதுசெய்து நின்ற**
**ஆர்உயிரை* அறிவித்தல் அதத்துவா விருத்தி**
**சாகைநுனி மதிஉளதுஎன்று உணர்த்தலின்பூ தாதி**
**சகம்ஆய காரணம்கொண்டு அறிவுஉணர்த்தல் தடத்தம்**
**மாகனலி விளங்குகதிர்ச் சொரூபன்எனல் போல்ஆன்**
**மாவின்நிச சொரூபம்இது எனஉணர்த்தல் சொரூபம்**
**நீகடவு சொரூபநிசம் சச்சிதா னந்தம்**
**நித்தியம்பூ ரணம்ஆக நீநினைந்து கொள்ளே.**

அம்மூன்றனுள், சரீரம் முதலான அநான்ம பொருள்களை இது ஆன்மா அன்று என முறைப்படி நீக்கி, நீங்காது நிலைத்து நிற்கும் ஆன்மாவை அறிவித்தலே அதத்வாவிருத்தி இலக்கணம். இம்மரக் கிளையின் நுனியின்கண் மூன்றாம் பிறைச் இருக்கின்றது எனக் கூறி, அக்கிளைகளை விட்டுச் சந்திரனைக் காட்டுவது போல், ஐம்பூதங்களையும் முதற்காரணமாக உடைய உலகத்திற்கு ஆன்மா அபின்ன நிமித்த உபாதான காரணமாய் இருக்கின்றது என்று கூறி, அதனைக் கொண்டு, ஆன்மாவை அறிவித்தல் தடத்த இலட்சணமாம். பெருமை மிக்க சூரியன் ஆயிரம் கதிர்களை வடிவமாக உடையவன் என்று கூறுதல் போல், ஆன்மாவின் உண்மை வடிவம் இதுவாம் என்று அறிவிப்பதே சொரூப இலட்சணமாம். நீ வினவும் ஆன்மாவின் உண்மை வடிவம் சத்து சித்து ஆனந்தம் நித்தியம் பூரணம் ஆக இருப்பது என்று நீ சிந்திக்கக் கடவாய்.

27. **மதித்தல்மதி யாமைநனவு ஆதிகளில் தனக்குஓர்**
**வாதைஇலாது உண்டுஎனல் சத்து அவத்தைஅ னைத்தினுமே**
**உதித்தவிட யங்களைநின்று அறிந்திடுதல் சித்தாம்**
**உவப்பினுக்கு விடயமாம் தன்மைஆ னந்தம்**
**திதித்தசதோ திதநித்தம் அனைத்தினும்சா தகமாம்**
**திறத்தினால் அனைத்தினும்சம் பந்தநிறைவு எனவே**
**விதித்திடுக உயிர்சச்சி தானந்த மயமேல்**
**விளங்கியதுஇல் அவற்றுள்ஆ னந்தம்எங்கும் எனினே.**

ஒன்றினை அறிதல், ஒன்றினை அறியாமை என்பவற்றிலும், காமாதி முதலிய ஆசைகள் தோன்றும் இடத்தும், தோன்றா இடத்தும், சாக்கிரம் முதலிய

* ஆர்உயிர் : ஆன்மா.

அவத்தைகளிலும், தனக்கு எந்த விதமான கேடும் இன்றி இருக்கின்ற தன்மையே ஆன்மாவின் சத்து வடிவமாம். சாக்கிரம் முதலிய அவத்தைகளிலும் தோன்றுகின்ற சப்தம் முதலிய பொருள்களை மாறாமல் இருந்து அறிவதே ஆன்மாவின் அறிவு வடிவமாம். பரமப் பிரீதிக்கு விடயமாவதே ஆன்மாவின் ஆனந்த வடிவமாம். நிலை பெற்ற சதோதயமாக விளங்குவதே ஆன்மாவின் அழியா (நித்திய) வடிவமாம். கற்பிக்கப்படும் பொருள் எல்லாவற்றிற்கும் நிலைக்களமாய் (அதிட்டானம்) இருக்கும் தன்மையினால், கடத்திற்கு மண் போல, கற்பிக்கப்படும் பொருள் அனைத்திலும் முழுமையாய்க் கூடி இருப்பதே ஆன்மாவின் பூரண வடிவம் என்று ஆராய்ந்து அறிக. ஆன்மா சச்சிதானந்த வடிவமாய் இருக்குமானால் அவற்றுள் ஆனந்தமானது எப்பொழுதும் விளங்குதல் இல்லையே (அதனால் ஆன்மா ஆனந்த வடிவம் எனல் உண்மையா) என்று வினவினால்.

**28. வெம்மைஒளி உருவுஆய அழல்விளக்கில் ஒளியே**
**விளங்கியிடும் புனல்இடத்தில் வெம்மையே விரியும்**
**வெம்மைஒளி இரண்டும்எழும் விறகினில்அவ் வகைபோல்**
**விமலசத்து ஒன்றேதிகழும் கல்முதலாம் அவற்றின்**
**மெய்மைதவிர் புத்தியது தமோகுணத்தின் மூட**
**விருத்தியினும் இராசதத்தின் கோரவிருத் தியினும்**
**மெய்மையொடு சித்துஆகும் சத்துவத்தின் சாந்த**
**விருத்தியினில் சச்சிதா னந்தங்கள் தோன்றும்.**

வெப்பமும் பிரகாசமும் ஆகிய இரண்டையும் அக்கினி வடிவமாக உடையது. அவ்விரண்டனுள் விளக்கின்கண் பிரகாசமே மேலிட்டு விளங்குவதாம். வெந்நீரின் கண் வெப்பம் ஒன்றே மேலிட்டு வியாபித்திருக்கும். விறகின்கண் வெப்பம், பிரகாசம் ஆகிய இரண்டும் மேலிட்டு நிற்கும் (அங்ஙனமே பிரம்மமும், சத்தும்சித்தும் ஆனந்தமும் ஆகிய மூன்றையும் வடிவமாக உடையதாம்.) அம்மூன்றனுள், கல் முதலியவற்றில் (கல் இருக்கின்றது மண் இருக்கின்றது என) பரிசுத்தமான சத்து ஒன்றே விளங்குவதாம். உண்மை வடிவம் இல்லாத புத்தியின்தமோ குணத்தின் மூடவிருத்தியிலும் இராசத குணத்தின் கோரவிருத்தியிலும் (நான் இருக்கிறேன், நான் அறிகின்றேன் என) சத்தும் சித்தும் விளங்குவனவாம். சத்துவ குணத்தின் சாந்த விருத்தியின்கண் சத்து சித்து ஆனந்தமாகிய மூன்றும் விளங்குவனவாம். (ஆன்மா சத்து வடிவமாகவும், சித்து வடிவமாகவும் இருப்பதன்றி ஆனந்த வடிவமாகவும் இருப்பதாம்).

**29. ஆதலினால் ஆனந்த மயம்ஆம் ஆன்மாஅவ்**
**ஐந்தினுக்கும் உபாதிஉள அவைமுறையே மொழியின்**
**பேதம்உறும் சத்துமூன் றாம்விவகா ரிகம்பின் பிராதி**
**பாசிகம் பாரமார்த்தி கசத்துஎன வே**
**மூதுணர்வில் சுழுத்தியில்தோன் றாதுநனவு உற்று**
**முத்திஉறும் அளவும்உறும் கடாதிமுதல் அதுவாம்**
**போதுகன வினில்தோன்றி அழிவதுஇடை அதுவாம்**
**பொன்றாத பிரமசத் தேஇறுதிஅதாம் அன்றே.**

ஆதலினால் ஆன்மா ஆனந்தமயம் எனப்படும். மேற்கூறிய சத்து சித்து முதலிய ஐந்து இலக்கணமும் உபாதியால் முரணாகத் தோன்றுகின்றன. (ஒரு பொருளைப் பல பொருள் போல தோன்றச் செய்வதற்கு ஏதுவாய் இருப்பது உபாதியாம்.) சத்தின் பேதங்கள் முறையே வியாவகாரிக சத்து, பிராதிபாசிக சத்து, பாரமார்த்திக சத்து என மூன்றாம். பகுத்துணர்வு சற்றுமின்றிய சுழுத்தி அவத்தையில் தோன்றாது, விழித்து எழுந்தவுடன் சாக்கிர அவத்தையில் பொருந்தித் தோன்றி முத்தி எய்தும் அளவும் இருக்கின்ற, கடம் படம் முதலியவற்றை உண்மையெனக் கொள்வது, வியாவகாரிக சத்து எனப்படுவதாம். தொடர்ச்சியின்றி வந்து போவதை இயல்பாக உடைய சொப்பனத்தைப் போல பிரதிபலித்து அழிவனவற்றை உண்மையாகக் கொள்வது, பிராதிபாசிக சத்து எனப்படுவதாம். கெடுதல் இல்லாது விளங்குகின்ற, சத்தே வடிவான, பிரம்மமே பாரமார்த்திக சத்தாம்.

**30. சீவனொடுஈ சன்கூடத் தன்பிரமம் என்னச்**
**சித்துநான்கு ஆம்குடநீர் கதுவுறும்வெண் மீன்வான்**
**தூவுபனி நீர்பிம்பம் அனுமிதஆ காசம்**
**சொல்கடஅ வச்சின்னஆ காசமொடு மாவான்**
**மேவும்இவை அவற்றினுக்குத் திட்டாந்த முறையாம்**
**விடயமொடு பிரமம்வா சனைமுக் கியம்பின்**
**ஏவுநிச ஆன்மாவோடு அத்துவிதம் வித்தை**
**எனும்இவற்றின் பெயரால்எண் வகைப்படும் ஆனந்தம்.**

சித்தானது, சீவன் ஈசுவரன் கூடஸ்தன் பிரம்மம், என நான்கு விதம் ஆகும். குடத்து நீரில் பிரதிபிம்பித்துள்ள, வெண்மையான நட்சத்திரங்களை உடைய, ஆகாசமும், குளிர்ந்த நீரையுடைய, மேகத்தின்கண் பிரதிபிம்பித்துள்ள, அனுமானத்தால் அறியும் ஆகாசமும், கடத்தோடு கூடிய ஆகாசமும், மகா ஆகாசமும், எனப் பொருந்திய இவை நான்கும்

மேற்கூறிய சீவாதி நான்கினுக்கும் முறையே சான்றுகளாம். ஆனந்தமானது விடயானந்தம், பிரம்மானந்தம் வாசனானந்தம், முக்கியானந்தம், நிசானந்தம், ஆன்மானந்தம், அத்துவிதானந்தம், வித்தியானந்தம் எனும் பெயர்களால் எண் வகைப்படும்.

**31. மாதுமுதல் விடயஊதி யங்கள்தமில் தோன்றி**
**வரல்விடயா னந்தம்கண் படையில் தோன்றல்**
**ஓதுபிர மானந்தம் துயில்ஒழிவில் தோற்றம்**
**உடையதுதான் வாசனா நந்தம்கேடு இன்பம்**
**ஆதல்இலா நொதுமல்மதி தோன்றுதல்முக் கியமாம்**
**ஆனந்தம்ம னோலயயோ கத்தினில்வந்து உதித்தல்**
**ஏதம்அறுநி சானந்தம் பிரியவிட யத்துள்**
**யான்பிரியன் எனத்தோன் றுதல்ஆன்மா னந்தம்.**

மனைவி மக்கள் முதலிய விடயங்களை அடைவதால் தோன்றும் ஆனந்தம் விடயானந்தமாம். சுழுத்தி அவத்தையில் (ஆழ்ந்த நித்திரையில்) தோன்றும் ஆனந்தம் பிரம்மானந்தமாம். நித்திரை தெளிந்தும் தெளியாதவிடத்தும் விளங்கும் ஆனந்தம் வாசனானந்தமாம். விருப்பு வெறுப்பு இல்லாத சமபாவனையோடு கூடிய புத்தியில் தோன்றும் ஆனந்தம் முக்கியானந்தமாம். யோகப் பயிற்சியினால் மனம் ஒடுங்கும் இடத்துத் தோன்றும் ஆனந்தம் நிசானந்தமாம். மனைவி மக்கள் முதலிய பிரியமாய் உள்ள பொருள்களுள் யானே எனக்கு மிகவும் பிரியமானவன் என உணர்ந்த விடத்து விளங்கும் ஆனந்தம் ஆன்மானந்தமாம்.

**32. விரியும்உலகு அனைத்தும்பொய் மெய்ம்மைதான் என்னும்**
**விவேகத்தில் தோன்றுவதே அத்துவிதா னந்தம்**
**அரியமறை முடிவாகும் வாக்கியஞா னத்தால்**
**ஆதல்அது வித்தியா னந்தம்என அறிக**
**உரியனமுன் இன்மையொடு பின்இன்மை அன்றி**
**ஒன்றுஒன்று ஆகாமைஎன்றும் இன்மைஎன நான்காய்த்**
**திரியும்அ பாவங்கள்இவை நித்தியத்துள் புகாத**
**திறத்தனவாம் பூரணத்தும் உறாதனமூன்று ஆகும்.**

மாயையின் காரியமான, விரிந்துள்ள உலகமனைத்தும் பொய்யாம். ஆன்மாவாகிய தானே சத்தியமாம், என்னும் ஞானம் உண்டாகும் இடத்து விளங்கும் ஆனந்தம்

அத்துவிதானந்தமாம். உபநிடதங்களில் உள்ள அரிய தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களால் உண்டாகும், சீவப்பிரம்ம ஐக்கிய ஞானத்தால் தோன்றி விளங்கும்; ஆனந்தம் வித்தியானந்தமாம். இவ்வாறு ஆனந்தங்களின் வகைகளை அறிவாயாக. முன்னின்மை (பிராகபாவம்), பின்னின்மை (பிரத்துவம்சாபாவம்), ஒன்றில் ஒன்றாகாமை (அந்நியோந்நியாபாவம்), என்றும் இன்மை (அத்தியந்தாபாவம்) என அபாவம் நான்காம். இந்நான்கு அபாவங்களும் நாசம் உடையனவாய் இருத்தலால், நித்தியத்தில் சேராதனவாம். பூரணத்துள்ளும் பொருந்தாதனவாகிய பரிச்சேதங்கள் மூன்று விதம் ஆகும். (நான்கு அபாவங்கள் இன்றி இருப்பதே நித்தியம். ஆதலால், நான்கு அபாவங்களை விளக்குகிறார். பிரம்மம் அநாதியாய் இருப்பதால் முன்னின்மையும், நாசமற்றதாய் இருப்பதால் பின்னின்மையும், ஏகமாய் இருப்பதால் ஒன்றில் ஒன்றாகாமையும், வியாபகமாய் இருத்தலால் என்றுமின்மையும் நித்தியத்தில் சேராதனவாம்).

**33. உரைத்துஅவை தாம்யாவை எனில்ஒரு காலத்து உண்டுஇன்று**
**ஒருகாலத்து எனும்காலப் பரிச்சேதம் உடனே**
**தெ ரித்தஒரு தேயத்துஉண்டு ஒரு தேயத்துஇலைஎன்**
**தேயப்பரிச் சேதமும் ஒன்றுஆம் ஆகாதுஎன் னும்**
**கருத்தில் வருவத்துபரிச் சேதமும் ஆம்என்னக்**
**கருதிடுக இனிச்சித்தின் விரிவு ஆகும்என முன்**
**விரித்திடும்அச் சீவாதி கட்குநா மாதி**
**விவகார கற்பனை ஈண்டுஎடுத்து மொழிகுதுமால்.**

முற்கூறிய பரிச்சேதங்கள் யாவையெனின், ஒரு பொருள் ஒரு காலத்து உண்டு, பிறிதொரு காலத்து இல்லை என்பதே கால பரிச்சேதமாம் (பரிச்சேதம் = முடிவு அல்லது எல்லை உடையது). ஒரு பொருள் ஒரு தேசத்து உண்டு, பிறிதொரு தேசத்தில் இல்லை என்பதே தேச பரிச்சேதமாம். ஒரு பொருள் பிறிதொரு பொருள் ஆகாது என்பதே வஸ்து பரிச்சேதமாம். காலத்தால் அந்தமுடையது கால பரிச் சேதம் உடையதாம். தேசத்தால் அந்தம் உடையது தேச பரிச்சேதம் உடையதாம். பொருளால் அந்தம் உடையது வஸ்து பரிச்சேதம் உடையதாம். (அந்தம் = முடிவு) பிரம்மம் உற்பத்தி நாசமின்றி இருத்தலால், கால பரிச்சேதம் இல்லாததாம். எங்கும் இருத்தலால் தேசபரிச்சேதம் இல்லாததாம். மாயாப் பிரபஞ்சம் அனைத்துமாய் இருத்தலால், வஸ்து பரிச்சேதம் இல்லாததாம். இனிமேல் சித்தின் பேதமாம் என்று முன்னர் கூறிய சீவ ஆதிகளின் பெயர் முதலிய விவகார கற்பனைகளை விளங்குமாறு எடுத்துக் கூறுவோம்.

**34. சாற்றரிய சீவபேதங்கள் முறைவி சுவன்**
**தைசதன்பின் பிராஞ்ஞன்எனப் பகர்ந்திடுவர் அவருள்**
**வேற்றுமைசெய் தூலஉடல் வியட்டிஅபி மானி**
**விவகாரி கன்புத்தி *கதுவுறுசை தன்யன்**
**மாற்றரிய சிதாபாசன் விட்சேப ரூபன்**
**வருபிரமாத் துருநுவல் கத்துருவொடு போத்துருவே**
**தோற்றியிடும் விஞ்ஞான மயன்குடும்பி சரீரி**
**துவம்பதமுக் கியன்முதல் ஆயினவிசு வன்நாமம்.**

சீவன் ஆனவன் விசுவன், தைசதன், பிராஞ்ஞன் என மூன்று வகையாக விளங்குவன். அம்மூவருள் சாக்கிர அவத்தையின் அபிமானியாய் உள்ள விசுவனுக்கு, தூலசரீர வியட்டி அபிமானி, வியாவகாரிகசீவன், புத்திப் பிரதிபிம்ப சைதன்னியன், சிதாபாசன், விட்சேப ரூபன், பிரமாத்துரு, கர்த்துரு, போத்துரு, விஞ்ஞானமயன், குடும்பி (சம்சாரி), சரீரி, துவம்பத முக்கியார்த்தன் என்பன பரியாய நாமங்களாம். (ஒரு பதத்தின் அர்த்தத்தைத் தெரிவிக்கும் மற்றொரு பதம் பரியாய நாமம் ஆகும்).

**35. பெற்றஒரு சூக்குமமெய் வியட்டிஅபி மானி**
**பிராதிபா சிகசீவன் சொப்பனகற் பிதன்என்**
**மற்றவைதான் முதலாய தைசதன்தன் பெயராய்**
**வழங்குறுவர் காரணமெய் வியட்டிஅபி மானி**
**உற்றுவரும் அவித்தையோ பகிதன்கா ரியம்ஆம்**
**உபாதிகன்என் பனமுதல்ஆம் பிராஞ்ஞ நாமங்கள்**
**பற்றிவரு சீவான்மா அந்தரான் மாமேல்**
**பரமான்மா எனப்படும் ஆன்மவிதம் மூன்றுஆகும்.**

சூட்சும சரீர வியட்டி அபிமானி, பிராதிபாசிக சீவன், சொப்பன கற்பிதன் முதலாய் உள்ள பெயர்கள், சொப்பன அவத்தையின் அபிமானியாய் உள்ள தைசதனது பரியாய நாமங்களாம். காரண சரீர வியட்டி அபிமானி, அவித்தியோபகிதன், காரியோபாதிகன் முதலாய் உள்ள பெயர்கள், சுழுத்தி அவத்தையின் அபிமானியாய் உள்ள பிராஞ்ஞனது பரியாய நாமங்களாம். உபாதி காரணமாக ஆன்மாவின் பேதங்கள் சீவான்மா, அந்தரான்மா, மேலாகிய பரமான்மா எனும் மூன்றாம்.

---

** கதுவுறு = பிரதிபலித்தல்*

**36. காய்ந்துஉள இரும்பு போல்உடம்பு ஆதி**
**கலந்துஉறு குடும்பம்என் வழக்கில்**
**சார்ந்துஉளன் சீவான் மாஎனப் படுவான்**
**தாமரை இலையின்நீர் போலத்**
**தோய்ந்துஉள குடும்பப் பெருவிவ காரத்**
**தோய்வுஇலன் அந்தரான் மாவாம்**
**போந்துல கிற்குப் பரிதிபோல் சான்றாய்ப்**
**பொருந்தினோன் தான்பர மான்மா.**

தீயில் காய்ந்துள்ள இரும்பு போல், தேகம் குடும்பம் முதலியவற்றுள் யான் எனது என்னும் அபிமானம் உற்று, சம்சாரம் என்னும் விவகாரத்தில் சேர்ந்து இருப்பவன் சீவான்மா எனப்படுவான். தாமரை இலையின் நீர்போல சம்பந்தித் துள்ள குடும்பமாகிய பெரிய விவகாரம் அனைத்திலும் பொருந்தியும் அவற்றோடு சம்பந்தம் உறாதவனே அந்தரான்மா எனப்படுவான். தேகம் குடும்பம் முதலியவற்றுள் அபிமானத்தை விட்டு ஒழுகிவந்து, உலக விகாரங்களுக்கு சூரியன் சாட்சி மாத்திரமாக விளங்குதல் போல, தேக இந்திரியங்களின் விவகாரம் அனைத்திற்கும் சாட்சி மாத்திரமாக விளங்குகின்றவன் பரமான்மா எனப்படுவான்.

**37. நீர்விழுந்து ஒருவெங் கதிர்தடு மாறி**
**நின்றதுஎன்று உரைப்பது போலும்**
**கார்விரைந்து ஓட ஓடுகின் றதுதண்**
**கலைமதி என்பது போலும்**
**ஓர்வுஅரும் திரிவுஇல் போதஆன் மாவிற்கு**
**உடல்முதல் ஆகிய உபாதிப்**
**பேர்வரும் சீவ பாவனை உலகப்**
**பெருவிவ காரம்என்று அறியே.**

அசைகின்ற நீரின்கண் சூரியனது பிரதிபிம்பம் அசைகின்றதை அறியாது, சூரியனே நீரில் விழுந்து அசைகின்றான் என்று கூறுவது போலும், சந்திரன் ஓடாது இருக்க, மேகம் விரைவாக ஓடுவதை அறியாது, குளிர்ந்த கலைகளை உடைய சந்திரன் மேகத்துள் புகுந்து ஓடுகின்றான் என்று கூறுவது போலவும், அறிதற்கு அரிய, என்றும் மாறுதல் இல்லாத, அறிவு வடிவ ஆன்மாவிற்கு தூல சூக்கும காரணம் என்னும் சரீரத்திரய உபாதிகளால், விசுவன் தைசதன் பிராஞ்ஞன் என்னும் பெயர் உடைய சீவபாவனை

உலகில் பெரிய சம்சார விவகாரம் என்பதாக ஆன்மாவின் சம்சார கற்பனை இங்ஙனம் அறியத்தக்கது.

**38. அருவிராட் புருடன் இரணிய கருப்பன்**
**அந்தரி யாமிஎன்று ஈசன்**
**திரிவிதம் அவருள் தூல ஆகத்துச்**
**சமட்டிஆ கியஅபி மானி**
**விரிவுஉறும் வைசுவா நரன்என முதலாம்**
**விராட்பு ருடன்பெயர் ஆகும்**
**மருவுஉறும் இலிங்கம் எனும்உடல் சமட்டி**
**மானிமாப் பிராணனே அன்றி.**

ஈசுவரன், சமட்டி சரீரத்திரய அபிமானத்தால், விராட் புருடன், இரணிய கருப்பன், அந்திரியாமி என மூவகையாக விளங்குகின்றான். அம்மூவருள், தூலசரீர சமட்டி அபிமானி, எங்கும் வியாபித்துள்ள வைசுவானரன் முதலியன விராட் புருடனது பரியாய நாமங்களாம். பொருந்திய சூட்சும சரீர சமட்டி அபிமானி மகாப்பிராணன், இதுவன்றி. (குளகம்)

**39. சூத்தி ராத்மிகன் என்பெயர் முதலாகச்**
**சொற்றனர் இரணிய கருப்பற்கு**
**ஏத்துகா ரணம்ஆம் உடம்புஉறு சமட்டி**
**எனும்அபி மானிஅவ் வியத்தன்**
**வாய்த்தகா ரணம்ஆம் உபாதிகன் ஆனந்த**
**மயன்பர தேவதை பரமன்**
**ஆத்ததற் பதமுக் கியார்த்தன் என்பெயர்முன்**
**அந்தரி யாமி பெற்றிடுமே.**

சூத்திராத்மா என்று சொல்லப்படும் பெயர் முதலாக உள்ளவற்றை இரணிய கருப்பனுக்குப் பரியாய நாமங்கள் என அறிஞர் கூறுவர். துதிக்கத்தக்க காரண சரீர சமட்டி அபிமானி, அவ்வியக்தன், பொருந்திய காரணோபாதிகன், ஆனந்தமயன், பரதேவதை, பரமன், பொருந்திய தத்பத முக்கியார்த்தன் என்பதாகக் கூறுகின்ற பெயர்களை பரியாய நாமங்களாக அந்தரியாமி பெற்றிடுவன்.

**40. சித்திர படம்ஓர் பொருளொடும் கூடாத்**
**திகழ்வினில் தெளதுமே எனவும்**
**நெய்த்தகூழ் வருடக் கடிதமே எனவும்**
**நீல்நிறத்து இலாஞ்சிதம் எனவும்**
**பத்திஓ வியம்சேர்ந்து இரஞ்சிதம் எனவும்**
**படுதல்போல் பிரமமும் மாயை**
**வைத்தகா ரியங்கள் கடந்துஉறு நிலையில்**
**வயங்கும்சித்து எனும்பெயர் புனைந்தே.**

ஓர் ஓவியத் துணி ஆனது ஒரு வண்ணத்தோடும் சேராது தனித்து விளங்கும் இடத்து வெள்ளை ஆடை என்றும், நெகிழ்ச்சியை உடைய கஞ்சி பட்டமையால் கடித உடை என்றும், பின் நீல நிறம் கொண்டு அச்சுக் கட்டினால் ஓவியத்தின் அடையாள ஆடை என்றும், பின் வரிசையாக ஓவியம் எழுதி அமைத்தவுடன் இனிமையானது என்றும் கூறப்படுவது போல், பிரம்மமும் மாயையும் சேர்ந்து உண்டான காரியப் பிரபஞ்சங்களும் கடந்த நிலையில் பிரம்மத்திற்கு ஞான வடிவம் என்னும் திருநாமம் பொருந்தி விளங்கும்.

**41. அகிலகா ரணம்ஆம் மாயையை மருவி**
**அந்தரி யாமியாம் மாயை**
**சகலகா ரியம்ஆம் சூக்கும உடம்பு**
**சார்ந்துபொன் கருப்பன்என்று ஆகி**
**விகலம்இல் தூல உடம்பினை மேவி**
**விராட்டுஎன நிற்கும்என்று அறிவாய்**
**திகழ்உறு பிரமம் சித்திர படம்மேல்**
**சித்திரம் யாதுஎன வினவில்.**

உலகம் அனைத்திற்கும் காரணமாய் உள்ள மாயையைப் பொருந்திய போது அந்தர்யாமி என விளங்கும். மாயையின் காரியம் ஆன சூட்சும பூதங்களின் காரியமாய் இருக்கின்ற அனைத்து சூட்சும சரீரங்களையும் பொருந்தும் இடத்து இரணிய கருப்பன் என விளங்குவதாம். குறைவு இன்றிய தூல சரீரங்களையும் பொருந்தி இருக்கும் போது விராட் புருடன் என்று விளங்கி நிற்பதாம் என பிரம்ம வடிவத்தை அறிவாய். என்றும் ஒரே தன்மையாக விளங்கும் பிரம்மம், சித்திரத் துணி போல் இருந்தால் அதன்கண் சித்திரம் போல் இருப்பது யாது என வினவினால்.

42. விரிஞ்சனே முதலாம் சேதன மோடு
வெற்புஎழு வாய்அசே தனம்ஆய்ப்
பரந்துஉள உலகம் சித்திரம் என்பர்
பரம்பொருள் ஆம்ஒரு பிரமத்து
இருஞ்சடா சடம்ஆம் உலகது தோற்றம்
எவ்வணம் எனில்படந் தன்னில்
வரைந்தபல் நிறமாய்க் குளிர்முதல் மாற்ற
வல்லன அலதுகில் போலி.

மாயா உலகமான கற்பிதப் பொருள்களுக்கு நிலைக்களப் (அதிட்டானம்) பொருளாக உள்ள ஒப்பற்ற பிரமத்தின்கண், நான்முகன் முதலாக உள்ள அறிவுள்ள பொருள்களுடன், மேரு மலை முதலான அசையாப் பொருள்கள் ஆக விரிந்திருக்கின்ற உலகத்தைச் சித்திரமாம் என்று சான்றோர் கூறுவர். அந்தப் பரம்பொருளில் கற்பிதமாய் இருக்கின்ற உலகத்தின் தோற்றம் எவ்வாறானது எனில், ஒரு துணியில் பல நிறங்களால் வரைந்த சித்திரத் துணி, குளிர் முதலியனவற்றை மாற்றும் வல்லமை அற்ற போலித் துணி என்பது போலவாம்.

43. ஓர்வடிவு ஆகிக் குளிர்முதல் மாற்றும்
உண்மையாம் சித்திரபடம் போன்று
ஆர்வுற எழுதும் கிரிமுதல் ஆய
அதனொடுஒப் புஉறுகி லாவாபோல்
தேர்வுஅரும் பிரமத்து எழுந்துபற் பலஆம்
சீவர்கள் சித்தொடுஒப்பு ஆகப்
பார்முதல் ஒவ்வாச் சடங்கள்ஆ தலினால்
பரத்தில்ஆம் சடாசட உலகம்.

சித்திரமாக வரையப் பெற்ற போலித் துணியும், அச்சித்திரத்திற்கு ஆதாரமாய் இருக்கும் துணியும் ஒரே வடிவமாய் (ஒத்திருந்து) குளிர் முதலானவைகளை நீக்கத் தக்கதாய் இருப்பது போல, பார்ப்பவர்களுக்கு ஆர்வம் உண்டாகும்படி வரையப்பட்டுள்ள மலை முதலியன அந்த துணியோடு ஒப்பு ஆகாது. அதுபோல ஆராய்ந்து அறிதற்கரிய பிரம்மத்தில் கற்பிதமாய் வெவ்வேறாகத் தோன்றுகின்ற சிதாபாசரான சீவர்கள் அந்தப் பிரம்ம வடிவ சித்தோடு ஒப்பு ஆகத் தோன்றினும், பிருதிவி முதலிய சடப் பொருள் ஒப்பு ஆகாதனவாம். ஆதலினால் சடசித்து வடிவமாய் உள்ள உலகம் பிரம்மத்தில் சித்திரத்

துணியில் சித்திரம் போலக் கற்பிதமாம். (துணியில் வரையப்பெற்ற சித்திரங்கள் அத்துணியின் இயல்பை மாற்ற இயலாத கற்பிதம். அதுபோல பிரம்மத்தில் சடமான பூதங்களும் சீவர்களும் கற்பிதமே).

**44. இத்திறத்து ஈசன் முக்கிய குணங்கள்**
**எலாம்அறி தல்முத லனஆம்**
**கத்திருத் துவமோடு அகத்துருத் துவம்பின்**
**அன்னிதா கத்துருத் துவமே**
**அத்தன்மெய்ப் பிரபுத் துவவலி ஆக்கல்**
**அளித்தல்போக் குதல்நிய மனந்தான்**
**எய்த்திடல் அகற்றும் அனுப்பிர வேசம்**
**என்பன ஈசன்ஐந் தொழிலே.**

இத்தன்மை உடைய ஈசனின் சிறந்த குணங்களாவன: எல்லாவற்றையும் அறியும் தன்மை, எல்லாவற்றையும் ஆளும் தன்மை, எல்லாவற்றையும் நியமிக்கும் தன்மை, எல்லாவற்றையும் உள் இருந்து அசைக்கும் தன்மை, எல்லாவற்றையும் செய்யும் தன்மையுடன் எல்லா வலிமையும் உடைய தன்மையும் ஆம். ஈசுவரனின் உண்மையான சிறந்த சாமர்த்தியம், அன்பர்களுக்காக, ஒன்றை செய்யும் தன்மையும், ஒன்றைச் செய்யாத் தன்மையும், அதனைப் பின்னர் வேறு விதமாகச் செய்யும் தன்மையும் ஆகும். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகியன ஈசனின் ஐந்தொழில்கள் ஆகும்.

**45. நீங்கிய விகாரப் பிரமம்ஆம் ஈசன்**
**நிகழ்த்துமோ தொழில்பல என்னில்**
**பூங்கதிர் இச்சை இன்றியே வாரி**
**பொழிமழைக் கதிரினால் பொழிய**
**ஆங்குஅதின் நிழல்ஆய் பொருந்தி அந்நிழலை**
**அலர்முகி லால்மறைத்து அளித்தே**
**தூங்குஇம கரத்தால் வெங்கதி ரால்நீர்**
**தொலைத்ததைத் தன்னொடுஆக் குதல்போல்.**

நிர்விகாரப் பிரம்ம வடிவமான ஈசுவரன் ஐந்தொழில்கள் எங்ஙனம் செய்வான் என கேட்கில்? அழகிய சூரியன் இச்சை சற்றும் இன்றியே மழைக் கிரணத்தால் சலத்தைப் பெய்யச் செய்து, பின்னர் அந்த சலத்தில் தானே பிரதிபிம்பித்து, அந்தப் பிரதிபிம்பத்தை

மேக கிரணத்தால் மறைத்து, பொழிகின்ற தனது பனிக்கிரணத்தால் சலத்தை பாதுகாத்து, உஷ்ண கிரணத்தால் அந்த சலத்தைத் திரும்பக் கிரகித்து வாங்கிக் கொண்டு அப்பிரதிபிம்பத்தைத் தன்னுடன் சேர்த்துக் கொள்வது போலவாம்.

**46.** **போற்றுஇறை மாயா சத்தியோடு ஒன்றி**
**பொலிந்தசிற் பிரதானம் அதனால்**
**சாற்றரும் நிமித்த காரணன் ஆகித்**
**தகும்சடப் பிரதானம் அதனால்**
**ஆற்றுஉபா தான காரணன் எனநின்று**
**ஆக்கிய புத்திஆ திகளில்**
**தோற்றுபு சீவ ரூபமாய் வினையால்**
**சொற்றபோத் துருவென நின்றே.**

யாவராலும் துதிக்கத்தக்க பிரம்ம வடிவமான ஈசுவரனும், தன்மாயா சத்தியுடன் கூடிய சித்துப் பிரதானத்தால் நிமித்த காரணனாயும், சடப் பிரதானத்தால் உபாதான காரணனாயும் நின்று, அங்ஙனம் நின்ற அதனால் புத்தியாதிகளை சிருட்டித்து, அதில் தானே சீவ வடிவமாகப் பிரவேசித்துக் கருமத்தால் சுக துக்கங்களை அனுபவிக்கும் போக்தா என சொல்லப்பட்டு நின்று. (குளகம்)

**47.** **நியமசத் தியினால் போகபோத் துருவை**
**நியமம்செய்து உருத்திர உருவால்**
**மயம்உறு மாயா காரியம் சிதைத்து**
**வந்துஅருள் ஆரிய வடிவால்**
**அயர்வுஉறு சீவன் தன்னையே தன்னோடு**
**ஐக்கியம் ஆக்குவன் எனஅறிக**
**உயர்வுஉறு சமட்டி வியட்டிஎன் பனவால்**
**உயிர்இறை கட்குஉறும் பேதம்.**

நியம சத்தியினால் போகத்திற்குரிய சீவர்களை நியமப்படி படைத்து அளித்து, உருத்திர வடிவத்தால் மாயா வடிவமாகப் பொருந்தியுள்ள அந்தக் காரியங்களை அழித்து, குரு மூர்த்தமாக எழுந்தருளி வந்து, துன்பம் அடைந்துள்ள அந்தச் சீவனை தன்னோடு ஐக்கியம் செய்து கொள்வான் என்று ஈசுவரனது ஐந்து தொழில்களையும் அறிவாயாக. மேன்மையான சமட்டி வியட்டி என்பவைகளால் சீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதம் வந்தது என அறிக.

48. மிகுமரப் பன்மை *தண்டலை எனல்போல்
மிகும்உயிர் எலாமும் நான்எனும்ஓர்
தகும்அபி மானம் இறைசமட் டியதாம்
தனித்தனி மரம்பெயர் கொளல்போல்
பகும்உடல் தோறும் வேறுவேறு ஆகப்
படும்அபி மானம்ஓர்ந்து உரைப்பில்
தொகும்உயிர் வியட்டி உருவம்என் குவர்மேல்
தொம்பத இலக்கியம் உரைப்பாம்.

மிகுதியான பல மரங்களைக் காடு என்று சொல்லுவது போல், ஒப்பற்ற ஈசன், சீவர் அனைவரையும் நான் எனக் கருதுகின்ற ஒப்பற்ற அபிமானம் ஈசுவரனின் சமட்டி வடிவமாம். அக்காட்டில் வேறு வேறாக மரங்களின் பெயர்களைப் பிரித்து அறிந்து கொள்வது போல், வெவ்வேறாய்ப் பிரிந்திருக்கும் சரீரங்கள் தோறும் வெவ்வேறாய் இருக்கும் அபிமானத்தை ஆராய்ந்து கூறும் இடத்து அது சீவனின் வியட்டி வடிவமாம் என்று பண்டிதர்கள் கூறுவர். இனிமேல் துவம்பத இலட்சியார்த்ததைக் கூறுவோம்.

49. சீவன் ஒன்றிடு மூவகைஅ திட்டானன்
சேதனன் அந்தரி யாமி
ஆவலில் அனுசந் தாத்துருச் சுயஞ்சத்
தார்த்தனோடு அவச்சின்ன சீவன்
தாவரும் பார மார்த்திகன் துரியன்
சான்றினன் பிரத்திகான் மாவால்
ஏவம்இல் தொம்பதத்து இலக்கி யார்த்தன்
என்பகூ டத்த நாமங்கள்.

சீவன் என்பவன் விசுவன், தைசதன், பிராஞ்ஞன் என்று மூவகையாகப் பொருந்தும் அபிமானங்களுக்கும் அதிட்டானன். சேதனன், அந்தரியாமி, அவா இன்றிய அனுசந்தாத்திரு, சுயஞ்சத்தார்த்தன், அவிச்சின்ன சீவன், கேடில்லாத பாரமார்த்திகன், துரியன், சான்றினன், பிரத்தியகான்மா, குற்றமற்ற தொம்பத இலட்சியார்த்தன் முதலியவை கூடத்தனது (சீவனுக்கு) பரியாய நாமங்களாம்.

* தண்டலை : காடு

**50. ஈசன்ஒன் றிடும்மூ வகைஅ திட்டானன்**
**இயம்பரும் ஒருபரப் பிரமம்**
**பாசம்இல் பரதத் துவம்பர மான்மாப்**
**படிஇலா விசுத்தசித்து அன்றிப்**
**பேசுதற் பதலக் கியார்த்தன் என்பனமுற்**
**பெறுபரி யாயநா மங்கள்**
**தேசுறு பிரமம் தனக்குஎன உரைப்பர்**
**திருந்துநூல் தெரிதரும் புலவர்.**

சொல்லற்கு அரிய ஒப்பற்ற பரப்பிரம்மம், வைசுவானரன், சூத்திராத்மா, அந்தரியாமி என்னும் மூவகை ஈசுவர அபிமானங்களுக்கும் அதிட்டானம் ஆகும். பாசமற்ற பரதத்துவம், பரமான்மா, குணாதீதமான விசுத்த சித்து, இவையன்றியும், வேத முடிவில் சொல்லப்படும் தத்பத இலக்கியார்த்தன் என கூறப்படுவன, சதோதயமாக விளங்கும் பிரம்மத்திற்குத் தொன்று தொட்டு வழங்கும் பரியாய நாமங்கள் என திருத்தமான வேதாந்த சாத்திரங்களை தேர்ந்த அறிஞர் கூறுவர்.

**51. வடிவொடு பெயரால் குடம்மு தலாக**
**மண்பல வகைப்படும் அதுபோல்**
**சுடுபசும் பொன்னே செய்கையால் பலவாம்**
**சுடர்இழை உருவுகொள் வதுபோல்**
**படிஅறு சித்தேமுன் சொல்சீ வாதி**
**பலவும் ஆம்என முதலாக**
**விடல்அரும் அறிஞர் நூல்பல திருக்கு**
**விவேகம்என்று இயம்புறும் அன்றே.**

மண் ஒன்றே உருவம் பெற்று குடம் முதலிய பல பெயர்களோடு காணப்படுவது போல், தூய்மையான தங்கம் ஒன்றே புடமிட்டு உருக்கிய வேலைத் திறத்தால் பலவிதமாகி ஒளிவிட்டு நின்ற நகைகளின் வடிவத்தை அடைவது போல, மாறுபாடு இல்லாத சித்து ஒன்றே முற்கூறிய சீவன் முதலிய பல வேறுபாடான விவகார கற்பனைகளாய் உள்ளது என்று இவ்விதமாய் ஆராய்ந்து உணர்வதை திருக்கு விவேகம் என்று ஆத்ம ஞானத்தை உடைய ஞானிகள் இயற்றிய வேதாந்த நூல்கள் பல கூறும்.

## திருசிய விவேகம்

52. இந்துவினை அநாதி அடைந்ததை முழுதும்
மறையாமல் இந்து தன்னால்
அந்திறனை ஒளிர்வித்துக் கொள்க ளங்கம்
எனஎனை யான்அறியேன் என்னும்
முந்தஉலக விவகா ரம்தனில் உயிரை
அடைந்துஅதனை மூடாது என்றும்
அந்தஉயி ரால்அறி யப்பட் டும்அனல்
தம்பிக்கும் மந்தி ரம்போல்.

சந்திரனை அநாதியாகப் பொருந்தி, அச்சந்திரனை முழுதும் மறைக்காமல் சிறிது மறைத்து, அந்தச் சந்திரனால் தனது மறைக்கும் தன்மையை விளங்கும்படி செய்கின்ற களங்கம் போல், நான் என்னை அறியேன் என்று கூறப்படுகின்ற உலக விவகாரத்தில், சீவனை அநாதியாய்ப் பொருந்தி அந்தச் சீவனை முற்றும் மறைக்காது, எப்பொழுதும் அந்தச் சிவனால் அறியப்படுவதாயும், அக்கினி பிரகாசத்தோடு கூடி இருக்க, அதன் குணமான சுடும் தன்மையைக் கட்டுப்படுத்தும் மந்திரசத்தி எங்ஙனமோ அதுபோல நின்று. (குளகம்)

53. விளங்குறும் ஆன்மா உருவம் அல்லாமல்
ஆன்மாவின் வேறாய்த் தோன்றாது
உளங்கொள் வியோமாதி காரியங் கள்தமைத்
தோன்றாமல் ஒடுக்கி நின்றும்
துளங்கல்அக டிதகடனை எனும்ச மர்த்தை
ஆகியுமே தோன்றா நின்று
*அவளங்கள்தரு காரண மாய்அது ஆகும்
திரிசியமாம் மாயா சத்தி.

சதோதயமாக விளங்குகின்ற ஆன்ம சொரூபம் ஆகாததும், அவ்வான்மாவிற்கு வேறு பொருளாக நின்று தோன்றாமலும். ஆராய்ந்து அறிந்தபோது ஆகாயம் முதலிய தனது காரியங்களை தோன்றச் செய்தும், மீண்டும் அவை தோன்றாதவாறு அவற்றைத்

* அவளம் = அர்த்தம்

தன்னுள் ஒடுக்கிக் கொள்வதாயும், மாறுதல் உடையதும் அகடிதகடனா(நிகழாததை நிகழச்செய்யும்) சாமர்த்தியம் உடையதாயும் காணப்பட்டு, சர்வ அனர்த்தங்களையும் தருவதற்குக் காரணமாய் இருப்பது எதுவோ அதுவே திருசிய வடிவ மாயா சத்தியாம்.

**54.** **அனையதுஒரு மாயை இலக்கணம் அசத்துச்**
**சடம்துக்கம் அநித்தம் கண்டம்**
**எனும்இவை உள்முயல் கோடு முதல்அசத்துச்**
**சடவுருக்கல் எழுவாய் புத்தி**
**தனைஅடையும் கோரமொடு மூட விருத்திகள்**
**துக்கம் தபுமெய் ஆதி**
**முனம்உரை செய்அநித்தம் கண்டிதம் கால**
**பரிச்சேதம் முதல ஆகும்.**

அத்தன்மையது ஆன மாயையினது ஒப்பற்ற இலக்கணம் ஐந்து விதமாம். அவை அசத்து, சடம், துக்கம், அநித்தம், கண்டம் என்று கூறப்படும். அவற்றுள் என்றும் இல்லாத முயற்கொம்பு, வான் மலர், மலடி மகன் முதலியன அசத்தின் வடிவம். கல், கட்டை முதலியன சடவடிவம். புத்தியைச் வந்து அடைகின்ற கோர மூட விருத்திகள் துக்க மயமாகும். தோன்றிக் கெடுகின்ற தேகம் முதலியன அநித்தமாம். கால பரிச்சேதம், தேச பரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் என்பன கண்டம் என்று சொல்லப்படும்.

**55.** **பின்னமொடு அசத்துச் சாவய மும்எதிர்**
**மறையும்அவை பிரிந்து தம்மின்**
**மன்னியவும் மொழிந்து அநிர்வாச்சியம் ஆகும்**
**நவவிதம் அம்மாயை எய்தும்**
**உன்னலரும் சுருதி சம்பந்தம் உத்தி**
**சம்பந்தம் உலகசம் பந்தம்**
**என்னவரும் ஞானங் கள்முறை யேஅம்**
**மாயைபடும் இயல்பு கூறில்.**

பின்னமும், அசத்தும், சாவயவமும் இவற்றிற்கு எதிர் மறையான அபின்னமும், சத்தும், நிரவயவமும், அவைகள் வெவ்வேறாகப் பிரிந்து தம்முள் பொருந்தினவாய பின்னா பின்னமும், சதசத்தும், சாவயவ நிரவயவமுமாகச் கூறிய ஒன்பது வித குணத்தையும் அநிர்வாச்சியமாய் (இன்ன தன்மை என கூறப்படாததாய்) உள்ள மாயையானது தனக்கு

இயல்பாகப் பெறும். அம்மாயைக்கு நினைத்தற்கரிய சுருதி சம்பந்தம், யுத்தி சம்பந்தம், உலக சம்பந்தம் என வழங்கி வருகின்ற ஞானங்கள் உண்டாகும் இயல்பை முறையே கூறுமிடத்து. (குளகம்)

(சத் அத்திற்கு வேறானது அநிர்வசநீயம் என்பர். அதனை மித்தை என்றும் கூறுவர். முக்காலத்திலும் பாதிக்கப்படாததை சத்து என்பர். வடிவம் இல்லாததை அசத்து என்பர். பாத யோக்கிய (பொய் என்று நிச்சயத்தக்க) வடிவமுடையதை சத்விலட்சணம் என்பர்.)

**56. விண்ணின் மலர்எனத் துச்சமே எனவும்**
**இப்பிவரு வெள்ளி போல**
**எண்ணும் அநிர்வாச்சிய மாம்என வும்உயிர்**
**போல்நித்தம் எனவும் நிற்கும்**
**உண்ணிலவு தமமாயை மோகமுடன் அவித்தை**
**பொய்மை உருவி என்றே**
**நண்ணும் இவைமா யாபஞ் சகம்ஆகும்**
**எனஅறிஞர் நவில்வர் அன்றே.**

அம்மாயை ஆனது, சுருதி சம்பந்த ஞான விசாரணையில் ஆகாயத் தாமரை போல அசத்து (பொருளற்றது) எனவும், யுத்தி தொடர்பான அப்பியாசத்தில் கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுதல் போல ஆராய்ந்து அறியத் தக்க அநிர்வாச்சியம் (சொல்ல இயலாத தன்மை உடையது) என்றும், உலகில் சத்திய புத்தியுள்ள அஞ்ஞானிகளுக்கு ஆத்மாவைப் போல நிலையாகவும் இருப்பதாம். சித்தத்துள் விளங்குகின்ற தமமும், மாயையும், மோகமும், அவித்தையும், மித்தியாசொரூபி என்றும் பொருந்தி மாயை ஐந்து பெயர்களைப் பெற்று நிற்கும் என்று கற்றோர் கூறுவர்.

**57. சீவசே தனம்மறைத்துத் தமம்அயல் ஆகிய**
**உலகத் திறத்திற்கு எல்லாம்**
**மேவுகா ரணம்ஆகி மாயை விபரித**
**ஞானம் விளைத்து மோகம்**
**ஓவஉணர்வு அழித்து அவித்தை சத்தின்**
**வேறுஆகிப் பொய்உருவி ஆகும்**
**வீவுஇலா மாயை அதற்குஇரு தருமம்**
**சங்கோச விகாசம் என்றாம்.**

அந்த மாயையானது சீவ சேதனத்தை உள்ளபடி விளங்காமல் மறைத்தலால் தமம் என்றும், தனக்கு வேறாகத் தோன்றுகின்ற பலவிதமான உலகங்களுக்கு எல்லாம் காரணமாய் பொருந்தி இருத்தலால் மாயை என்றும் சொல்லப்படுவதாம். விபரீதமான அறிவை உண்டாக்குவதால் மோகம் என்றும் சொல்லப்படும். தத்துவ ஞானத்தால் அழிவதால் அவித்தை எனப்படும். சத்திய வடிவான பிரம்மத்திற்கு வேறாய் இருத்தலால் மித்தியா சொரூபம் என்று சொல்லப்படும். தத்துவ ஞானம் உண்டாகும்வரை அழிவில்லாத அம்மாயைக்கு விரிதல், ஒடுங்குதல் என்னும் இரண்டு தருமங்கள் உண்டு.

**58.** **விரிந்துபடம் ஓவியங்கள் பலதிகழ்த்திக்**
**குவித்துஒடுக்கும் விதமே போல**
**அரந்தைதரு மாயையும்தன் விகாச**
**தருமத்தினால் அகிலம் காட்டி**
**பரந்துஅவைகள் சங்கோச தருமத்தால்**
**அடக்கும்எனப் பகர்வர் மாயைக்கு**
**இருந்தகுணம் இரண்டுஉளஇல் சுதந்தரமும்**
**சுதந்தரமும் என்ன அன்றே.**

சித்திரம் எழுதப்பட்ட துணியானது விரியும் போது ஓவியங்கள் பலவற்றை விளங்கக் காட்டும். சுருங்கும் போது அச்சித்திரங்களைத் தன்னுள் மறைத்துக் கொள்ளும். அது போல இன்பம் போலக் காட்டித் துன்பம் தருகின்ற மாயை, தனது விரிதல் ஆகிய தருமத்தினால் உலகம் அனைத்தையும் விளங்கக் காட்டித் தனது ஒடுங்குதலாகிய தருமத்தால் நாம ரூபமாக விரிந்துள்ள அவ்வுலகங்கள் அனைத்தையும் தன்னுள்ளே மறைத்துக் கொள்ளும் என ஞானிகள் கூறுவர். இவையன்றியும் மாயைக்கு இயல்பாய் உள்ள குணங்கள் சுதந்தரமின்மை எனவும், சுதந்தரம் எனவும் இரண்டு உள்ளனவாம்.

**59.** **பொய்யாகிச் சத்துருவப் பொருளின்வேறு**
**ஆகிஒரு பொருளாய்த் தோற்றல்**
**செய்யாமை யால்உளதுஇல் சுதந்தரம்சான்று**
**ஆயஒரு சேத னன்பால்**
**உய்யாத சீவாதி ஆக்குதலால்**
**சுதந்தரமும் உளது மாயை**
**மெய்யானது அலதுஎன்றல் விசும்புஅலர்போல்**
**இல்லைஎன விளம்பல் அன்றே.**

மாயை ஆனது வடிவமற்றது. பிரம்மத்தினும் வேறாக, தான் ஒரு பொருளாகத் தோன்றாமையால் சுதந்திரம் இல்லாத தன்மை உடையது. அனைத்துக்கும் சாட்சியாய் இருக்கின்ற ஒப்பற்ற பிரம்மத்தினிடத்தில் அஞ்ஞானிகளான சீவர் முதலியவைகளை கற்பிதமாகத் தோன்றச் செய்வதால் சுதந்தரம் உடைய இம்மாயை மெய் அல்லாதது என்று சொல்லவும் இயலாது. ஆகாயத்தாமரை போல முற்றும் இன்று எனவும் கூற முடியாது. (ஆனால் இவ்விரண்டினும் வேறான அநிர்வசநீயம் என்று கூறுவர்).

**60. புலன்இல்கன விடைக்கரிபோல் தோன்றிவிசாரம்**
**தோன்றப் பொன்றும் பொய்யா**
**நிலவுதல்செய் சுத்தசத் துவவடிவ**
**மாயையொடு நிகழ்த்து கின்ற**
**மலினசத் துவவடிவ அவித்தைதமப்**
**பிரதான வடிவம் ஆகும்**
**நலம்இல்பிர கிருதிஎன *விருத்திமூன்று**
**உடைத்துமுன் நவின்ற மாயை.**

இந்திரிய வியவகாரங்கள் இன்றிய சொப்பனத்தில் யானை முதலியன தோன்றுதல் போலத் தோன்றி, விசாரணை செய்யுமிடத்துத் தனக்கென ஒரு வடிவமின்றிக் கெடும் இயல்புடையது மாயை. மித்தையாக விளங்குகின்ற முற்கூறிய மாயையானது, சுத்த சத்துவ குணவடிவ மாயையும், அதன்பின் கூறப்படுகின்ற மலின சத்துவகுண அவித்தையும், நன்மை தராத தாமத குணப் பிராதன வடிவப் பிரகிருதியும் என்று மூன்று வித விருத்தி உடையதாம்.

**61. மாயைவரு சுழுத்திலயங் களில்அத்தி**
**யாச அயிக்கம் ஆயிற்று உண்மை**
**ஆயபிரமத் தின்நனவொடு படைப்பின்**
**இதுபேத அவத்தை எய்தும்**
**மேயஅதில் பிரமசை தன்னியம்**
**விம்பித்துஇதுவே விளங்கு ஞானத்**
**தூயசைதன் னியஈசன் பதிஇறைஎன்றிட**
**நிற்கும் துணிவு தன்னால்.**

---

* *விருத்தி : பரிணாமம்*

மாயையானது, இடைவிடாது மாறிமாறி வருகின்ற சுழுத்தி அவத்தையிலும், சர்வ சங்கார காலங்களிலும் சத்துவடிவ பிரம்மத்தின்கண் கற்பித ஐக்கியமாய் காணப்படும். சாக்கிராவத்தையிலும் சிருட்டியிலும் இந்த மாயையானது (சிறிது வேற்றுமையாகத் தோன்றும்) பேத அவத்தையை அடைந்ததாகக் காணப்படும். அந்த பேத மாயையில் பிரம்ம சைதன்னியமானது பிரதிபிம்பிக்க, அங்ஙனம் பிரதிபிம்பித்து ஞான வடிவாக விளங்கும். இந்த பரிசுத்தமான சைதன்னியமே ஈசுவரன் என்றும், பதி என்றும், இறையென்றும் எவரும் கூறும்படியாக உறுதியாக நிற்கும்.

**62. அப்பரற்கு உபாதி ஆகி அமோசுகா ரணியாம் மாயை**
**பொய்ப்புறும் அவித்தை எண்ணில் போத்துரு பசுஎன்று ஓதும்**
**ஒப்பரும் சீவர்க்கு எல்லாம் உபாதியாய் மோகம் செய்யும்**
**எய்ப்புறு பகுதி பாசம் எனக்குணச் சமமாம் நின்று.**

மாயையானது அந்த ஈசுவரனுக்கு உபாதியாய் அமோகத்தைச் செய்வதற்கு காரண மாக இருப்பதாம். (அமோகம் = விபரீத புத்தியின்மை) பொய்யென நிச்சயிக்கத்தக்க அவித்தையான்து அளவில்லாதுள்ள போத்துரு என்றும், பசு என்றும் கூறப்படும் ஒப்பில்லாத சீவர்க்கு எல்லாம் உபாதியாய் நின்று மோகத்தைச் செய்வதாம். (மோகம் = விபரீத புத்தி) தத்துவ ஞானத்தினால் கெடத்தக்க பிரகிருதியானது பாசம் எனப்படும். அதில் முக்குணமும் சமமாய் இருக்கும்.

**63. அவித்தையில் விம்பித்து உள்ள ஆர்உயிர் நுகர்ச்சிக் காகத்**
**துவக்குறு காரி யங்கள் தோன்றிட வெதிர்கு றித்த**
**உவப்புறும் ஈசன் நோக்க மாத்திரத்து உற்றுஅ லர்ந்து**
**பவப்படு காலம் ஆகி அதுகொடு பரிண மித்து.**

அவித்தையில் பிரதி பிம்பித்துள்ள சீவர்களது இன்ப நுகர்ச்சியின் பொருட்டும், ஆனந்தவடிவமான ஈசுவரன், தேகம் முதலான பிரபஞ்ச காரியங்கள் உண்டாகும் பொருட்டு ஏகமாகிய யான் அநேகம் ஆவேன் என்று சங்கற்பித்த மாத்திரத்தில் அவனது பார்வை பொருந்திய பிரகிருதியானது மிகவும் விரிந்து சிருட்டிக்கு ஏதுவாய கால தத்துவமாகி, அதுகாரணமாக வேற்று உருவடைந்துள்ளது.

**64. இருமக தத்து வம்தான் எனநிற்கும் அதுதான் நீர்பெய்து**
**அரும்விதை முளையா மல்முன் போல்இராது அமர்தல் போலக்**

**கருஎனும் பகுதி யோடுஆங் காரமும் ஆகா மல்பொய்**
**உரமுறு நிருவி கற்ப உருநடு அவத்தை ஆகும்.**

ஈசுவரனது சங்கற்பத்தால், பரிணமித்து (வேற்று உருவடைந்தது) பெரிதாகிய மகத் தத்துவம் எனக் கூறப்பட்டு நிற்கும். அந்நிலையானது, நீர் விட்ட விதையானது முளையாமலும், முன்போல் இராமலும் எங்ஙனம் நிற்குமோ அது போல, தன் காரியவடிவ அகங்காரம் ஆகாமலும், தன் காரணவடிவப் பிரகிருதி ஆகாமலும் அவ்விரண்டிற்கும் நடுவான நிலைமையை அடைந்து இருப்பதாம்.

**65. கொன்ம கதத்து வந்தான் குணபேதம் உறாப்பொய் ஞான**
**மன்ச விகற்பம் ஆக வருமுதல் அத்தி யாசம்**
**என்மு தல்ஆங் காரம் தோன்றிடும் குணம்சத்து வந்தான்**
**பின்வரும் இராசதம்சொல் பொருந்தமோ குணம்ஒன்று ஆகும்.**

அம்மகத் தத்துவம் முக்குண பேதமுற்று, மித்தியா ஞானமுற்ற சவிகற்ப வடிவமாக உள்ள (பிரதம அத்தியாசம் என்று கூறப்படும்) மூல அகங்காரம் ஆகும். அந்த மூல அகங்காரத்தின் குணம் சத்துவமும், அதன்பின் வருகின்ற இராசதமும், பெரிதாகிய தமோ குணமும் என்று மூன்றாம்.

**66. உரைப்பரும் சத்து வாதி உருவங்கள் பிரகா சம்பின்பு**
**உரைப்பிர விருத்தி மோகம் என்குவர் புகல்கு ணங்கள்**
**நிரைப்பெயர் தான்வை காரி நிகழும்தை சதம்பூ தாதி**
**விரிப்பரும் குணங்கள் மூன்றும் தருவமேல் விளம்பல் உற்றாம்.**

சொல்லற்கரிய சத்துவ முதலிய குணங்களின் வடிவங்கள் பிரகாசமும் (ஞானம்), பின்னர்க் கூறப்படும் பிரவிர்த்தியும் (முயற்சி), மோகமும் (விபரீத புத்தி) என்று கூறுவர். இவ்வாறு கூறிய சத்துவாதி குணங்களுக்கு பரியாய நாமங்கள், விளங்குகின்ற தைசதம், வைகாரி, பூதாதி எனப்படுவனவாம். விரிவாக சொல்லற்கரிய இம்மூன்று குணங்களும் தருவனவற்றை இனிக் கூறுவாம்.

**67. சத்துவ குணத்தில் தோன்றும் தயங்கும்உள் கரணம் நான்கும்**
**புத்திஇந் தியங்கள் ஐந்தும் போந்துஉ தித்திடும்இ ராச**
**தத்தில்வாக்கு ஆதி ஐந்தும் தகும்பிரா ணாதி ஐந்தும்**
**அத்தமோ குணத்தில் தோன்றும் அகல்விசும்பு ஆதி பூதம்.**

சத்துவ குணத்தில் இருந்து விளங்கும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்கும், சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் உற்பத்தியாகும். இராசதகுணத்தில் இருந்து வாக்கு, பாணி, பாதம், பாயுறு, உபஸ்தம் என்னும் கர்மேந்திரியங்கள் ஐந்தும், சரீரத்திற்குத் தகுதியான வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன் என்னும் வாயுக்கள் ஐந்தும் உற்பத்தி ஆகும். அத்தமோ குணத்தினின்றும் வியாபகமான ஆகாசம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி என ஐந்து பூதங்கள் தோன்றும்.

**68. அப்பெரும் பூதம் பஞ்சீ கரித்துஉலகு ஆகி நிற்கும்**
**செப்பிய கரணம் நான்கின் செயல்களாம் நினைத்தல் அந்த**
**பொய்ப்பொருள் துணிதல் மானம் புரிதல்சிந் தித்தல் திங்கள்**
**திப்பியநான் முகன்கேத் திரிபு ராந்த கன்தேவு அன்றே.**

பின்னர் அந்த சூக்கும பஞ்ச பூதங்கள் பஞ்சீகரணக் கலப்பால் உலகாகி நிற்கும். முற்கூறிய மனம் முதலிய அந்தக்கரணத்தின் செயல்கள் முறையே அந்த மித்தியாப் பொருள்களை நினைப்பதும், உறுதி செய்வதும், விரும்புவதும், சிந்திப்பதுமாம். அந்த அந்தக் கரணத்திற்கு முறையே சந்திரனும், சிறந்த பிரமனும், சேத்திரக்ஞன் ஆகிய திருமாலும், உருத்திரனும் அதி தெய்வங்களாம்.

**69. இக்கர ணங்கள் தானம் இதயம்ஞா னேந்தி ரியங்கட்கு**
**உய்க்குஉறும் தொழில்ஆம் கேட்டல் உறல்காண்டல் உண்டல் மோத்தல்**
**திக்குமா ருதமே நன்மித் திரன்உயர் வருண னோடு**
**தக்கஅசு வினியாம் தெய்வ தானம் காதுஆதி ஆமே.**

இந்த மனம், புத்தி, சித்தம், அகங்காரமான நான்கிற்கும் இடம் முறையே கண்டம், இதயம், நாபி, சர்வாங்கமும் என்று சொல்லப்படும். சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியங்களுக்குத் தொழில்கள், கேட்டலும், பரித்தலும், பார்த்தலும், சுவையறிதலும், வாசனையை அறிதலுமாம். திக்குப் பாலகர்களும், வாயுவும், நலன்களைத் தருகின்ற சூரியனும், மேன்மை பொருந்திய வருண்னும், அசுவினி குமாரர்களும் அதி தேவதைகளாம். அவ்விந்திரியங்களுக்கு இடம் முறையே, காது, தோல், கண், நாக்கு, மூக்கு ஆகும்.

**70. புத்திஇந்தி ரியங்கள் தாம்உணரும் விடயம்**

**உய்த்தபிரா ணாதிஒலி கேட்கைஅன் னாதிகளை**
**உண்ணும்போது அழல்குளிர்ச்சி அறிதல்விழி மூடில்**
**மெத்தும்அக இருள்அறிதல் உட்காரா திகளின்**
**விளங்குசுவை கந்தம்அறிந் திடல்முறையே ஆகும்**
**வைத்தகரு மேந்திரியத் தொழில்உரைத்தல் நடத்தல்**
**வழங்கல்விடல் ஆனந்தித் திடுதல்என அறியே.**

அறியும் தன்மை உடைய ஞானேந்திரியங்கள் ஐந்தும் எங்ஙனம் புறத்தில் உள்ள விடயங்களை அறியுமோ அதுபோல அகத்திலும் அறியுமாம். எங்ஙனம் எனின்? காதுகளை விரலால் மூடுகின்ற போது உசுவாச நிசுவாசங்களைச் செய்யும் பிராணன் முதலிய வாயுக்களின் சத்தங்களைச் சுரோத்திரேந்திரியம் கேட்பதாம். அன்னபானதிகளை உண்ணும் இடத்து உஷ்ணம் குளிர்ச்சி முதலியவைகளைத் துவக்கிந்திரியம் அறிவதாம். கண்களை மூடுகின்ற போது நுட்பமான உள்ளிருளைச் சட்சு இந்திரியம் அறிவதாம். ஏப்பம் இடுகின்ற போது உட்சுவையைச் சிங்நுவை இந்திரியம் அறிவதாம். வாந்தி எடுக்கின்ற போது நாற்றத்தைக் கிராணேந்திரியம் அறிவதாம். கன்மேந்திரியங்களின் தொழில்கள் முறையே வாக்கால் வசனித்தலும், பாதத்தால் நடத்தலும், பாணியால் வழங்கல் ஏற்றலும், பாயுருவால் மலசலம் கழித்தலும், உபஸ்தத்தால் ஆனந்தம் அடைதலும் என அறிவாயாக.

71. **அங்கிமக பதிஇரவி உடன்மிருத்யு பிரசா**
**பதிதெய்வம் வாய்முதலாங் கோளகங்கள் தானம்**
**இங்குஇவையுள் உட்கரணம் இருவகைஇந் திரியம்**
**என்னவரும் பதிநான்கும் அத்தியான் மிகமாம்**
**தங்கும்இவற் றுறுவிடயம் ஆதிபௌ திகமாம்**
**தகும்அதிதே வதைஆதி தெய்வீகம் ஆம்இப்**
**புங்கவரே இந்திரியம் விராட்புருடற்கு அதுமெய்**
**பொன்கர்ப்பர்க்கு அதுமறைப்பாம் அந்தரியா மிக்கே.**

அக்கினியும், இந்திரனும், சூரியனும், யமனும், பிரசாபதியுங் கன்மேந்திரியங்களுக்கு அதி தேவதைகளாம். வாக்கிற்கு வாயும், பாதத்திற்குக் காலும், பாணிக்குக் கையும், பாயுருவிற்குக் குதமும், உபஸ்தத்திற்குக் குய்யமும் இடமாம். இங்கே கூறிய இவைகளுள் அந்தக்கரணம் நான்கும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்துமென வழங்கிவரும் பதினான்கும் ஆதியாத்மிகமாம். இவற்றின் விடயங்கள் ஆதிபௌதிகமாம். இவற்றின் அதி தேவதைகள் ஆதிதெய்வீகமாம். இந்த அதி தேவதைகளே விராட்புருடனுக்கு

இந்திரியங்களாம். அவ்விந்திரியங்கள் இரணிய கருப்பனுக்கு சரீரமாம். அந்தச் சரீரமே தமோவடிவத்தால் அந்தரியாமிக்கு ஆவரணமாம்.

**72. நின்றுஇதயம் தனைஅடைந்து பிராணன்உசு வாச**
**நிசுவாசம் இயற்றும்அபா னன்குதத்தின் உற்றுச்**
**சென்றுஒழிய மலசலங்கள் ஒழித்தல்உறும்ச மானன்**
**சேர்ந்துஉந்தி அன்னரசம் உறுப்புஅனைத்தும் பகுக்கும்**
**என்றும்உதா னன்களம்உற் று*உற்காரம் புரியும்**
**இருந்துஅங்கம் எங்கும்வியா னன்பரிக்கும் உடம்பைக்**
**குன்றுதல்இல் நாகனசோம் பாவித்தல் விளைக்கும்**
**கூர்மனால் விக்கலொடு *தேக்குளவாம் அன்றே.**

ஐந்து வாயுக்களுள், பிராணவாயு இருதயத்தின் இடமாக நின்று உசுவாச நிசுவாசங்களைச் செய்யும். அபானவாயு குதத்தின் இடமாக நின்று மல மூத்திரங்களைத் தேகத்தினின்று சென்று ஒழியும்படி செய்யும். சமானவாயு நாபியின் இடமாக நின்று உண்ட அன்ன சாரத்தைச் சர்வாங்கத்திற்கும் பகுத்துக் கொடுக்கும். உதான வாயு கண்டத்தின் இடமாக நின்று எப்போதும் வாந்தி செய்விக்கும். வியான வாயு சர்வாங்கமும் வியாபித்து நின்று சரீரத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும். உபவாயுக்களுள், நாக வாயு வானது சோம்பலையும் கொட்டாவியையும் விளைத்துக் கொண்டிருக்கும். கூர்மன் என்னும் வாயுவினால் விக்கலும் ஏப்பமும் உண்டாகும்.

**73. தும்மலுடன் இருமல்வரும் கிரிகரனால் நகுதல்**
**சொல்லுதலாம் தேவதத் னால்சோக ராகம்**
**இம்மைதரும் தனஞ்சயன்அத் தனஞ்சயனாம் வாயு**
**இறந்தஐந்து நாள்காறும் இருந்துநனி வீங்கி**
**மெய்ம்முழுதும் வெடித்திடச் செய்துஅகலும்நா காதி**
**வியம்புபுற வாயுக்கள் தாம்கருமேந் தியங்கள்**
**தம்மைமிக இயக்கலுறும் பிராணாதி வாயுத்**
**தாம்இயக்கும் விடாமன் ஞானேந்திரியங் களையே.**

---

** உற்காரம் = வாந்தி செய்தல்*
** தேக்கு = ஏப்பம்*

கிரிகர வாயுவால் தும்மலும் இருமலும் வரும். தேவதத்த வாயுவால் சிரித்தலும் பேசுதலும் உண்டாகும். தனஞ்சய வாயு சோகத்தையும் இராகத்தையும் தரும். அவ்வாயுவானது உயிர் நீங்கிய பின்னும் ஐந்துநாள் வரைக்கும் உடம்பில் இருந்து உடம்பு முழுவதையும் மிக வீங்கச் செய்து தலையை வெடிக்கச் செய்து நீங்கும். புற வாயுக்கள் என்று சொல்லப்படுகின்ற நாகன் முதலிய வாயுக்கள் வாக்கு முதலான கர்மேந்திரியங்களை மிகுதியாக இயங்கும்படி செய்வன. பிராணன் முதலான வாயுக்கள் சுரோத்திராதி முதலான ஞானேந்திரியங்களைத் தவிராமல் இயங்கும்படி செய்யும்.

**74. சாற்றின்வயி ரம்பன்முக் கியன்பிரபஞ் சனன் அந்**
**தரியாமி யொடுமகாப் பிராணன்எனும் பெயர்கொள்**
**காற்றுஇவைகள் சீவசம் பந்தமா யேஉள்**
**கரணங்கள் இயக்கியிடும் மண்மதல்ஐந் திற்கும்**
**பால்திகழும் வியாபாரம் பொறைபிண்டீ கரணம்**
**பாகமொடு •விரகம்இடம் கொடைஆகும் தருமம்**
**ஆற்றல்உறு திண்மைநெகிழ்வு •அழற்சி •பரி வெளியாம்**
**அயனொடுஅரி அரன்ஈசன் சதாசிவன்தே வதைகள்.**

இன்னும் வாயுக்களின் வகைகளைக் கூறுமிடத்து, வயிரம்பன், முக்கியன், பிரபஞ்சனன், அந்தரியாமி, மகாப்பிரணன் என்னும் பெயர் கொண்டுள்ள வாயுக்கள் உண்டு. இவ்வைந்தும் சீவருடன் தொடர்பாய் உள்ள மனம் முதலான அந்தக் கரணங்கள் ஐந்தையும் இயங்கும்படி செய்வன. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பூதங்கள் ஐந்திற்கும் தொழில்கள் முறையே பூமிக்குத் தாங்குதலும், நீரிற்குத் திரட்டுதலும், நெருப்புக்குப் பக்குவம் செய்தலும், காற்றிற்கு உலர்த்தலும், வானிற்கு இடம் கொடுத்தலுமாம். அவ்வைந்து பூதங்களின் தருமங்கள் முறையே, கடினத் தன்மையுடன் இருப்பது பூமியின் தர்மம், நெகிழ்தல் நீரின் தர்மம், வெம்மை நெருப்பின் தர்மம், பரப்புதல் வாயுவின் தர்மம், வெளியாய் இருப்பது வானின் தர்மம் ஆம். நான்முகன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் முறையே இப்பூதங்களுக்கு அதிதேவதைகள்ஆவர்.

---

• *விரகம் = உலர்த்தல்*
• *அழற்சி = வெம்மை*
• *பரி = பரப்புதல்*

**75.** **கந்தம்முதல் ஆயினவே குணங்கள்அவை தம்முள்**
**ககனத்திற்கு ஒலிஒன்றே வளிக்குஇரண்டு ஊறுடனே**
**அந்தழலுக்கு ஒளியொடுமூன்று அறற்கி ரதமொடு நான்கு**
**ஐந்து மணமொடுபுவிக்குஎன்று அறிகதிரி புடிதான்**
**முந்துஞா திருஞானம் ஞேயமாம் அவற்றுள்**
**மூலஅகங் காரம்சேர் சீவசை தன்னியம்**
**நந்துஞா திருமனத்தில் கதுவுஅறிவு ஞானம்**
**நவின்றபௌ திகவிடய ஞேயம்என அறியே.**

கந்தம், ரசம், ரூபம், பரிசம், சத்தம் என்பன முறையே பிருதிவி முதலிய பூதங்களின் குணங்களாம். அக்குணங்களுள், ஆகாயத்திற்குச் சத்தம் ஒன்றேயாம். வாயுவிற்கு பரிசத்தோடு சத்தமும் பரிச என இரண்டாம். அழகிய அக்கினிக்கு ரூபத்தோடு சத்தமும் பரிசமும் என மூன்றாம். அப்புவிற்கு ரசத்தோடு சத்தமும், பரிசமும், ரூபமும் என நான்காம். பிருதிவிக்கு கந்தத்தோடு சத்தமும், பரிசமும், ரூபமும், ரசமும், என ஐந்தாம் என்று அப்பூதங்களின் குணங்களை அறிவாயாக். திரிபுடி என்பது ஞாதுரு, ஞானம், ஞேயம் (காண்பான், காட்சி, காணப்படும் பொருள்) என மூன்றாம். மூல அகங்காரத்தில் பிரதிபிம்பித்துள்ள சைதன்னிய வடிவ சீவன் ஞாதுருவாம். மனத்தில் பிரதிபிம்பித்துள்ள சைதன்னியமே ஞானமாம். பூதபௌதிக வடிவ விஷயங்கள் ஞேயமாம். (விடயத்தோடு கூடிய சைதன்னியத்தை ஞேயமென்று கொள்ளல் வேண்டும்.)

**76.** **ஈங்குமனம் இருபத்துநான்கு ஆவது ஆகும்**
**இருபத்தைந்து ஆவதுதான் மூலஅகங் காரம்**
**ஆங்குஅதனை அடைதலுறும் சிதபாச சீவன்**
**அறையும்இரு பத்துஆறாம் அவன்மாயை மருவும்**
**ஓங்குஒளி யாம்ஈசன்இரு பத்துஏ ழாம்அவன்அவ்**
**உயிர்முதலாம் துரியன்இரு பத்துஎட்டாம் அவனாம்**
**நீங்கலரும் ஈசன்அதிட் டாத்துருவாம் பிரமம்**
**நிகழ்த்தில்இரு பத்தொன்பதுஆ வதுஅதுவாம் அன்றே.**

பூதங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து கர்மேந்திரியங்கள் ஐந்து, வாயுக்கள் ஐந்து, அந்தக்கரணம் நான்கு ஆக தத்துவங்கள் இருபத்து நான்காம். இவற்றுள் மனம் இருபத்து நான்காவது தத்துவம் ஆகும். இருபத்து ஐந்து ஆவதான மூல அகங்காரத்தைப் பிரதிபிம்ப வடிவமாய் அடைந்துள்ள சீவ சிதாபாசன் சித்துப் போலி என்று

சொல்லப்படுகின்ற இருபத்து ஆறாம் தத்துவம் ஆவான். மாயை பொருந்தி ஓங்கிய சித்து வடிவான ஈசன் இருபத்து ஏழாவது தத்துவம் ஆவான். அச்சிதாபாசனுக்கு அதிட்டானமாக விளங்கும் கூடஸ்தன் இருபத்து எட்டாவது தத்துவம் ஆவான். ஈசுவரனுக்கு அதிட்டானமான, எப்பொழுதும் விலங்குகின்ற பிரம்மம் இருபத்தொன்பதாவது தத்துவம் ஆகும்.

**77. தெரித்தகா ரியத்தோற்றம் இருவகையாம் கிரம**
**சிருட்டியுக பத்சிருட்டி எனமூலப் பகுதி**
**விரித்தமக தத்துவம்அக மும்தன்மாத் திரையாம்**
**வியங்குசத்தப் பிரகிருதி யால்பஞ்ச பூதம்**
**உரைத்தவற் றால்பிரமாண்ட பிண்டமுதல் ஆய**
**உலகுஉதயம் தான்கிரம சிருட்டிநிறை கடலான்**
***மருத்துவசத்து அலைஆதி போல்சிவத்தின் மாயா**
**மயநாம உருவநிகழ் வாம்உகபத் சிருட்டி.**

முன்னர்க் கூறிய மாயா காரியத் தோற்றமானது கிரம சிருஷ்டி என்றும், உகபத் சிருட்டி என்றும் இருவகைப்படும். அவற்றுள் பிரகிருதியில் இருந்து, மகதத்துவமும், அதில் இருந்து தோன்றிய மூல அகங்காரமும் அந்த அகங்காரதில் இருந்து ஐந்து தன்மாத்திரைகளும் உண்டாகும். மகதத்துவம், மூல அகங்காரம், பஞ்ச தன்மாத்திரைகள் என விளங்கிய இவ்வேழு பொருள்களில் பஞ்ச தன்மாத்திரையில் இருந்து தூல பூதங்கள் உண்டாகும். அப்பஞ்ச பூதங்களில் இருந்தும் பேரண்டம் முதலாக உள்ள உலகம் தோன்றுதலே கிரம சிருட்டியாம். பெரிய கடலிலே காற்றின் வசத்தால் அலை , திவலை, நுரை முதலியன தோன்றுவன போல் பிரம்மம் ஆகிய பரம்பொருளில் மாயையின் மயமாக உள்ள நாம ரூப வடிவ உலகம் முழுவதும் ஒரே சமயத்தில் தோன்றுதலே உகபத் சிருட்டியாம்.

**78. சுருதிசித்தம் ஆதலினால் இவைஉடம்பாடு ஆகும்**
**தூயபரப் பிரம்மாம் விகாரம்இலா இறையால்**
**தருதல்எங்ஙன் காரியங்கள் சடப்பகுதி என்னில்**
**தாள்இலாக் கதிர்ச்சிலையில் இச்சைஇலாது எழுந்த**

---

* மருத்து காற்று

**பருதியினால் அழல்வரல்போல் பரசிவனால் மூலப்**
**பகுதிஇடை மகதாதி காரியங்கள் வரற்குக்**
**கருதின்முரண் இலைஆகும் எனப்புகல்வர் அறிஞர்**
**காரியங்கள் தோற்றுதல் நால் வகைஅவைஈண்டு உரைப்பாம்.**

கிரம சிருஷ்டி யுகபத்சிருட்டி என்னும் இரண்டும் வேத சம்மதம் ஆனதால். ஏற்றுக்கொள்ளத் தக்கது ஆகும். யாதொரு மாறுபாடும் இல்லாத பிரம்ம வடிவமான ஈசுவரனால் சட வடிவான மூலப்பகுதியில் இருந்து மகதத்துவம் முதலான காரியங்கள் உண்டானது எவ்விதம் என்று நீகேட்பாய் ஆயின், இச்செயல் செய்வோம் என்னும் விருப்பம் இல்லாமல் எழுந்தருளிய சூரியனால், இவ்வாறு ஆதல் வேண்டும் என்னும் முயற்சி இல்லாத சூரியகாந்தக் கல்லில் இருந்து நெருப்பு உண்டாவது போல, பரமேசுவரனால் மூலப்பகுதியில் இருந்தும் மகதத்துவம் முதலான காரியங்கள் தோன்றுவதற்கு ஆராய்ந்து பார்க்கும் இடத்துத் தடையில்லை என்று அறிஞர்கள் கூறுவர். நான்கு விதத்தில் மாயா காரியங்கள் உண்டாகும். அவற்றை இங்கே எடுத்துக் கூறுவோம்.

**79. விருத்திபரி ணாமம்ஆரம் பம்விவர்த் தகமாம்**
**விரிந்தபடம் குடில்பாவம் பால்தயிர்ஆ காரம்**
**உரைத்தல்உறு தந்துபடம் நியாயம்வன் பழுதை**
**உரகஉரு முறைஅவற்றின் திட்டாந்தம் ஆகும்**
**வருத்துகயிற்று அரவம்கந் தருவநகர் குற்றி**
**மகன்கனவுஇந் திரசாலம் சுத்திகா ரசதம்**
**தெரித்தஇவை முதலனவாம் திரிதலின்மெய்ப் பொருளில்**
**திரிந்திடுபொய்ப் பொருளதுகற் பிதம்ஆதற்கு உவமை.**

காரியங்கள் தோன்றும் விதம் விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தம் என நான்காம். அவைகளுக்கு, விரிந்த துணி வீடு வடிவமாதலும், பால் தயிராதலும், பல அவயவங்களாகிய நூல்கள் ஆடை வடிவமாதலும், கயிற்றில் பாம்பு தோன்றுவதும் முறையே சான்றுகளாம். மாறாது என்றும் ஒருபடித்தாயுள்ள, மெய்ப் பொருளாகிய பிரம்மத்தில், வேற்று உருவம் அடைகின்ற பொய்யாகிய உலகம் கற்பிதம் எனத் தெரிவித்தற்கு நடுங்கவைக்கும் கயிற்றரவும், கந்தர்வ நகரமும், கட்டையிற் கள்ளனும், சொப்பனமும், இந்திரசால நகரமும், கிளிஞ்சலில் வெள்ளியும் போன்றவை உவமைகளாம்.

80. பொய்ப்பொருள்கற் பிதம்ஆயிற்று அவிகாரி ஆகப்
பொருந்தும்உயிர் இடத்தெனின்முன் பிராந்தியார்க்கு என்னில்
ஒப்புஇல்சதி பதிரதிமால் உருவச்சொப்ப னந்தான்
ஒருமுனிவன் பால்உதிப்பின் அதனால்அங்கு அவனுக்கு
எப்பழுதும் இலாததுபோல் சான்றாம்ஆன் மாவில்
இலங்குகுண உருவமாம் பகுதியினால் மருளும்
மெய்ப்புஅரிய ஞாதுருவும் பிராந்திஞா னமும்பொய்
விடயஞேய மும்வரினும் அவற்குஇடையூறு இலையே.

நிர்விகார சொரூபமாய் உள்ள ஆத்மாவின்கண் பொய்ப்பொருள் கற்பிதமாகத் தோன்றிற்று எனும் போது அத்தகைய பிராந்தி யார்க்குத் தோன்றிற்று எனக் கேட்டால்? ஒரு முனிவனது சொப்பனத்தில், காதலனும் காதலியும், ரதியும் மன்மதனும் போல் கூடித் தோன்றும் ஆயின் அச்சொப்பனத்தால் அம்முனிவனுக்கு எவ்வித கலக்கமும் உண்டாகாதது போல், அனைத்திற்கும் சாட்சியாய் உள்ள ஆன்மாவின்கண் முக்குண வடிவமாய் விளங்கும் மூலப் பிரகிருதியினால் பொய்யான மயக்கத்தோடு ஞாதுருவும், ஞானமும், ஞேயமும் தோற்றம் ஆயினும் அதனால் அவ்வாத்மாவிற்கு யாதொரு தீங்கும் இல்லை.

81. இறைவனால் தோன்றிய மாயாமய மாம்உலகம்
இருந்தபடி இருக்கும்தன் வடிவினால் அதனுள்
மறைவுஇலாச் சீவபுத்தி விருத்திகற் பிதமாம்
மற்றொரு போக்கிய வடிவமே விருப்புவிடயம்
வெறுவிதாம் வெறுப்பு விடயத்தி னொடுநொதுமல்
விடயம்என த்திரிவித மாம்அவையா வைஎன்னில்
முறையின்வனி தாதிபுலி எழுவாய் வீழ்துரும்பு
முதலனவாம் எனமொழிவர் முற்றும்உணர்ந்து உடையோர்.

ஈசுவரனால் சிருட்டிக்கப்பட்ட மாயாமயமான பிரபஞ்சம் தன் கற்பித வடிவத்தோடு ஒரே பிரகாரமாகவே இருப்பதாம். அந்தப் பிரபஞ்சத்தில் சீவர்களது புத்தி விருத்தியால் கற்பிதமான ஒரு போக்கியப் பொருள் பிரிதிக்கு (விருப்பிற்கு) விடயம், துவேஷத்திற்கு (வெறுப்பிற்கு) விடயம், உபேட்சைக்கு (விருப்பு வெறுப் பின்றியதற்கு) விடயம் என மூன்று விதமாக இருப்பதாம். அந்த மூன்று விதமான விடயங்கள் யாவை எனின், பெண், பொன் முதலியன பிரிதிக்கு விடயமாம். புலி, பாம்பு முதலியன துவேஷத்திற்கு விடயமாம்.

தெருவிற்கிடக்கும் துரும்பு, கந்தல் முதலியன உபேட்சைக்கு விடயமாம், என்று முற்றும் உணர்ந்தோர் சொல்லுவர்.

**82. ஈசன்நிரு மிதம்ஆன ஏகஆகா ரமும்பின்**
**எய்தும்உயிர்க் கற்பிதமாம் பலஆகா ரமும்ஓர்**
**தேசவிடயத்து உறுதற்குஎவ் வாறுஇங்கு என்னில்**
**திட்டாந்தம் ஈசன்நிரு மிதம்மணி ஆதிகள்தாம்**
**பேசில்ஒரு தகையாய்ப் போத்துருபுத்தி தன்கற்**
**பிதநாநா விதத்தினால் அவைதமைப் பெற்றோனுக்கு**
**ஆசைவி டயமதாகிப் பெறாற்கு வெறுப்பாகி**
**அரியதுற விக்குஉபேட் சாவிடய மாமே.**

ஈசுவர சிருட்டியில் ஒரே விதமாக உள்ள விடயம் சீவர்களால் பலவித கற்பிதம் அடைதற்கு இங்கு உதாரணம் எது என்று வினவினால்? ஈசுவர சிருட்டியான இரத்தினம் முதலிய மணிகள் ஒரேவிதமாகவே இருப்பனவாம். அவ்வாறு இருந்தும் சீவர்களது புத்தி கற்பிதம் பல விதமாய் இருத்தலால், அந்த இரத்தின மணிகளைப் பெற்றவனுக்குப் பிரீதிக்கு விடயமாயும், பெறாதவனுக்குத் துவேஷத்திற்கு விடயமாயும், அரிய துறவிக்கு உபேட்சைக்கு விடயமாயும் இருப்பது போலவாம்.

**83. அப்பொருள்தா னேவிளங்கித் தோன்றுறுதற்கு இன்னும்**
**அறைதும்ஒரு திட்டாந்தம் தோன்றியஓர் மாது**
**மெய்ப்பரிசுஓர் திறமாகப் போத்துருக்கள் புத்தி**
**விருத்திகற்பி தத்தினால் தாதைக்கு மகளாய்த்**
**தப்புஇல்கொழு நற்குக்கா தலிஆகி மகற்குத்**
**தாய்ஆகி மாதுலற்கு மருகியாய் இருப்பள்**
**இப்பரிசு விடயம்எலாம் இறைவன்நிரு மிதமும்**
**இலங்குஉயிர்கற் பிதமும்ஆய் இருதிறத்துஉற் றிடுமே.**

அந்த ஈசுவர சிருட்டியானது எவர்க்கும் விளக்கமாகத் தோன்றும் வண்ணம் இன்னும் ஓர் சான்று கூறுவாம். ஈசுவர சிருட்டியாய் உள்ள ஒரு பெண்ணினது சரீரத்தின் தன்மை ஒரே பிரகாரமாக இருக்க, சீவர்களின் பேத புத்தி கற்பிதத்தினால், அவள், தனது தந்தைக்கு மகளாயும், குற்றமற்ற தனது கணவனுக்கு மனைவியாகவும், தன்மகனுக்குத் தாயாயும், தன் மாமனுக்கு மருமகளாயும் இருப்பாள். இவ்வாறே சகல விடயங்களும் ஈசுவரசிருட்டி என்றும் சீவ சிருட்டி என்றும் இரண்டு தன்மையானவாக இருப்பதாம்.

84. அண்ணல்நிரு மிதப்பிரபஞ் சத்தான்வா திப்பது
அல்லாமை யானும்நூல் ஆசிரிய வடிவாய்
நண்ணல்அரு முத்திசா தனமாயும் தன்னால்
நழுவவொண்ணா மையினானும் அனையதுதான் நிற்க
எண்ணரிய சீவகற்பி தம்ஆய அதுதான்
இருபிரபஞ் சங்கள்சாத் திரத்தோடுஅசாத் திரமாம்
கண்ணும்அசாத் திரபிரபஞ்சம் கொல்இரு திறனாம்
கழிறில்தீ விரமந்தம்என அவைஈண்டு உரைப்பாம்.

ஈசுவர சிருட்டியாகிய பிரபஞ்சமானது சீவர்களுக்குப் பாதகம் இல்லாதபடியினாலும், சுருதி வடிவமாயும், முத்தி சாதனமாய் இருத்தலாலும், சீவன் தன்னால் (பொய் என்று அறிவதே அன்றி) நீங்குவதற்கு முடியாததாய் இருத்தலாலும் அப்பிரபஞ்சம் அவ்வாறே இருக்கட்டும். எண்ணி அளவிடுதற்கரிய சீவ சிருட்டியாய் உள்ள பிரபஞ்சம், சாத்திரப் பிரபஞ்சமும், அசாத்திரப் பிரபஞ்சமும் என இரண்டு பிரபஞ்சங்களாம். கூறுமிடத்து, துன்பத்திற்கு இடமான அசாத்திரப் பிரபஞ்சம் தீவிரமும், மந்தமும் என்று இரு வகைப்படும். இனி அவற்றை இங்கு எடுத்துக் கூறுவோம்.

85. சீவபர விசாரணையே உரைத்தல்அரிதாம் சாத்
திரப்பிரபஞ் சம்காமா திகளேதீ விரமாம்
காவல்உறு சாதிகரு மாதிக மோடேதான்
கருதுமனக் கற்பிதமே மந்தம்அசாத் திரத்தின்
மேவுறும்அவ் இருதிறனும் ஆர்உயிர்மெய்க் காட்சி
விரோதிகள்ஆ தலின்ஞானம் பயிறற்கு முன்னம்
ஓவுவசாத் திரப்பிரபஞ் சம்தான்மெய்ஞ் ஞான
உதவியாய் ஆன்மாக்காட் சிப்பின்விடு வதுவாம்.

சீவ பிரம்ம விசாரமே கூறுதற்கரிய சாத்திரப் பிரபஞ்சமாம். காமக் குரோதாதிகளே தீவிர அசாத்திரப் பிரபஞ்சமாம். பந்தப்படுத்துகின்ற, வருண ஆசிரம தருமங்களோடு நினைக்கின்ற மனத்தின் சங்கற்பமே மந்த அசாத்திரப் பிரபஞ்சமாம். இந்த அசாத்திரப் பிரபஞ்சம் இரண்டும் ஆத்ம தரிசனத்திற்கு விரோதமாய் இருத்தலின் ஞான அப்பியாசம் செய்வதற்கு முன்னரே விடத்தக்கனவாம். சாத்திரப் பிரபஞ்சமானது தத்துவஞானம் பெறும் அளவும் சாதனமாய் இருத்தலின் ஆத்ம தரிசனம் பெற்ற பின்னர் விடத்தக்கதாம்.

**86.** **தீவிரமந் தங்கள்உயிர்க் காட்சிஉற்ற பின்னும்**
**திகழ்முத்தி பெறற்பொருட்டு விடுவனஎன்று அறிக**
**பாவம்உறும் அவச்சின்னோ பாதிபதி விம்போ**
**பாதியுடன் அத்தியா சோபாதி எனவே**
**மேவும்உ பாதிகள்ஒரு மூன்றுஉளஅவற்றை முறையே**
**விளம்பியிடில் சுழுத்திஉரு வாம்அவித்தை தானே**
**ஆவரண அவச்சின்னோ பாதியாம்பி ரத்தியக்**
**ஆன்மாவுக்கு அதனதுகா ரியமாம் புத்தியினில்.**

தீவிர அசாத்திரப் பிரபஞ்சமும், மந்த அசாத்திரப் பிரபஞ்சமும், ஆத்ம ஞானம் வாய்த்த பின்னர் என்றும் ஒரு தன்மையாய் விளங்குகின்ற ஐக்கிய முத்தி அடைதற் பொருட்டு முற்றும் விடத்தக்கதே என்று அறிவாயாக. கற்பிதமாகப் பொருந்திய உபாதிகள், பாவனை வடிவமாகப் பொருந்தியுள்ள அவச்சின்னோபாதியும், பிரதிபிம்போபாதியும், அத்தியாசோபாதியும் என மூன்றாம். அவ்வுபாதிகளை கூறுமிடத்து முறையே பிரத்தியக் ஆன்மாவிற்கு சுழுத்தி அவத்தை வடிவமாயுள்ள அஞ்ஞானமே மறைப்பு வடிவமாயுள்ள அவச்சின்னோபாதியாம். அஞ்ஞானத்தின் காரியமான புத்தியின்கண். (குளகம்)

**87.** **பற்றியஆன் மாப்பதிவிம் பித்திடுதல் தானே**
**பதிவிம்போ பாதியாம் புத்திகதம் ஆய**
**முற்றுசுக துக்கங்கள் உயிர்நுகர்தல் போல**
**முயலுதலே அத்தியா சோபாதி ஆகும்**
**உற்றஅத்தி யாசஇலக் கணமாம்வேறு ஒன்றை**
**ஒன்றாகக்கருதல் இப்பி வெள்ளியது போல**
**மற்றதுநால் வகைப்படுமால் மித்தையுடன் இதர**
**மற்றுஇதரே இதரம்சத் தியங்களினால் அன்றே.**

அஞ்ஞானத்தின் காரியமான புத்தியின்கண், ஆத்மா பிரதிபிம்பித்தலே பிரதிபிம்போ பாதியாம். அப்புத்தியின் கண் இருக்கின்ற சுகதுக்கங்களை ஆத்மா அனுப்பவிப்பது போன்று விடாது முயற்சிப்பதே அத்தியாசோபாதியாகும். இங்ஙனம் எய்திய அத்தியாச இலக்கணம் கிளிஞ்சலை வெள்ளியென அறிவது போல, ஒன்றை மற்றொன்றாக அறிவதாம். அவ்வத்தியாசம், மித்தியாத்தியாசம், இதராத்தியாசம், இதரேதராத்தியாசம் சத்தியாத்தியாசம் என நான்கு வகைப்படும்.

**88.** **நெருப்பினொடு புணர்ச்சியால் புனற்குஅழற்சி வரல்போல்**
**நித்தம்உறும் ஆன்மாசந் நிதிஅதனில் முறையே**
**சரிப்பினொடு காண்டல்நினைவு உறல்அறிதல் வரலால்**
**தகும்தூல மெய்மித்தி யாத்தியா சந்தான்**
**இரிப்புஅரும்இந் தியங்களே இதராத்தி யாசம்**
**இதரேத ராத்தியா சம்கரணம் ஆகும்**
**தரிப்பரிய மூலஆங் காரம்அது தானே**
**சத்தியாத் தியாசம்எனச் சாற்றுவர்தக் கவரே.**

அக்கினியின் சம்பந்தத்தால் சலத்திற்கு வெப்பம் உண்டாதல் போல, நித்தியமாயுள்ள ஆத்மாவின் சந்நிதானத்தில் (சம்பந்தத்தால்) தூல சரீரத்திற்கு, முறையே நடத்தல், காண்டல், நினைத்தல், அறிதல் என்பன வருதலால் தூல சரீரம் மித்தியாத்தியாசமாம். தனக்கு வேறான இந்திரியங்களின் தொழில்களைத் தனதாகக் காண்பதால் ஞானேந்திரியம், கன்மேந்திரியம் ஆகிய இருவகை இந்திரியங்களும் இதராத்தியாசமாம். மனம் முதலியன, யான் எனது என சங்கற்பித்தலை தனதாகப் பாவித்தலால், அந்தக்கரணங்கள் இதரேதராத்தியாசமாம். தானல்லாதவற்றை தானாகக் கருதும் அகங்காரத்தைத் தானாக அறிதலால், மூல அகங்காரமாகிய அவித்தை சத்தியாத்தயசமாம், என்று மேலோர் கூறுவர்.

**89.** **ஆங்காரம் ஆன்மாவிற்கு நான்எனலால் கயிற்றின்**
**அரவம்என நிருபாதி காத்தியா சந்தான்**
**ஆங்கார இயல்ஆன்மா விற்குநான் கருத்தா**
**ஆம்எனலால் சிவப்பு*வலம் போல்சோபா திகமாம்**
**ஈங்குஆகும் கரணதருமம் ஆத்மாவிற்கு இச்சை**
**யினேன்நான்என்று இருத்தலினால் அலைபுனலில் புக்க**
**ஈர்ங்கதிரின் விம்பம்எனத் தத்தருமாத் தியாசம்**
**எனஉரைப்பர் நான்குடும்ப வான்எனநிற் கையினால்.**

அஞ்ஞான காலத்தில், நான் என்னும் சொல்லுக்குப் பொருளாக, அகங்காரத்தையும் ஆத்மாவையும் ஒன்றாகக் கொண்டு, கயிற்றில் பாம்பு போல ஒன்றாக அறிதல் நிருபாதிகாத்தியாசமாம். படிகத்தில் செவ்வரத்தம் பூவின் நிறம் கற்பிதமாக விளங்குதல் போல, நான் கருத்தா என்னுமிடத்து, அகங்காரத்தின் தருமமாகிய கருத்துருத்தவம்

* வலம் = படிகம்

ஆத்மாவின்கண் கற்பிதமாக விளங்குதல் சோபாதிகாத்தியாசமாம். நீரில் பிரதிபிம்பித்துள்ள சந்திரனது பிரதிபிம்பம் போன்று, யான் இச்சிக்கிறேன் என்று கூறுமிடத்து, அந்தக்கரணத்தின் தருமம் ஆகிய இச்சை ஆத்மாவின்கண் அத்தியாசமாய்த் தோன்றுதல் தத்தருமாத்தியாசமாம் என்று மேலோர் கூறுவர். நான் புத்திரன் முதலிய குடும்பத்தை உடையவன் என்று கூறுமிடத்து. (குளகம்)

90. மைந்தர்முதல் ஆயினா ருடன்ஆத்மா விற்கு
மண்உலகில் *பஃறியத்தர் விவகாரம் எனவே
அந்தம்உறு சம்பந்த மாத்திராத்தி யாசம்
ஆம்என்பர் இவ்அத்தியா சங்கள் தம்மால்
நந்துநிரு விகாரியான் மாஎன்றல் பெற்றாம்
நவில்தரும்ஐந்து அவத்தைஉள அவையாவை என்னில்
தொந்தம்உறு நனவொடுசொப் பனம்சுழுத்தி துரியம்
துரியாதீ தம்தானாம் அவற்றியல்பு மொழிவாம்.

படகில் இருப்போர் விவகாரத்தைப் போல, உலகில் புத்திரர் முதலானவருடன் ஆத்மாவிற்கு முடிவுள்ள சம்பந்தம் இருத்தலின் இது சம்பந்த மாத்திராத்தியாசமாம். இங்ஙனம் கூறிய எண்வகை அத்தியாசங்களை உணர்வதால் நடத்தல் முதலிய விவகாரங்கள் யாதும் ஆத்மாவிற்கு இல்லை என்பதும், அது நிர்விகாரி (விவகாரமற்றது) என்பதும் பெறப்படுவதாம். சாத்திரங்கள் கூறுகின்ற ஐந்து அவத்தைகளும் உண்டு. அவை யாவை என்னில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பனவாம். அவற்றின் தன்மைகளை இனிக் கூறுவோம்.

91. பெரும்தூல ஐம்பூதம் ஈரைந்துஇந் திரியம்
பிராணபஞ் சகமொடுநால் கரணம்இவை உருவாம்
அரும்தூல சரீரத்தில் சாத்துவித குணமோடு
அகரஎழுத்து அரிதெய்வம் விழிஇடமே ஆக
இருந்துஆக இதயமலர் அட்டதள கதியில்
விசுவசீ வனும்விராட்டு இறையும்ஒருங்கு அடைந்து
வரும்தாவில் விடயங்கள் கரணம்அனைத் தானும்
மருவிநுகர்ந் திடுதல்சா கரணமாம் அன்றே.

* பஃறியத்தர் = படகில் இருப்பவர்

தூல பஞ்சபூதம், ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் ஆகிய பத்து, பிராணாதி வாயுக்கள் ஐந்து, அந்தக்கரணம் நான்கு என்னும், இந்த இருபத்துநான்கு தத்துவ வடிவமாயுள்ள தூல சரீரத்தில் சாக்கிராவத்தை நிகழ்வதாம். இச்சாக்கிராவத்தைக்குச் சத்துவம் குணமாம், அகரம் எழுத்தாம், அதி தெய்வம் விஷ்ணுவாம், விழி இடமாம். இந்த அவத்தையில் இருதயத் தாமரையிலுள்ள எட்டு இதழ்களில் விசுவன் என்னும் சீவனும், விராட் என்னும் ஈசுவரனும் ஏகமாய்க் கூடிப் பொருந்தி, மனைவி முதலிய விடய போகம் அனைத்தையும் எல்லாக் கரணங்களாலும் அனுபவிக்கும் சமயமே சாக்கிராவத்தையாம்.

**92. பஞ்சபூ தமும்சித்த புத்தியும்நின்று ஒழிந்த**
**பதினேழின் மயமாம்சூக் குமதனு வினின்றும்**
**விஞ்சுரசோ குணம்உகர எழுத்துஅதிதெய் வம்தான்**
**விரிஞ்சன்இடம் களமாக நல்இதயம் என்னும்**
**கஞ்சமலர்க் கன்னிகா கதியில்தை சதனும்**
**கனககர்ப் பனும்மருவி நனவின்வா தனையை**
**நெஞ்சம்எனும் கரணத்தால் அனுபவிக்கை தானே**
**நிகழ்த்திடும் சொப்பனம் என்றுநிகழ்த்துவர் மூதறிஞர்.**

முன்னர்க் கூறிய இருபத்துநான்கு தத்துவங்களுள், தூல பஞ்சபூதங்களும், சித்தமும், புத்தியும் ஆகிய இவை நீங்கி, ஏனைய பதினேழு தத்துவங்களின் வடிவமாய் உள்ள சூட்சும சரீரத்தில் இருந்து, மிகுதியான முயற்சிக்குக் காரணமான இரசோ குணமும், உகர எழுத்தும், நான்முகன் ஆகிய அதி தெய்வமும், இடம் கழுத்தாக, நல்ல இதயம் என்னும் தாமரைப் பொகுட்டில், தைசதன் என்னும் சீவனும், இரணியகர்ப்பன் என்னும் ஈசுவரனும் ஒன்றாய்க் கூடி, சாக்கிர நிலையின் வாசனையால் உண்டான இன்ப துன்பத்தை மனம் என்னும் கரணத்தினால் அனுபவிக்கின்ற சமயமே நிகழ்ந்திடும் சொப்பன அவத்தை என்று மூதறிஞர் பேசுவர்.

**93. மேய்ந்துதிரி பார்ப்புஅடக்கி உறங்குஅளகு போல**
**விரிந்தகா ரியங்களையுட் கொண்டுவா தனையோடு**
**ஆய்ந்தஆன் மாஆசிரயத்து அவத்தைஅற இருக்கும்**
**அரும்பகுதி மயமாம்கா ரணஉடம்பில் தமமே**
**ஏய்ந்தகுணம் மகரஎழுத்து அரன்தெய்வம் இதயம்**
**இடமாகக் கமலமலர் பொகுட்டுநடுக் கதியில்**

**ஓர்ந்தபிராஞ் ஞனும்பரனும் ஆய்ப்பிரமா னந்தம்**
**உறுமாயா விருத்திஎனும் நுண்கரணம் தன்னால்.**

வெளியில் மேயும் குஞ்சுகளைத் தனது சிறகுகளில் அடக்கிக் கொண்டு தூங்குகின்ற பெட்டைக் கோழியைப் போல, நாம ரூப வடிவமாக எங்கும் விரித்திருக்கின்ற காரியங்கள் அனைத்தையும் உள்ளடக்கிக் கொண்டு அவற்றின் வாசனையோடு சாக்கிரம் சொப்பனம் என்னும் அவத்தைகள் இன்றி, பிரகிருதி வடிவமாய் இருக்கின்ற காரண சரீரத்தில் சுழுத்தி அவத்தை நிகழ்வதாம். மயக்கம் பொருந்திய தமோ குணத்தோடு மகர எழுத்தும், அரன் அதி தெய்வமும் ஆகிய இவற்றொடு இதய தாமரை மலரின் நடுவிடத்தில் பிராஞ்ஞன் என்னும் சீவனும், அந்தர்யாமி என்னும் ஈசுவரனும், ஒன்றாய் கூடி அவித்தியா விருத்தி என்கின்ற சூட்சும கரணத்தினால் பிரம்மானந்தத்தை அனுபவிப்பர்.

**94. அனுபவித்தல் சுழுத்தியாம் இந்நனவுஆதி கன்மூ**
**அவத்தையொடு முத்தாமம் முப்புரமுத் தானம்**
**பினும்முத்தே யங்கள்எனும் பரியாய நாமம்**
**பெறும்உரைத்த சாக்கிரத்தே அகக்கமலம் அழிந்து**
**மனவழக்கம் தவிர்ந்துபரம் தனைச்சிந்தித் திடலே**
**வரும்துரியம் அப்பரமான் மாவில்மனம் அடங்கல்**
**முனம்உரைத்தல் செய்துரியா தீதம்எனப் புகல்வர்**
**மொழிந்தஅவற்றுள் தாவரங்கள் பெறுதல்இருள் சுழுத்தி.**

இங்ஙனம் பிரம்மானந்தத்தை அனுபவிக்கின்ற சமயமே சுழுத்தி அவத்தை ஆகும். இதுவரை கூறப்பட்ட சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்று அவத்தைகள் முத்தாமமும், முப்புரமும், மூன்று ஸ்தானங்களும், பின்னும் மூன்று தேசங்கள் என்று கூறுகின்ற பரியாய நாமங்களைப் பெறுவனவாம். முன்னர்க் கூறிய சாக்கிர அவத்தையில் அவ்விதயத் தாமரை மலர் நீங்கி, மனமானது சலனம் இன்றி பிரம்மத்தை மனத்தில் இருத்திச் சிந்தித்தலே துரிய அவத்தையாம். பிரம்மத்தினிடத்தே மனமானது அடங்கி இருத்தலே முன்னர்க் கூறிய துரியாதீதம் என்று மேலோர் கூறுவர். கூறிய ஐந்து அவத்தைகளுள் புல், மரங்கள் முதலானவை அடைவது இருள் மயமான சுழுத்தி அவத்தை ஆகும்.

**95. விலங்குமுத லனபெறுவ சுழுத்தியொடு கனவால்**
**விண்ணவர்க்கு நனவுநரர்க்கு அம்மூன்றும் ஆகும்**

**கலங்கல்அறு மருளர்க்குத்து ரியம்மகா யோகி**
**கட்குவரு வதுதுரியா தீதம்முதல் மூன்றும்**
**மலங்கல்உறும் மனுடர்க்குத் தமில்தாமே தோன்றி**
**வரும்பந்த மாம்ஏனைஇ ரண்டும்யோ கத்தால்**
**இலங்குமுத்தி சாதனமாம் அவைஒன்றிலே ஒன்று**
**இலாமையால் காலதேசங் கள்நிய மம்பொய்.**

விலங்கு முதலான பிராணிகள் சுழுத்தி அவத்தையுடன் சொப்பன அவத்தையையும் அடைவனவாம். இந்திரன் முதலான தேவர்களுக்கு சாக்கிராவத்தை மட்டுமே உண்டு. சீவர்களுக்கு இம்மூன்று அவத்தையும் உண்டாகும். கலக்கமற்ற அப்பியாசிகளுக்கு உண்டாவது துரியம். ஆத்ம வடிவாக விளங்குகின்ற பெரிய யோகிகளுக்கு வருவது துரியாதீதமாம். அவ்வைந்து அவத்தைகளுள் முதலில் கூறிய மூன்று அவத்தைகள் சலனம் உடைய சீவர்களுக்கு தம்மில் தாமே தோன்றி வருகின்ற சம்சார பந்தமாம். மற்ற இரண்டு அவத்தைகளும் யோக சாதனத்தால் உண்டாகி என்றும் விளங்குகின்ற வீடுபேற்றை அடைவதற்கு உரிய சாதனமாம். ஐந்து அவத்தைகளுள் ஓர் அவத்தையில் மற்றோர் அவத்தை இல்லாமையால், கால தேச நியமங்கள் என்பது பொய்யே ஆகும்.

**96. சொற்றஅவத் தைகளில் *அனு சூதனாய் அறியும்**
**துரியனே உளன்நனவு கனவில்அறிவு உண்மை**
**பெற்றனம்அச் சுழுத்தியினில் பெறல்உரைப்பின் எழுந்து**
**பிறிதுஒன்றும் அறியாது சுகத்துஉறங்கி னேன்என்று**
**உற்றஇரு நினைவும்அனு பவம்சுழுத்தி அதனில்**
**உறாதுவரா எனும்அருத்தா பத்தியினால் பொருள்கள்**
**முற்றும்அடக்கு இருள்விழிகாண் குதல்எனக்கா ரியங்கள்**
**முழுதையும் உட்கொண்டபேர் அவித்தைஇரு ளினையும்.**

மித்தை எனக் கூறிய சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளிலும் நீங்காதனவாய் இருந்து அந்த அந்த அவத்தைகளை அறியும் கூடத்தன் ஒருவனே இருக்கின்றான். அதனால் கூடத்தன் சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் அறிவாய், சத்து வடிவமாய் இருக்கின்றான் என்பது பெற்றனம். அந்தச் சுழுத்தி அவத்தையில் ஆன்மா உண்டு எனக் கூறுவது விழித்து எழுந்து வேறு ஒன்றையும் அறியாமல், நான் சுகமாகத் தூங்கினேன்

* *அனுசூதனாய் = நீங்காதவனாய்*

என்று கூறுகின்ற இரு நினைவுகளும் சுழுத்தி அவத்தையில் அனுபவம் ஆனதாலும், சுழுத்தியில் அனுபவம் இல்லாமல் உண்டாக மாட்டாது என்னும் அருத்தாபத்தி பிரமாணத்தினாலும், பொருள்கள் முழுவதையும் தன்னுள் அடக்கிக் கொண்டு இருக்கின்ற இருளைக் கண்கள் பார்ப்பது போல, தனது காரியங்களான நாம ரூப வடிவமான உலகம் அனைத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டு இருக்கின்ற பெரிய அஞ்ஞானம் ஆகிய இருளினையும். (குளகம்)

**97. அந்தஅவித் தையினதுசூக் குமவிருத்தி தன்னில்**
**அலையும்மரத்து இலைஇடையின் வெண்ணிலாத் துளிபோல்**
**வந்துஇலங்கி அடங்குநிசா னந்தக்கூற் றினையும்**
**வருகரணாந் தரஅபேட்சை இன்றியே ஆத்மா**
**முந்துஉரைசெய் சுழுத்தியினில் அனுபவிக்கை யாலே**
**மொழிந்தஅதனில் அறிவுஉளதாம் ஏதும்அறி யாமல்**
**நந்துசுகத்து உறங்கினேன் எனற்குஏது விடய**
**ஞானம்இலா மையும்குடும்ப நிவர்த்தியும் ஆம்முறையே.**

காற்றினால் அசைகின்ற மர இலைகளின் இடை இடையே வந்து தோன்றும் வெண்ணிலாவின் சிறிய ஒளியைப் போல, மேற்கூறிய அவித்தையின் சூட்சும விருத்தியில் தோன்றி விளங்கி மறையும் நிச ஆனந்த அம்சங்களை, (சாக்கிர சொப்பனங்களில் தொடர்ந்து வருகின்ற) கரணங்களின் சகாயமில்லாமல், சுழுத்தி அவத்தையில் அனுபவித்துக் கொண்டு வருதலால், அப்பொழுது கரணங்களினும் வேறுபட்ட அறிவு (ஆத்மா) உண்டு என்பது பெறப்படுவதாம். நான் யாதொன்றும் அறியாமல் மிகுந்த சுகத்துடன் தூங்கினேன் எனக் கூறுவதற்குக் காரணம் முறையே ஏதும் அறியாமைக்கு விடய ஞானம் இல்லாமையும், சுகமாகத் தூங்கினேன் என்பதற்குக் குடும்பபார நிவர்த்தியும் ஆகும்.

**98. மன்றசுழுத் தியில்அதற்குக் கரிஆம்ஆ னந்த**
**மயஉயிர்உண்டு எனில்ஒருவர் ஆகிலும்ஆண்டு அறிந்தேன்**
**என்றல்இலது ஏதுகா ரணம்எனில்ஓர் பொருளை**
**எடுப்பநீர் மூழ்கினோன் ஆண்டுஉளதுஎன் பதுமேல்**
**சென்றுஅலது புகல்ஒணா ததுபோலக் கருமச்**
**செயலினால் எழுந்துதுணை யாம்கரணம் கூடின்**

அன்றிஅதில் அறிந்தபொருள் கூறஒணாது ஆகும்
ஆதலினால் உயிர்சச்சி தானந்த ஒளியாம்.

சுழுத்தி அவத்தையின் கண் அதற்குச் சாட்சி ஆகிய ஆனந்த வடிவ ஆத்மா உறுதியாக இருக்கின்றது எனில், அச்சுழுத்தி அவத்தையில் ஒருவரும் நான் ஆத்மாவை அறிந்தேன் என்று கூறுதல் இல்லையாம். இதற்குக் காரணம் யாது எனில், கிணற்றில் வீழ்ந்த ஒரு பொருளை எடுப்பதற்கு மூழ்கினவன் அக்கிணற்று நீரில் அப்பொருள் இருக்கின்றது என்பதை அந்நீரின் மேல் வந்தல்லாமல் கூற இயலாதாம். அதுபோலச் சீவன் கால கரும வசத்தால் சுழுத்தி அவத்தையில் இருந்தும் விழித்து எழுந்து, தனக்கு உதவும் கரணங்களோடு கூடினால் அல்லாமல் அச்சுழுத்தியில் தான் கண்டு அனுபவித்த பொருளைச் சொல்ல இயலாது. ஆகையால் அனைத்து அவத்தைகளுக்கும் சாட்சியாய் இருக்கின்ற ஆத்மா, சத்து சித்து ஆனந்த சுயம் பிரகாச வடிவமாம்.

99. அன்னமொடு பிராணன்மனம் விஞ்ஞான மிக்க
ஆனந்தமய மாம்ஐங் கோசம்உள அவைதாம்
சொன்னமுறை சுக்கிலசோ ணிதத்துஆகி நின்ற
தூலஉடம்பு அன்னமய கோசம்சூக்கு மமெய்
மன்னல்உறும் பிராணனும்வாக்கு ஆதியுமே பிராண
மயகோசம் மனமும்ஞா னேந்தியமும் புணரில்
பன்னுமனோ மயகோசம் துரியன்சிற் சாயை
பதிதலொடு லோகாந்த குந்தமே போன்று.

அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம் மிகுந்த ஆனந்தமய கோசம் என ஐந்து கோசங்கள் இருக்கின்றன. அக்கோசங்களைக் கூறிய முறைப்படி சுக்கில சுரோணிதங்களால் உண்டாகி இருக்கின்ற தூல சரீரம் அன்னமய கோசமாம். சூக்கும சரீரத்தில் பொருந்தி இருக்கின்ற பிராணன் முதலான வாயுக்களும், வாக்காதி கன்மேந்திரியங்களும் கூடிப் பிராணமய கோசமாம். மனமும் ஞானேந்திரியங்களும் கூடி மனோமய கோசமாம். ஆன்மாவின் பிரதிபிம்பத்தோடு பொருந்துதலுடன், கூர்மையான இரும்பை நுனியில் உடைய ஈட்டியைப் போல. (குளகம்)

100. இருந்தஆங் காரமும்ஞா னேந்திரிய மும்கூடில்
இசைதல்உறும் விஞ்ஞானமய கோசம் ஆகும்
பொருந்துகா ரணதேக ரூபஅவித் தையும்தாம்
புகல்விடய தரிசனசா மிப்பியசை யோகம்

**தரும்பிரிய மோதமொடு பிரமோதம் என்னத்**
**தக்கஅவையும் ஆனந்த மயகோசம் நான்என்று**
**அரந்தைதரு விஞ்ஞான மயகோச வடிவாம்**
**ஆங்காரம் தனைஆன்மா என்பார்அறிவு இழந்தோர்.**

முற்கூறிய ஈட்டியைப்போல இருக்கின்ற, அகங்காரமும் ஞானேந்திரியங்களும் கூடி விஞ்ஞானமய கோசமாம். பொருந்தி இருக்கின்ற காரண சரீர வடிவமான அவித்தையும், மூவகையாகக் கூறப்படுகின்ற, விடயங்களைக் காணுதல், அடைதல், அனுபவித்தல் என்பனவற்றால் முறையாக ஏற்படும் பிரியமும், மோதமும், பிரமோதமும் கூடி ஆனந்தமய கோசமாம். நான், நான் என்று எண்ணுமாறு செய்து அதனால் துன்பம் தருகின்ற விஞ்ஞானமய வடிவமாய் உள்ள அகங்காரத்தினை, அறிவை இழந்தோர் ஆத்மா என்று கூறுவர்.

**101. நீலகுண விசேடமொடுஉற் பலவிசேடி யம்தான்**
**நிகழ்தர *வேத்தியம் ஆதல்போல் இளைத்தேன் எனின்நான்**
**தூலதனு வொடும்கேட்பன் நான்எனின்இந் தியத்தும்**
**சூழ்வன்நான்எனில் கரணமுடனும் வேத்தி யமாய்ச்**
**சாலஉயர் துரியன்நிற் கையினால் அகங்காரம்**
**தான்ஆன்மா அன்றுஆகில் அசேதன ஆங்காரம்**
**சீலம்உறு புறவிடயம்அறிவதுஏள் எனில்ஊசிக்**
**கலின்முன் ஊசிசேட்டித் திடுதல் போலும்.**

ஒருவன் நீலோற்பலம் என்னும் போது, நீல நிறமாகிய கருங்குவளை மலரும் சிறப்பாய் அறியப்படுதல் போல, நான் இளைத்தேன் என்னும் போது தூல சரீரத்தோடும், நான் கேட்டேன் என்னும் போது ஞானேந்திரியங்களோடும், நான் நினைத்தேன் என்னும் போது அந்தக் கரணத்தோடும் கூடி, மிக உயர்ந்த ஆன்மாவினால் அறியப்படுவதாய் இருத்தலால் அகங்காரமானது எவ்விதத்தும் ஆன்மா அன்று. அங்ஙனம் ஆகில், சடவடிவுடைய அகங்காரம் ஒழுக்கமுடன் வெளி விடயங்களை அறியும் தன்மை எப்படி எனில், காந்தக் கல்லின் முன்னர் இரும்பினால் ஆகிய ஊசி தானே அசைவது போலும் என அறிக.

---

** வேத்தியம் = அறியப்படுவது*

102. வெயிலினிடைக் காட்டுபடி மக்கலம்உள் மனையை
விளக்குதல் போலும்துரியன் தன்திருச்சந் நிதியில்
இயல்உறுதற் சைதன்யப் பதிவிம்பம் தன்பால்
எய்தலும்பெற் றடுதலினால் அச்சடஆங் காரம்
பயில்விடய உணர்வினொடு நனவுகனவு உழன்று
பகர்சுழுத்தி தனில்அடங்கும் அவ்வழக்கம் உரைப்பின்
செயிர்தரும் ஆங்காரம்அடங் குறுசுழுத்தி தன்னில்
செறிஅவித்தை உட்சுவரும் துயில்கதவும் அன்றி.

சூரிய ஒளியைப் பிரதிபிம்பித்துக் காட்டுகின்ற கண்ணாடி வீட்டின் உள்ளே இருளை நீக்குதல் போல, ஆன்மாவினது அழகிய சந்நிதானத்தில் அந்தச் சேதனத்தின் பிரதிபிம்பமானது இயல்பாய் அகங்காரத்தினிடத்தில் சேர்ந்து இருத்தலால், அந்தச் சடவடிவ அகங்காரம் வெளியில் உள்ள விடயங்களின் அறிவுடன் கூடி கனவு நனவுகளில் உழன்று சுழுத்தியில் அடங்கும். அவ்வாறு நிகழ்வதைக் கூறும் போது துன்பத்தைத் தரும் அகங்காரம் ஒடுங்குகின்ற சுழுத்தி அவத்தையில் பொருந்தியுள்ள அவித்தை என்னும் உள்வீட்டுச் சுவரும், துக்கம் என்னும் கதவும் ஆகிய அவ்விரண்டையும் அல்லாமல். (குளகம்)

103. நடுக்கம்அறு தீபமாம் தனைத்தானே விளக்கல்
நவில்பிரத்தியக் ஆன்மாவின் சோதிஆம் பின்னர்த்
தொடங்கிவரு காலகரு மாதிசமீ ரணனால்
துயிற்கதவம் திறந்திடஅவ் அவித்தைஅது தன்னில்
அடுக்கும்முதல் அவத்தை மகதத்துவமாம் தெற்றி
அடுத்துஇருந்த ஆங்காரம்எனும் வெண்பளிங்கு மணிதான்
படைத்தல்அரும் துரியச்சுடர்ப் பதிவிம்பம் பதியப்
பட்டுமுனம் போல்சீவன் என்னவே நின்று.

அசைவிலாத தீபத்தைப் போலத் தன்னைத் தானே விளங்கச் செய்வது பிரத்தியக் ஆன்மாவின் சுயம் பிரகாசமாம். தொடர்ந்து வருகின்ற காலம், கருமம் முதலியவற்றின் காரணமாகமாகப் பிராண வாயுவால் உறக்கம் என்னும் கதவு திறக்க, பின்னர் அந்த அஞ்ஞானத்தின்கண் முதலாவது அவத்தையாகிய மகதத்துவம் என்ற வாசற்படியிலே சேர்ந்து இருக்கின்ற அகங்காரம் என்று கூறப்படுகின்ற வெண்மையான படிக மணியில் சுயம் பிரகாசமான அந்தப் பிரத்தியக் ஆன்மப் பிரகாசத்தின் பிரதிபிம்பம் பொருந்தப் பெற்று முன்போலவே சீவன் என்று கூறுமாறு நிலைபெற்று. (குளகம்)

**104\. செற்பனம்ஆம் நடுமனையை விளக்கியே பொறியாம்**
**சுருங்கையினில் போந்துநனவு எனும்முன்றில் விளக்கும்**
**முற்பகரும் காலகருமா திசமீ ரணனால்**
**மூடலும்அத் துயிற்கத வம்காரிய ஆங்கார**
**நற்படிக மணிஅவித்தை தனில்அடங்கச் சென்று**
**நனவுகனவு எனும்முன்றில் நடுமனைகள் இருளும்**
**தற்படிக மணிகதுவும் அறிவுஒளிதன் முதலாம்**
**தனித்துரிய விளக்கைஅடைந்து ஏகமாம் அன்றே.**

சொப்பனம் ஆகிய நடு வீட்டை விளங்கச் செய்து, பின்னர் இந்திரியங்கள் என்னும் சன்னல் வாயில்களால் வெளியில் வந்து சாக்கிரம் என்னும் வெளி முற்றத்தை விளங்கச் செய்யும். பின்னர் முன் கூறப்பட்ட கால கருமங்கள் முதலிய காரணத்தால் எழுகின்ற மகாப் பிராண வாயுவால் அந்த உறக்கமாகிய கதவு மூடவும் உடனே காரியம் ஆகிய அகங்காரம் என்னும் படிக மணி காரணம் ஆகிய அஞ்ஞானத்தின்கண் போய் அடங்கும். அதனால் சாக்கிரம் சொப்பனம் என்னும் வெளி முற்றமும் நடு வீடும் ஆகிய இரண்டும் இருளாகும். இவ்வாறு அவை இருளாக அந்த அகங்காரம் என்னும் படிக மணியின்கண் பிரதிபிம்பித்துள்ள சித்பிராகாசம் தனக்கு முதலாயுள்ள பிரத்தியக் ஆத்ம பிரகாசத்தை அடைந்து ஒன்றாகும்.

**105\. இத்திறம்இங்கு அகமினது பாவாபா வங்கள்**
**இலங்குநனவு ஆதிகளின் அவிகாரம் ஆகி**
**உய்த்துஉணரும் உயிர்வேறுஒன்று இருத்தலினால் என்றும்**
**உரைத்தஅகம் ஆன்மாஅன்று எனஅறிக புறம்பு**
**வைத்தவிட யங்கள்தனக்கு ஆன்மாவாய்ப் பரமான்**
**மாவிற்கு வேத்தியம்ஆ தலில்சடா சடமாய்**
**அத்தம்அதில் முன்பின்போல் ஒளிஇலதுஆம் அகந்தைக்கு**
**ஆகம்சிற் சாயைஆன் மாவுடன்ஆம் புணர்ச்சி.**

இவ்விதம் இங்கு விளங்கும் சாக்கிரம் முதலிய அவத்தைகளில் அகங்காரத்தினது தோற்ற ஒடுக்கங்களை நிர்விகாரமாய் இருந்து உணரும் ஆன்மாவாகிய ஒரு பொருள் அதற்கு வேறாக இருப்பதால் எக்காலத்தும் அகங்காரம் ஆன்மா அன்று என்று நீ அறிவாயாக. வெளியில் உள்ள பொருள்களுக்கு அதிட்டானமாகவும் பிரம்மத்திற்கு வேறாகாமலும் இருப்பதால் சட சித்து வடிவமாம், முகம் பார்க்கும் கண்ணாடியின்

முன்புறம் ஒளி உடையதாய், பின்புறம் ஒளி இல்லாததாய் இருக்கின்றது போல அகங்காரத்திற்கு சடமான தூல சரீரத்தோடும், சித்தான ஆன்மாவோடும் சம்பந்தம் உண்டாம்.

**106. வெப்பினேன் நான்எனலால் சிற்பதிவிம் பந்தான்**
**மேவும்ஆங் காரசம் பந்தத்தால் தூல**
**மெய்ப்படுவ வெம்மை முதலன அறிதல் கரும**
**விளைவுஆகிக் கருமசமாம் நான்அறிந்தேன் எனலால்**
**தப்பரிய சிற்சாயை உடன்அவ்ஆங் கார**
**சம்பந்தம் சிருட்டிமுதல் முத்திஅளவு ஆகிப்**
**பொய்ப்புஅரிய இயல்புஆகும் நான்கருத்தன் எனலால்**
**புணர்ச்சியில்ஆன் மாவினுடன் அனையதின் சம்பந்தம்.**

நான் தபிக்கின்றேன் என்று கூறுவதால், பிரத்தியக் ஆன்மாவின் பிரதிபிம்பத்தைப் பொருந்தியுள்ள அகங்காரம் தூல தேகத்தில் தோன்றும் உஷ்ணம் முதலியவற்றை அறிதல் கருமத்தால் உண்டான கருமஜதாதான்மிய சம்பந்தமாம். நான் இதனை அறிகின்றேன் என்று கூறுவதால், சிற்சாயையோடு அகங்காரத்திற்குள்ள சம்பந்தம், சிருட்டி தொடங்கி மோட்சம் அடையும் அளவும் கெடாது இருத்தலால், இயல்பாய் உண்டான சகஜ தாதான்மிய சம்பந்தமாம். நான் செய்கின்றேன் என்று கூறுவதால், அசங்கமாயுள்ள பிரத்தியக் ஆன்மாவோடு அவ் அகங்காரத்திற்குள்ள சம்பந்தமாவது. (குளகம்)

**107. இசைப்பில்அது பிராந்திசென் னியம்ஆகும் என்னும்**
**இவைமுழுதும் செப்புதிரி சியவிவே கந்தான்**
**மிசைப்புகல்வ அஞ்ஞானம் ஆவரணம் மிக்க**
**விட்சேபம் பரோட்சம்அப ரோட்சஞா னம்பின்**
**வசைப்படுதல் உறும்சோக நிவர்த்திஅதன் மீது**
**வருநிரங் கிசதிருத்தி எனும் அவத்தை ஏழும்**
**திசைப்பிறுதல் உறும்சீவர்க்கு ஆவனவாம் இவற்றின்**
**திறம்அனைத்தும் முறைபிறழாது இனிஎடுத்து மொழிவாம்.**

கூறுமிடத்து அந்தச் சம்பந்தமே பிராந்தியால் உண்டான பிரமஜ தாதான்மிய சம்பந்தமாம். இங்ஙனமாகக் கூறியவை முழுவதும் திரிசிய விவேகமாம். இனிக்

கூறப்படுவன, அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்ச ஞானம், அபரோட்ச ஞானம், சோக நிவிர்த்தி, நிரங்குச திருப்தி என்பனவாம். இந்த அவத்தை ஏழும் மயக்கம் அடைந்திருக்கின்ற சீவர்களுக்கு உண்டாவன. இவற்றின் தன்மைகள் அனைத்தையும் இனி ஒழுங்காக எடுத்துச் சொல்லுவோம்.

**108.** **புன்னெறிகொள் குடும்பியாய் வலிஅறும்ஓர் சித்துப்**
**போலியாம் சீவன்உயர் சுருதிவிசா ரத்தின்**
**முன்னம்ஒரு தன்சொரூபம் ஆகியபேர் ஒளியாம்**
**முதல்துரிய நிலைஅறியாது இருந்திடல்அஞ் ஞானம்**
**பின்ஒருகால் உயிர்இயல்பு கூறும்இடத்து இன்று**
**பிரத்தியாகான் மாத்தோன்றாது எனும்கலக்கம் இரண்டும்**
**பன்னியஅஞ் ஞானகா ரியம்ஆகும் என்னப்**
**பகர்தரும்ஆ வரணம்என்பர் பலகலைகற்று உணர்ந்தோர்.**

அற்பச் செயல்களை மேற்கொண்டு, குடும்பப் பற்று உடையவனாய், தனது உண்மை வடிவத்தை அறிவதற்கு வலிமை இன்றி இருக்கின்ற சிதாபாசன் ஆகிய சீவன், வித்தைகளுக்கு உள்ளே மிக உயர்ந்துள்ள வேதாந்த ஆய்வு செய்வதற்கு முன்பு, ஒப்பற்ற தனது உண்மை வடிவாய் இருக்கின்ற மிகுந்த தூய பரம்பொருள் வடிவமான சுயம் பிரகாசமாய் துரிய நிலையில் விளங்கும் பிரத்தியக் ஆன்மாவை அறியாது இருந்த தன்மையே அஞ்ஞானமாம். பின்னர் ஒரு சமயம் சிதாத்மாவின் இலக்கணத்தை உபதேசிக்கும் இடத்து, ''பிரத்தியக் ஆன்மா இல்லை'', ''இருந்தால் தோன்றாதா'' என்னும் மயக்கம் இரண்டையும், முன்னர்க் கூறிய அஞ்ஞானத்தின் காரியம் ஆகிய ஆவரணம் என்று சாத்திரங்களைக் கற்றுணர்ந்த பெரியோர்கள் கூறுவர்.

**109.** **கருத்தனும்ஒண் கருமபல போத்துருவும் தானாய்க்**
**கருதிஉடம்பு அபிமானி ஆம்சீவன் தானே**
**உரைத்தல்அரும் விட்சேபம் சுருதிகுரு உண்மை**
**உரையால்உண்டு உயிர்எனவே அறிதல்அசத்து என்னும்**
**நிரைத்தமுதல் ஆவரண நிவர்த்தகமாம் பரோட்சம்**
**நீபிரமம் எனும்வேத மொழிவிசா ரத்தால்**
**வரத்துரியன் தான்எனவே அறிந்திடுதல் அபானா**
**வரணநிவர்த் தகம்ஆகும் அபரோட்ச ஞானம்.**

சரீர அபிமானியான சீவன் கருமத்தை செய்யும் கருத்தாவும், சிறந்த கருமப் பயனை அனுபவிக்கும் போக்தாவும் தானாக எண்ணுதல் விட்சேபமாம். வேதமும் குருவும் கூறும் மகா வாக்கியத்தைக் கேட்டு ஆன்மா இருக்கின்றது என்று உணர்தல் முன்னர்க் கூறிய "பிரத்தியக் ஆன்மா" இல்லை என்னும் முதலாவது ஆவரணத்தை நிவர்த்தி செய்கின்ற பரோட்ச ஞானமாம். நீயே பிரம்மம் என்று கூறுகின்ற மகாவாக்கிய விசாரத்தினால் அனைத்திலும் சிறந்துள்ள பிரத்தியக் அபின்ன பிரம்மமே தான் என்று உணர்தலே, ஆன்மாவை "இருந்தால் தோன்றாதா" என்னும் ஆவரணத்தை நிவர்த்தி செய்யும் அபரோட்ச (அனுபவ) ஞானமாம்.

**110. துரியநிலை அடைந்ததன்பின் நான்கருத்தன் நான்போத்**
**திருஎன்னும் சீவஉருத் துக்கம்அகன் றிடுதல்**
**அறியதுஎனும் அச்சோக நிவிர்த்தியாம் செய்தே**
**அடைதல்உறும் பலன்அனைத்தும் அடைந்தனம்என்று அமைதல்**
**பரிவுஇல்நிரங் கிசதிருத்தி இரண்டும்அப ரோட்ச**
**பலம்ஆகும் அறிவுஉருவாம் ஆன்மாவிற்கு என்றும்**
**தெரியும்அப ரோட்சம்உளது ஆதலினால் அவற்குச்**
**சேர்தல்எவ்வாறு அஞ்ஞான முதலனஇங்கு என்னில்.**

ஆன்ம சாட்சாத்கார நிலையை அடைந்து அதன்பின் நான் கருமத்தைச் செய்பவன், நான் கரும பலத்தை அனுபவிப்பவன் என்று எண்ணுகின்ற சீவத்துவ வடிவத் துன்பம் நீங்குதலே அடைதற்கு அரிது என்று கூறப்படும் சோக நிவர்த்தியாம். நாம் செய்தற்கு உரிய கருமம் அனைத்தும் செய்து பெறுவதற்கு உரிய பேறு அனைத்தையும் பெற்றோம் என்று மகிழ்ச்சியைப் பொருந்தி இருப்பதே தடையற்ற ஆனந்தமாம். சோக நிவர்த்தி, நிரங்குச திருப்தி என்னும் இரண்டும் அபரோட்ச ஞானத்தின் பயனாம். ஞானவடிவ ஆன்மாவிற்கு என்றும் அறியும் தன்மை ஆகிய அபரோட்ச ஞானம் இருக்கின்றமையால் அவ்வான்மாவிற்கு இங்கு அஞ்ஞானம் முதலிய ஏழு அவத்தைகள் பொருந்துவது எவ்வாறு என்றால். (குளகம்)

**111. கடந்துநதி பதின்மர்தமை எண்ணுங்கால் ஒருவன்**
**கண்டுநவ புருடரைப்பத் தாமவன்தான் எனவே**
**அடைந்துஅறியாது இருத்தலே அஞ்ஞானம் பத்தாம்**
**அவன்இலைகா ணப்படான் என்னும்இரு பிராந்தி**

**இடும்பைதரும் ஆவரணம் நதிஉள்அவன் இறந்தான்**
**எனும்துக்கம் விட்சேபம் வேறுஉரியன் மொழியால்**
**கிடந்ததொரு துறக்கம்என உளன்எனவே அறிதல்**
**கிளர்ந்தஅவன் இலைஎன்ற லொடுபகைத்தல் பரோட்சம்.**

பத்து ஆடவர்கள் ஒன்று கூடி ஆற்றைக் கடந்து சென்று தங்களை எண்ணும் பொழுதில், அவருள் ஒருவன் ஒன்பது பேரை எண்ணிப் பார்த்து, பத்தாவது ஆடவன் தானாக இருந்தும் தன்னை அறியாது இருந்தமையே அஞ்ஞானமாம். பத்தாமவன் இல்லை, இருந்தால் காணப்படாமல் இருப்பானா என்னும் இருவகை மயக்கமே துன்பத்தைத் தருகின்ற ஆவரணமாம். அந்த ஆற்றிலே அப்பத்தாமவன் இறந்தான் என்னும் துக்கமே விட்சேபமாம். ஒருவனது சொல்லால் சொர்க்கம் இருக்கின்றது என்று அறிவது போல, பத்தாமவன் இருக்கின்றான் என்று அறியும் அறிவே, கூறிய அப்பத்தாவது ஆடவன் இல்லை என்பதற்கு பகையான பரோட்ச ஞானமாம்.

**112.** **சங்கநவ புருடரொடு முறைஎண்ணி நீயே**
**தசமன்எனத் தனைத்தா னேஇருந்தபடி அறிதல்**
**இங்குவரு தசமன்கா ணப்படான் எனலோடு**
**இகலும்அப ரோட்சமாம் நதியுள்இறந் தனன்என்று**
**அங்குவரு துயர்அகறல் சோகநிவர்த்தி யதாம்**
**அடைந்துதனது இயல்நிலையில் சுகித்துஇருத்தல் தானே**
**துங்கநிரங் கிசதிருத்தி என்றுஅறிக இனிமேல்**
**தொல்வேத வாக்கியமாம் விசாரம்எடுத்து உரைப்பாம்.**

பின்னர் வந்த மற்றொருவன், கூட்டமாய் உள்ள ஒன்பது ஆடவருடன் பத்தாமவனைக் கூட்டி, முறையாக எண்ணி, நீயே பத்தாமவன் எனக் கூற, அப்பத்தாமவன் தெளிந்து தன்னைத் தானே உள்ளபடி அறிதல், இங்கு பத்தாமவன் இருந்தால் காணப்படானா என்னும் மயக்கத்திற்குப் பகையான அபரோட்ச ஞானமாம். ஆற்றிலே இறந்து விட்டான் என அவ்விடத்தே வந்த துக்கம் நீங்குவதே சோக நிவர்த்தியாகும். தன்னுடைய இயல்பான நிலையை அடைந்து இன்பமாய் இருப்பதே மேலான தடையற்ற ஆனந்தம் என்று அறிக. இனி மேன்மையும் பழமையும் ஆன வேத வாக்கிய விசாரத்தை எடுத்துக் கூறுவாம்.

**113.** **விரிந்தவிதி நிடேதம்சித் தார்த்தபோ தகமாய்**
**வேதவாக் கியம்மூன்று திறன்ஆகும் அவற்றுள்**

**வருந்திமகம் முதலனசெய்க என்றல்விதி விடுக**
**மதுபானா திகள்என்கை நிடேதம்விதி இன்றித்**
**திருந்துசிவ உயிர்அயிக்கப் பொருள்தனையே தெருட்டல்**
**சித்தார்த்த போதகவாக் கியம்ஆகும் என்பர்**
**பொருந்துமறை நான்கினும்நான்கு உளவாம்சித் தார்த்த**
**போதகம்ஆ கியமகாவாக் கியங்கள் அன்றே.**

வேத வாக்கியமானது விரிவாய் உள்ள விதி வாக்கியமும், நிடேத வாக்கியமும், சித்தார்த்த போதக வாக்கியமும் ஆக மூன்றுவகை ஆவதாம். அவ்வாக்கியம் மூன்றினுள் சிரமமுற்று யாகம் முதலிய கர்மங்களைச் செய்வாய் என்று கூறுவது விதி வாக்கியமாம். கள்குடித்தல் முதலியவற்றை விடக்கடவாய் என்று கூறுவது நிடேத வாக்கியமாம். விதி நிடேதம் இன்றித் திருத்தமாய் சீவப்பிரம்ம ஐக்கியத்தைத் தெளிவாகக் கூறுதல் சித்தார்த்த போதக வாக்கியமாம் என்று வேத வாக்கியங்களைக் கூறுவர். கருமம், உபாசனை, ஞானம் என்னும் மூன்று காண்டங்களும் பொருந்தியுள்ள ரிக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களிலும், சித்தார்த்த போதகம் ஆகிய மகா வாக்கியங்கள் நான்கு இருக்கின்றன.

**114.** **உரைத்தவையுள் சிறந்ததுநற் சாமமறை புகலும்**
**ஓங்குதத்வ மசிமகாவாக் கியம்அங்கு அதற்குப்**
**பரத்தல்உறு தற்பதம்தொம் பதத்தொடுஅசி பதமாய்ப்**
**பதம்மூன்றுஆம் சிவம்உயிர்அங்கு அவற்றுஅயிக்கம் முறையே**
**அருத்தம்என லாம்பதமே பதார்த்தமொடு வாக்கி**
**யார்த்தங்கள் தமக்குச்சம் பந்தம்முறை மூன்றாம்**
**விரிக்கில்அவை தாம்சமா னாதிகர ணம்பின்**
**விசேடவிசே டியம்இலக் கியமொடுஇலக் கணம்ஆம்.**

கூறிய நான்கு வாக்கியங்களுள் சிறப்புடன் விளங்குவது நல்ல சாம வேதமானது கூறும் உயர்வான தத்துவமசி மகா வாக்கியமாம். தத்துவமசி மகா வாக்கியத்திற்கு தத்பதமும் துவம்பதமும் அசிபதமும் எனப் பதம் மூன்று உண்டு. அவ்வாக்கியத்தில் உள்ள தத், துவம், அசி என்னும் பதங்களுக்கு முறையே பிரம்மமும் ஆத்மாவும் அவ்விரண்டின் ஐக்கியமும் பொருள்என்று கூறலாகும். பதமும், பதப்பொருளும், வாக்கியார்த்தமும் ஆகிய இந்த மூன்றிற்கும் முறையே சம்பந்தம் மூன்று விதமாம். விரித்துக் கூறும் இடத்து அவை சமானாதி கரண சம்பந்தம், பின்னர் விசேடண விசேடிய சம்பந்தம், இலக்கிய இலக்கண சம்பந்தம் ஆவதாம்.

**115. அறைதல்உறு பதங்கள்தமக்கு இருபொருள்இங்கு உளவாம்**
**அவைவாச்சி யார்த்தம்இலக் கியார்த்தம்என அவற்றுள்**
**முறைமைதரு விராட்புருடன் முதல்ஆகி நின்ற**
**மூஉருவ ஈசனும்அப் பிரமமும்ஒன்று ஆகிப்**
**பிறிதல்அற நிற்புழிதற் பதத்திற்குஎய் துறுவ**
**பெயர்வாச்சி யார்த்தம்முக்கி யார்த்தம்அபி தார்த்தம்**
**நெறிகொள்வி சுவாதிகளும் துரியனும்ஒன்று ஆகி**
**நிற்புழிதொம் பதத்திற்கு வரும்அம்மூ வகையும்.**

இத்தத்துவமசி மகா வாக்கியத்தில் கூறப்படுகின்ற தத், துவம் என்னும் சொல்லுக்கு இருவிதப் பொருள்கள் உள்ளன. அப்பொருள்கள் வாச்சியார்த்தம், இலட்சியார்த்தம் என்பனவாம். அவ்விரண்டனுள் முறையாக நிற்கின்ற விராட்புருடன், இரணிய கருப்பன், அந்தரியாமி ஆகி மூன்று வடிவாய் விளங்கும் ஈசுவரனும், அந்தப் பிரம்மமும் ஏகமாகிப் பிரிவு இன்றி நின்ற போது தத்பதத்திற்குப் பொருந்தி இருக்கின்ற பெயர்கள் வாச்சியார்த்தம், முக்கியார்த்தம். அபிதார்த்தம் என்று கூறப்படும். இந்நெறியோடு விசுவன், தைசதன், பிராஞ்ஞன் என்னும் மூவுருவ சீவனும், இவைகட்கு அதிட்டானமான பிரத்தியக் ஆன்மாவும் ஒன்றாகிப் பிரிவின்றி நிற்கும் போது தொம்பதத்திற்கு முற்கூறியவாறு வாச்சியார்த்தம், முக்கியார்த்தம், அபிதார்த்தம் ஆகிய மூன்றும் வருவனவாம்.

**116. தற்பதத் தினுக்குவிராட் புருடாதி அகன்ற**
**தனிநிருபா திகாப்பிரம மேஇலக்கி யார்த்தம்**
**சொற்பரவு சோதிததற் பதார்த்தம்என நிற்கும்**
**தொம்பதத் திற்குஉற்ற விசுவாதிகளின் வேறாம்**
**பொற்பின்நிரு பாதிகமாம் துரியன்இலக்கி யார்த்தம்**
**பொருந்துறு சோதிததொம் பதார்த்தம் எனல்ஆகும்**
**விற்பரவும் இலக்கணை விட்டதுவும் விடாததுவும்**
**விட்டுவிடா ததுவும்என மூவகையாம் அன்றே.**

தத்பதத்திற்கு விராட்புருடன் முதலிய மூன்றும் நீங்கி ஏகமாயுள்ள மாயா உபாதியின்றிய சுத்த சேதன வடிவப் பிரம்மமே இலட்சியார்த்தமாம். இது சோதித்து அறிந்த தத்பதார்த்தம் என்றும் சொல்லப்படும். துவம் பதத்திற்கு விசுவன் முதலிய மூன்றிற்கும் வேறாகிய அவித்தியா உபாதியின்றி சுத்த சேதன வடிவ ஆத்மாவே

இலட்சியார்த்தமாம். இது சோதித்து அறிந்த துவம் பதார்த்தம் என்றும் சொல்லப்படும். விளக்கம் பொருந்திய இலட்சணையானது விட்ட இலட்சணை, விடாத இலட்சணை, விட்டுவிடாத இலட்சணை என்று மூவகையாகும்.

**117. கங்கையினில் இடைச்சேரி மருவல்உறும் சொல்லும்**
**கவன்குந்த மொடுசோயம் தேவதத்தன் எனும்சொல்**
**இங்குஇவைகள் உதாரணமாம் அவற்றினுக்குக் கங்கை**
**எனும்மொழிநீர் வடிவாம்தன் முக்கியார்த் தத்தைத்**
**தங்கும்இடைச் சேரிதனக்கு இடம்ஆகா மையினால்**
**தணந்துகரை காட்டும்தன் முக்கியார்த் தத்தைத்**
**துங்கமுறு குந்தமொழி விடாமல்குந் தத்தைச்**
**சுமப்பவனைக் காட்டும்என உணர்ந்திடுக துணிந்தே**

கங்கை நதியினில் இடைச்சேரியானது பொருந்தி உள்ளது என்று கூறும் வாக்கியமும், ஈட்டி செல்லுகிறது என்னும் வாக்கியத்தோடு, அவனே இத்தேவதத்தன் என்னும் வாக்கியமும் ஆகிய இம்மூன்றும் இவ்விடத்தில் அந்த மூன்று இலட்சணைகளுக்கும் முறையே சான்றுகளாம். கங்கையினில் சேரி இருக்கிறது என்பதில் கங்கை வெள்ளத்தில் பொருந்தி உள்ள இடைச்சேரிக்கு இருப்பிடம் ஆகாததால் வெள்ள வடிவாய் உள்ள தனது வாக்கியப் பொருளை விட்டு கரையைக் காட்டும். ஈட்டி என்னும் சொல் தன் வாக்கியப் பொருள் ஆகிய ஈட்டியை விடாமல் அதனைச் சுமக்கின்றவனையும் காட்டுவதாம் என்று நிச்சயமாக இவற்றை முறையே விட்ட இலக்கணைக்கும் விடாத இலக்கணைக்கும் சான்றாக உணர்க.

**118. முன்னம்மொழி தரும்சோயம் தேவதத்தன் என்னும்**
**மொழியுள்முதல் அவன்என்னும் மொழிஇறந்த காலம்**
**தன்னில்வரு தேசவயோ விசிட்டனாம் தேவ**
**தத்தனைக்காட் டிடும்இவன்என் மொழிநிகழ்கா லத்தில்**
**உன்னவரும் அவைஉடைய தேவதத்தன் தன்னை**
**உணர்த்திடும்இவ் விருத்ததரு மப்பொருள்கள் இரண்டும்**
**மன்னுதல்செய் அயிக்கம்உறா மையினால்அப் பொருட்கண்**
**வருவிருத்த தருமங்கள் அனைத்தினையும் விட்டே.**

முன்னர் கூறிய சோயம் தேவதத்தன் என்கின்ற வாக்கியத்தில் முதலில் உள்ள அவன் என்னும் சொல் இறந்த காலத்தில் சேனைகளோடு கூடி வந்த தேவதத்தன் என்னும்

அரசனைக் காட்டுவதாம். இவன் என்னும் சொல் நிகழ்காலத்தில் ஆராய்ந்து அறிகின்ற காவியாடை, கமண்டலங்களோடு வருகின்ற தேவதத்தன் ஆகிய சாதுவை அறிவிப்பதாம். இவ்விரண்டு தருமம் உடைய அவன் இவன் (தேவதத்தன் ஆகிய அரசன், சந்நியாசி) என்னும் விரோத தருமமுடைய இருபொருள்களுக்கும் நிலையான ஐக்கியம் அடையாமையினால் அவ்விரு பொருள்களிலும் வருகின்ற விரோத தருமங்கள் அனைத்தையும் விட்டு. (குளகம்)

**119. விருத்தம்அறு தருமமாம் தேவதத்தன் தனையே**
**விடாதுகொளின் அவன்இவனே இவன்அவனே என்னும்**
**தெரித்தல்அரிது ஆயதா தான்மியம் கூடுறுமால்**
**தேரின்இதை விட்டுவிடா இலக்கணையி னொடுதான்**
**அருத்தஇலக் கணைபாகத் தியாகஇலக் கணைஎன்று**
**அறைதலினால் இருவேதத் துவமசிவாக்கி யத்திற்கு**
**உரைத்திடுவர் உதாரணமாய் உரியதுஎன உண்மை**
**உணர்ந்துஉடையோர் அஃதுஎவ்வாறு எனின்முறையே உரைப்பாம்.**

விரோதம் இல்லாத தருமம் உடையவன் ஆகிய தேவதத்தன் உடலை விடாது கொண்டால், அத்தேவதத்தன் ஆகிய அரசனே இத்தேவதத்தன் ஆகிய சந்நியாசியாம். இத்தேவதத்தன் ஆகிய சந்நியாசியே அத்தேவதத்தன் ஆகிய அரசனாம் என்று எளியதாய் அறிவித்தற்கு அரியதாகிய ஐக்கியம் பொருந்துவதாம். ஆராய்ந்து உணரும் இடத்து சோயம் தேவதத்தன் என்னும் வாக்கியத்திற்கு இவ்வாறு பொருள் கொள்வதை விட்டுவிடாத இலட்சணையுடன் அருத்த இலட்சணை என்றும், பாகத்தியாக இலட்சணை என்றும் சொல்லப்படும் உண்மைப் பொருள் உணர்ந்த உத்தமர்கள் சோயம் தேவதத்தன் என்னும் வாக்கியமே தத்துவமசி மகாவாக்கியத்திற்குத் தக்க சான்று என்று கூறுவார்கள். அவ்விட்டுவிடாத இலட்சகணை தத்துவமசி மகாவாக்கியத்தில் எவ்விதம் பொருந்துகின்றது என்றால் அதனை முறையாகக் கூறுவோம்.

**120. தற்பதம்வாச் சியார்த்தமாம் எலாம்அறிதல் முதலாம்**
**சட்குணங்கொள் பரோட்சனாம் சிவன்தனையே உணர்த்தும்**
**முற்பகரும் துவம்பதம்முக் கியமாய்ச்சிற் றுணர்வு**
**முதலாய ஈனகுண விசிட்டஅப ரோட்ச**
**கற்பிதசீ வனைஉணர்த்தும் இம்முரண்கொள் பொருட்கு**
**ஏகத்துவம்கூ டாமையின்அவ் இருபொருளும் அடையும்**

**பற்பலவாம் பரோட்சமுடன் அபரோட்சம் ஆகும்**
**பகைத்ததரு மத்திறங்கள்அனைத் தினையும் விட்டே.**

தத்துவ மசி என்னும் மகா வாக்கியத்துள் தத்பதம் ஆனது தனது வாச்சியார்த்தமாய் உள்ள எல்லாம் அறிதல் முதலான ஆறு குணங்களைக் கொண்டுள்ள பரோட்சன் ஆகிய ஈசுவரனை அறிவிப்பதாம். முன் கூறிய துவம்பதம் ஆனது தனது வாச்சியார்த்தமாய் உள்ள அற்ப அறிவு முதலிய தாழ்ந்த குணங்களுடன் கூடிய அபரோட்சன் ஆகிய சிதாபாசனையே அறிவிப்பதாம். இவ்வாறு முரண்பட்ட தருமங்களைக் கொண்டுள்ள பொருள்களுக்கு ஐக்கியம் பொருந்தாமையால் அந்த இருபொருள்களும் அடைந்துள்ள பலவிதமான பரோட்சம் அபரோட்சம் முதலிய விரோதமான தருமக் கூறுபாடுகள் அனைத்தையும் விட்டு. (குளகம்)

**121. இகல்இலா அறிவுமாத் திரம்ஆகி நின்ற**
**இலக்கியமாம் பிரம்மகூ டத்தஉயிர் கொள்ளில்**
**புகர்இலா அதுஇதுவே இதுஅதுவே என்னப்**
**பொருந்துதா தான்மியம்வந்து உறும்எனவே அறிக**
**பகவிலா அசிபதம்இவ் இலக்கியார்த் தத்தில்**
**பரோட்சஅ பரோட்சங்கள் மாயாகற் பிதம்என்று**
**உகவிலாது உணர்த்திஉறு பலமாம்இம் முறையால்**
**ஒன்றுஆகும் அறிவேஉண்டு எனல்வாக்கி யார்த்தம்.**

விரோதமில்லாது சித்து மாத்திரமாயுள்ள தத், துவம் பதங்களின் லட்சியார்த்தமாகிய பிரம்மத்தையும், பிரத்தியக் ஆன்மவையும் விடாது கொண்டால், அந்தப் பிரம்மமே இந்தப் பிரத்தியக் ஆன்மா, இந்தப் பிரத்தியக் ஆன்மாவே அந்தப் பிரம்மம் என்று உணரும் ஐக்கியம் பிரம்மத்திற்கும் ஆத்மாவிற்கும் பொருந்துவதாம். அசி பதமானது இந்த லட்சியார்த்தமாகிய பிரம்மத்திலும் பிரத்தியக் ஆன்மாவிலும் உள்ள பரோட்சமும் அபரோட்சமும் மாயா கற்பிதம் என்று தெரிவிப்பதாம். இதுவே அசி பதத்தின் பயனாம். இம்முறையால் ஏகமாயுள்ள பிரம்மமே உண்டெனு நிச்சயிப்பதே மகா வாக்கியத்தின் பொருளாகும்.

**122. தூயதத்துவ மசிமகா வாக்கியத்தி னாலே**
**துரியபரற்கு உளதுஏகத் துவம்என்கை கடாதி**
**ஆயஉபா திகள்அகற்றி விசும்புஒன்றே எனவும்**
**அகற்றிமனு டத்தன்மை இராமனை நீதானே**

**மாயவன்காண் எனவும்கன் னனைவேடு கழித்து**
**மகன்குந்திக்கு எனவும்ஒரு தசமனைமாய் துயரம்**
**போய்அகல ஒழித்துநீ யேதசமன் எனவும்**
**புகலுதல்போல் சுபாவசித்தம் ஆகுவதே அன்றி.**

மிகத் தூய்மையாய் உள்ள தத்துவமசி மகா வாக்கியத்தினாலே பிரத்தியக் ஆன்மாவிற்கும் பிரம்மத்திற்கும் ஐக்கியம் இருக்கின்றது என்று கூறுதல், கடம் முதலான உபாதிகள் நீங்கி ஆகாயம் ஒன்று என்றும், மனிதத் தன்மையை நீக்கி இராமனை நோக்கி நீயே திருமால் என்று உபதேசித்தது போலும், வேடத் தன்மையை நீக்கி கர்ணனைப் பார்த்து நீ குந்தியினது புதல்வன் என்றது போலும், மரணத் துன்பம் நீங்கும்படி அறியாமையை ஒழித்து பத்தாமவனை நோக்கி நீயே பத்தாமவன் என்று கூறுவது போலவாம். இவ்வாறு சீவ பிரம்ம ஐக்கியம் சுபாவ சித்தமாய் இருப்பதாம்.

**123. ஒருமலர்க்குத் துறக்கம்எனல் போல்முத்தி விருப்பம்**
**உதவுஅருத்த வாதம்எழில் பதுமையைத்தேவு எனல்போல்**
**இருமைதரும் உபாசனா பரம்மனுடன் தன்னை**
**இந்திரன்என் பதுபோலத் துதிபரம் ஆளினையே**
**அரும்அரசுஎன் பதுபோல உபசாரி கந்தான்**
**அக்கினிமா ணவகன்எனும் வாக்கியமே போல**
**உரிமைதரு சகுணசா திரிசம்இது கோவின்**
**உடம்புஎன்கை போல்சாதி வியத்தியாம் அன்றே.**

ஈசுவரனை ஒரு மலர்கொண்டு வழிபடுகின்றவனுக்கு வீடுபேறு உண்டாகும் என்னும் வாக்கியம் போல் வீடுபேற்றில் விருப்பத்தை உண்டாக்கும் வாக்கியம் அருத்தவாதமாம். அழகு அமைந்த சிலையைக் கடவுள் வடிவம் என்று கூறும் வாக்கியம் போலும் இம்மை மறுமைப் பயன்களைத் தரும் உபாசனை என்கின்றது உபாசனாபரவாதமாம். ஒரு சாதாரண மனிதனை இவன் இந்திரன் என்று துதிப்பது போல் துதிசெய்வது துதிபரவாதமாம். ஓர் அடிமையினை இவன் அரசன் என்று கூறுவது எங்ஙனமோ அதுபோலக் கூறுவது உபசாரிகவாதமாம். இப்பிரமசாரி நெருப்பு என்று கூறுவது போல் கூறும் வாக்கியம் பெருமை தருகின்ற சகுணசாதிரிசிய வாதமாம். இந்த அவயவங்கள் உடையது பசுவின் உடல் என்று கூறும் வாக்கியம் போலும் கூறுவது சாதி வியத்தி வாதமாம்.

**124. கடத்தொடுமட்கு அநந்நியம்என் வாக்கியமே போலக்**
**காரியகா ரணம்நீலோற் பலம்எனும் வாக்கி யம்போல்**
**விடுப்பில்குண குணிதயிர்பாற்கு அபேதம்எ னல்போல**
**விகாரமே வாரிகணங் கட்குஏகம் எனல்போல்**
**அடுத்தஅம் சாம்சிகம்விம்பப் பதிவிம்பங் கனுக்கு**
**அயிக்கம்எனல் போல்விம்பப் பதிவிம்ப வாதம்**
**எடுத்துஉணரில் எனஇங்ஙன் பேதபர மாக**
**இசைப்பன எலாம்சுருதி விரோதம்என அறியே.**

கடத்தோடு மண்ணுக்கு வேறுபாடு இல்லை என்று கூறும் வாக்கியம் போலக் கூறுவது காரிய காரண வாதமாம். நீல நிறம் உடையது கருங்குவளை மலர் என்று கூறும் வாக்கியம் போல்வது குணகுணிவாதமாம். தயிர் பாலுக்கு வேறோக இல்லாது இருக்கின்றது என்று கூறும் வாக்கியம் போல்வது விகாரவாதமாம். கடலும் அலை, துளி, நுரை முதலியவைகளும் ஒன்றாய் இருக்கின்றது என்னும் வாக்கியம் போல்வது அம்சாம்சிக வாதமாம். பிம்பப் பிரதிபிம்பங்களுக்கு ஐக்கியம் உண்டு என்று கூறும் வாக்கியம் போல்வது பிம்பப் பிரதிபிம்ப வாதமாம். வேறு வகையாக இங்கே கூறுவன எல்லாம் வேத வாக்கியங்களுக்கு விரோதம் என்று அறிக.

**125. அவ்அகிலங் கட்குஎலாம் பொய்மையே புகலும்**
**அரியதுஅம் வேதாந்த பக்கம்அதில் இனைய**
**எவ்வம்அறு சுருதிவிசா ரத்தினால் உண்மை**
**எனும்முத்தி கூடும்எனல் எவ்வாறுஇங்கு என்னில்**
***அவ்வியம்என் சொப்பனமாது அணைவினால் மெய்மை**
**ஆயவீ ரியஒழிவும் கற்பிதமாம் வடிவில்**
**செவ்வியஒண் கடவுள்வழி பாட்டினால் இட்டம்**
**சேர்தலும்போல் நூல்உணர்வால் முத்தியும்சித் திக்கும்.**

உலகம் அனைத்திற்கும் மித்தியா தன்மையைக் கூறுகின்ற அருமையான வேதாந்தத்தின் பட்சத்தில் சத்தியமான வீடுபேறு உண்டாகும் என்று கூறுவது இங்கு எப்படிப் பொருந்தும் எனில்? சொப்பனத்திலே பொய்யாகத் தோன்றும் பெண்ணைக் கூடுவதால் உண்மையான வீரிய வீழ்ச்சியும், கற்பனையான வடிவில் தோன்றிய தெய்வத்தின் பூசை முதலியவற்றால் அவனுக்கு விரும்பிய பொருள் கிடைத்தல் போலவும், சாத்திர ஞானத்தினால் வீடுபேறும் சித்திக்கும்.

126. அருமைஎனும் முத்திவிலக் காகமூன்று உளவாம்
அஞ்ஞானம் ஐயம்விப ரீதம்என அவற்றுள்
பிரமம்அலன் நான்என்கை அஞ்ஞானம் நான்அப்
பிரமமோ அலனோஎன் றிடல்ஐயம் சுருதி
வரும்இனிய உத்திகளால் நான்பரம்ஆயி னும்முன்
வளர்சீவ பாவம்உண்டு என்குதல் விபரீ தம்தான்
தருமுறை யில்அஞ்ஞா னாதிகட்கு முரண்ஆகும்
சவணமொடு மனனநிதித் தியாசனங்கள் என்றே.

தகுதி அற்றவர்களுக்கு அரியது என்று கூறப்படுகின்ற முத்தியைப் பெறுதற்கு அஞ்ஞானம், ஐயம், விபரீதம் என மூன்று தடைகள் உள்ளன. அவற்றுள் நான் பிரம்மம் அல்லன் என்பது அஞ்ஞானம். நான் பிரம்மமோ அல்லனோ என்பது ஐயம். சாத்திர வாக்கியங்களாலும் யுக்திகளாலும் நான் பிரம்மம் ஆயினும் என்னிடத்தில் சீவபாவம் உண்டு என்று கருதி இருப்பது விபரீதம். இவ்வாறு வந்த அஞ்ஞானம் முதலான தடைகள் மூன்றிற்கும் முரண்பட்டவை (அவற்றை நீக்கக் கூடியன) சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்பனவாம்.

127. சூதகா திகளிடைச் சுருதிவிசா ரத்தால்
துணிவுதோன் றுதல்எனவே சிவமொடுஉயிர் அயிக்கம்
ஓதும்ஆ ரணமொழியின் தாற்பரியம் கேட்கை
உயர்சவணம் கேட்டபொருள் உத்தியில்சிந் தித்தல்
தீதுஇல்மா மனனம்அவற் றால்துணிந்த பொருளில்
சித்தம்அசைவு அறஇருத்தல் நிதித்தியா சனந்தான்
மேதையா கியசவண ஞானத்தால் ஆன்மா
மெய்மையாம் முக்கியத்தால் சவணம்அங்கி எனல்ஆம்.

சுருதியின் (கரும காண்ட வேத வாக்கிய) விசாரணையால் தீட்டு முதலியவற்றில் நிச்சயபுத்தி தோன்றுதல் போல, பிரம்மத்தோடு ஆன்மாவிற்கு ஐக்கியத்தை கூறுகின்ற ஞான காண்ட வேத வாக்கியத்தின் கொள்கையை சற்குரு வழியே கேட்டுக் கொள்ளுதல் உயர்ந்த சிரவணம் ஆகும். இவ்வாறு கேட்ட பொருளை உத்தியால் ஆராய்ந்து பார்த்தல் மாசில்லாத, மேலான, மனனம் எனப்படும். சிரவணம் மனனம் என்னும் அவ்விரண்டினாலும் நிச்சயித்த பொருளில் சித்தம் அசையாது இருப்பதே நிதித்தியாசனமாம். மேலான சிரவண ஞானத்தால் விளங்கிய ஆன்மாவே உண்மையாம் இப்படி முக்கியமாய் இருத்தலால் சிரவணம் அங்கி எனப்படும். (குளகம்)

128. ஏனையவூர் இரண்டும்அதன் துணைஎனலால் அங்கம்
 எனலாகும்அஃது எவ்வாறு எனில்பொருள்கள் திகழ்த்து
 மானதோர் சுடர்அசைவில் கருமவலி இன்றாம்
 ஆதலினால் வளிதடுக்கும் திரைஎனலாம் மனனம்
 மேல்நிமிர்வான் திரிதூண்டி ஒளிர்வித்தல் போலும்
 விளம்புநிதித் தியாசனம்என்று அறிந்திடுக தெரிந்து
 மோனையாம் எனஉரைத்த சிரவணத் திற்குஉள்ள
 முறையில்அறு வகைஇலிங்க தாற்பரியம் உரைப்பாம்.

மற்றைய, மனனம் நிதித்தியாசனம் என்ற இரண்டும் அச்சிரவணத்திற்குத் துணை ஆவதால் அங்கம் என்று கூறுப்படும். அது எவ்வாறு பொருந்தும் எனில்? இருளிலே உள்ள பொருள்களை விளக்கிக் காட்டும் தீபமானது காற்றால் அசையும் போது, அதற்குப் பொருள்களை விளக்கிக் காட்டும் திறமை இல்லை. எனவே மனனத்தை அத்தீபம் அசைவதற்குக் காரணமான காற்றைத் தடுக்கும் திரை எனலாம். முன்னர் கூறிய நிதித்தியாசமானது அத்தீபம் ஓங்கி எரியும் பொருட்டு திரியைத் தூண்டி விட்டு ஒளியை மிகச் செய்யும் தன்மை போல, சிரவணத்திற்குத் துணையாக இருப்பதாம் என்று அறிந்து கொள்க. தத்துவ ஞான சாதனங்களுள் முதன்மையானது எனக் கூறப்படும் சிரவணத்திற்கு சகாயமான அறுவகை இலிங்கத் தாற்பரியத்தை உரிய முறைப்படி இனிக் கூறுவோம்.

129. அவைகள்உபக் கிரமம்உப சங்காரம் உடனே
 அப்பியாசம் பின்அபூர் வதைபலமொடு உற்ற
 நவில்அருத்த வாதம்உப பத்திஎனல் ஆகும்
 நற்சிருட்டி முன்சகமெய்ப் பரம்ஆயிற்று என்றும்
 சிவம்அதற்குச் சுவகதா திகள்இலைஎன்று அகண்டம்
 செப்புவதே உபக்கிரமம் சகம்சிவத்தின் மாய்த்துப்
 பவம்அகல துரியற்குப் பிரமம்உடன் அயிக்கம்
 பகர்ந்துஅத்து விதம்கூறல் உபசங்கா ரந்தான்.

அந்த ஆறுவித இலிங்கங்கள் உபக்கிரம உபசங்காரமும், அப்பியாசமும், பின்னர் அபூர்வதையும், பலம், கூறப்படும் அருத்த வாதமும், உபபத்தியும் என்பனவாம். அவற்றுள் சிருட்டிக்கு முன்னர் உலகம் சத்து வடிவமான பிரம்மாய் இருந்தது என்றும், அந்தப் பிரம்மத்திற்கு சுவகதம், சசாதி, விசாதி ஆகிய வேறுபாடுகள் மூன்றும் இல்லை என்றும், பிரம்மத்தின் வடிவம் பற்றிக் கூறுவதே உபக்கிரமமாம். உலகம் அப்பிரம்மத்தின் கண்

ஒடுங்கிடச் செய்து பிறவி நீங்குமாறு ஆன்மாவிற்கும் அந்தப் பிரம்மத்திற்கும் உள்ள ஐக்கியத்தைக் கூறி அத்துவிதத்தை உணர்த்துவதே உபசங்காரமாம்.

**130. கூறும்இவை இரண்டும்ஓர் இலிங்கமென அறைவர்**
**கூடத்தனே பிரமம்என மறித்தும் மறித்தும்**
**தேறஉரைத் திடல்அப்பி யாசமாம் துரியன்**
**திகழ்பிரமா ணாதீதன் என்கைஅபூர் வதையாம்**
**பாறில்உயிர் ஒன்றுஅறிதல் எலாம்அறிதல் என்கை**
**பலம்பிரத் தியகஆன்மஉரு வாம்பிரமம் தனக்கு**
**மாறுஅரிய ஐந்தொழில்கர்த் திருத்துவம்செப் புறுதல்**
**வயங்குஅருத்த வாதம்என மதித்திடுக தெரிந்தே.**

கூறிய இவ்விரண்டும் கூடி ஓர் இலிங்கம் (மற்றொன்றை அறிதற்கு உதவும் அறிகுறி) என்று கூறுவர். கூடத்தன் ஆகிய ஆன்மாவே பிரம்மம் என மறுபடியும் மறுபடியும் அத்வைத அர்த்தத்தை தெளிவாகக் கூறுதலே அப்பியாசமாம். சுயமாக விளங்குகின்ற ஆன்மா அளவைகளுக்குப் பொருளாக இல்லாது இருப்பது என்பது அபூர்வதையாம். கேடற்ற ஆன்மா எல்லாமாய் நிறைந்து நிற்பதால், அதை அறிவதால் சர்வத்தையும் அறியலாம் எனக் கூறுதலே பலமாம். பிரத்தியக் ஆன்ம வடிவாய் உள்ள பிரம்மத்திற்கு, காலம் கருமம் முதலிய முறை தவறாத ஐந்தொழில்களுக்கு, காரணம் ஆகிய தன்மையைக் கூறுவதே அருத்த வாதம் ஆகும் என்று ஆராய்ந்து அறிக.

**131. கடத்தினுக்கு மண்ணினையும் நூற்குஉலண்டு தனையும்**
**காரணம்என் பதுபோலப் பிரமமே முன்னம்**
**படைத்தசகத்க காரணம்என் பதுவேஉப பத்தி**
**பகர்உத்தி தருக்கம்அனு மானம்இவை மூன்றும்**
**அடுத்துவரும் மனனசக காரிகளாம் அவற்றுள்**
**ஆருயிர்கள் அநேகம்வியா பகம்எனவே கூறும்**
**தடுப்பரிய சாங்கியமே முதலாய மதத்துள்**
**சாற்றும்உயிர் எலாம்உடம்பு தொறும்புணர்ச்சி உறலால்.**

கடத்தினுக்கு மண்ணையும், பட்டு நூலுக்குப் பட்டுப் புழுவையும் காரணம் என்பது போல, முன் படைத்த உலகினுக்குப் பிரம்மமே காரணம் என்று கூறுவது உபபத்தியாம். யுத்தி, தருக்கம், அனுமானம் என்னும் இவை மூன்றும் சிரவணத்தை அடுத்து வருகின்ற மனனத்திற்குத் துணைக்காரணம் (சககாரி) ஆம். அம்மூன்றனுள், சீவர்கள் அனேகம்

எனவும், வியாபகம் எனவும் கூறுவதனால், மறுப்பதற்கு அரிய சாங்கியம் முதலான மதங்களுள் கூறப்படும் சீவர்கள் அனைத்தும் தனித்தனியே ஒவ்வோர் சரீரத்திலும் சேர்ந்து இருத்தலால். (குளகம்)

**132. இந்தஉடம் புஇவற்கேயாம் போகசா தனம்மற்று**
**ஏனோர்க்கு அன்றுஎனப் போகத்திதிபுகல் ஒணாதாம்**
**வந்தஉடம் புஎத்திறத்தும் இவன்வினையால் வரலால்**
**மற்றுஇவற்கே எனின் வினையு ம்எவர்க்கும்இலை யோதான்**
**முந்தைஉடம் புஅபிமானத் தால் செய்வினை இவற்கே**
**முற்றும் எனி ன்அவ்அபிமா னமும்முந்தை உடல்சேர்**
**அந்தஉயிர் அனைத்திற்கு ம்இலையோதா ன்இவ்வாறு**
**அனவத்தை நீக்கலரி துஅநேகம்உயி ர்எனலால்.**

ஆன்மா ஒவ்வொரு சரீரத்திலும் சேர்ந்திருத்தலால், இந்த சரீரம் இந்த ஆன்மாவிற்கு போக சாதனம், ஏனைய ஆன்மாக்களுக்கு அன்று என்று போகத்தின் நிலையை வரையறுத்துச் சொல்லக் கூடாதது. இந்த ஆன்மாவிற்கு வாய்த்த சரீரம் எவ்விதத்தாலோ இதனது கருமத்தால் வந்து இருத்தலால், இதற்கே உரியதாம் எனின், அக்கருமமும் சர்வ ஆத்மாக்களுக்கும் இல்லையோ? இருக்கின்றதல்லாவா? இந்த ஆன்மா பூர்வ தேக அபிமானத்தால் செய்த கருமம் இந்த ஆன்மாவிற்கே பொருந்தும். ஏனைய ஆன்மாக்களுக்கு பொருந்தாது எனின், அந்த அபிமானமும் பூர்வ தேகத்தைச் சேர்ந்திருந்த அந்த ஆன்மா அனைத்திற்கும் இல்லையோ? இருக்கின்ற தல்லவா? ஆன்மா அனேகம் எனக் கூறுதலால் இவ்வாறு நிகழும் (வரம்பின்றிக் கூறல் என்னும்) அனவத்தா தோடம் வந்தே தீரும். அதனை நீக்குதல் எவர்க்கும் அரிது.

**133. செப்பரிய ஏகான்ம பக்கம்அதில் போகத்**
**திதிஇலைஎன்று அநேகஆன்ம பக்கமது கொளினும்**
**இப்பரிசு மிகுபோகத் திதிகூடாது ஆயிற்று**
**இச்சங்கை இருமதத்தும் ஒக்குமே என்னில்**
**பற்பலஇல் ஏகான்ம பக்கமதில் விம்பப்**
**பதிவிம்ப நியாயத்தால் கரணஅசைவு ஆதி**
**மெய்ப்பரிய பலதிறத்தால் எண்ணிறந்த போக**
**விளைவுகூ டுதல்எளிதுஎன் குதல்உத்தி ஆமால்.**

ஆன்மா ஒன்றே. அது எங்கும் வியாபகமாய் உள்ளது என்று கூறும் ஏகான்ம பட்சத்தில் போக ஸ்திதி பொருந்துவதில்லை என்று அனேகான்ம பட்சத்தை (ஆத்மா பலவாம் வியாபகம் என்று கூறும் சாங்கிய முதலாயினோர் மதங்களை)க் கொண்டாலும், அப்பட்சத்திலும் இவ்விதமாக போக ஸ்திதி பொருந்தாதாம். இந்த ஆட்சேபம் ஏகான்ம பட்சம், அநேகான்ம பட்சம் என்னும் இரண்டு மதங்களிலும் சமானமாய் இருக்கின்றதல்லவா? இதற்குச் சமாதானம் யாது எனின் ஏகான்ம வாதத்தில், பிம்பப் பிரதிபிம்ப நியாயத்தால், ஏகமானஆன்ம பிம்பத்தால் அநேகமான அந்தக்கரணங்களில் பிரதிபிம்பம் கூடும் என்பதால், அந்த அநேகமான அந்தக்கரணங்களினது மந்தம், கலக்கம் முதலியவற்றால் ஆன்மாவிற்கு அளவு கடந்த போக விளைவு எளிதாம் என்று கூறுதலே யுத்தியாம்.

**134.** **தருக்கஅனு மானஇலக் கணங்கள்தாம் மிசிரா**
**சாரியர்கள் முதலானோர் கண்டனா திகளில்**
**விரித்துஅமைத லால்இதுதான் சுபானுபவ நூலாய்**
**விளங்குதலால் ஈண்டுஉரைப்பில் பெருகும்எனும் கருத்தால்**
**உரைக்கிலம் மந்திரயோகம் பரிசயோ கம்பின்**
**உயர்பாவ யோகமுடன் அபாவயோ கந்தான்**
**தெரித்தமகா யோகம்எனும் இவைகள்ஓர் ஐந்தும்**
**திகழ்கின்ற நிதித்தியா சனவடிவம் ஆமால்.**

தருக்கம், அனுமானம் என்பன மிசிராசாரியர், மதுசூதன சரஸ்வதி முதலான சான்றோர்கள் விரித்து உரைத்துள்ள கண்டன முதலிய சாத்திரங்களில் விரித்துக் கூறபட்டிருக்கின்றன. இது சுபானுபவ நூலாய் விளங்குதலால், இங்கு அதனை விரித்து உரைத்தால் நூல் விரியும் என்ற கருத்தால் கூறவில்லை. மந்திர யோகம், பரிச யோகம், மிக உயர்வான பாவ யோகம், அபாவ யோகம், தெளிவுடன் விளங்கும் மகா யோகம் என்று கூறப்படுகின்ற ஒப்பற்ற ஐந்து யோகங்களும் தத்துவ சாதனமாக விளங்குகின்ற நிதித்தியாசனமாம்.

**135.** **ஓங்காரா திகள்அனுசந் தானத்தால் பரத்தில்**
**உள்ளம்அடங் குதலேமந் திரயோகம் அதனோடு**
**ஈங்குஆகும் மன*பவனம் ஒன்றுஆய்மூ லத்தின்**
**இரும்சுழினை வழிசென்று சென்னிநடு இருந்த**

* பவனம் = பிராணவாயு

**தேங்கான்ம ஒளியில்ம னோலயம்ஆதல் பரிசம்**
**சிரம்துறக்கம் செவிதிசைகள் இருசுடர்கன் விழிதீ**
**பாங்குஆய முகம்உந்தி விசும்புநிலம் பதமாம்**
**பரமன்உரு வாயவிராட் புருடவடிவ எனினும்இ**

ஓம் என்னும் பிரணவ முதலிய மந்திரங்களின் தியான அப்பியாசத்தால் பிரம்மத்தில் மனம் இலயமாவதே மந்திர யோகமாம். அந்த மந்திர சிந்தனையோடு மனமும் பிராண வாயுவும் ஒன்றாகி மூலாதாரத்தில் இருந்து சுழிமுனை நாடி வழியே சென்று சிரசின் மத்தியில் உள்ள பரிபூரண ஆன்மப் பிரகாசத்தில் மனம் இலயிப்பதே பரிச யோகமாம். சுவர்க்கம், திசைகள், சூரிய சந்திரர்கள், அக்கினி, ஆகாயம், பூமி என்னும் இவற்றை முறையே சிரசு, இரு செவிகள், இரு கண்கள், முகம், உந்தி, இரண்டு பாதங்களாக உடைய ஈசுவரனது சொரூபமாக விளங்குகின்ற விராட் புருட வடிவத்தையாவது. (குளகம்)

**136. அன்றிஅள வுறுபெருந்தோள் படைபணியோடு உற்ற**
**அண்ணல்வடிவு எனினும்நினைந்து அவயவங்கள் தம்மில்**
**ஒன்றுஒன்றாய் விடுத்துநின்ற அவயவிமாத் திரமாம்**
**உண்மையாம் பிரமத்தில் மனம்அடங்கல் பாவம்**
**சென்றுஅளவு கரணமும் உறா ஒருபிரமம் தன்னில்**
**சிந்தைஅடங் குதல்அபாவம் படைப்பில் ஒழிவில்**
**தன்தெரிதல் தெரியாமை இடத்தினோர் பரிசாய்த்**
**தன்வடிவாம் பிரமத்தின் மனம்இறல்மா யோகம்.**

அல்லது நான்கு தோள்களோடும் சங்கு சக்கர மான்மழுவு முதலிய வடிவத்திற்கேற்ற ஆயுத ஆபரணங்களோடுங் கூடிய ஈசுவரனது வடிவத்தை யாவது தியானித்து பின் அவ்வடிவங்களில் உள்ள அவயவங்களை ஒவ்வொன்றாக விட்டு எஞ்சி நின்ற நிரவயவனான சத்து வடிவ பிரம்மத்தில் மனம் இலயமாவதே பாவ யோகம். புறக்கரணங்களின் வழி விடயங்களில் சென்று பொருந்துகின்ற மனத்திற்கு எட்டாத ஒப்பற்ற பிரம்மத்தில் மனம் இலயமாவதே அபாவ யோகமாம். உலகம் தோன்றும் காலத்தும், அதன் லயகாலத்தும், ஞான காலத்தும், அஞ்ஞான காலத்தும் ஒருபடித்தாய் விளங்கும். தனது நிச வடிவமான பிரம்மத்தில் மனம் இலயமாவதே மகா யோகமாம்.

**137. பகர்ந்தஉயிர் உண்மைவிலக்கு ஆகவரும் பூதப்**
**பதிபந்தம் வர்த்தமானப் பதிபந் தம்பின்**

**நிகழ்ந்தஆ காமியப்பதி பந்தம்என முத்தி**
**நேயமொடு துறந்துகுரு பரனைஅறிந்து அடைந்து**
**மகிழ்ந்துசவ ணாதிகள்முற் றிடினும்முன் நுகர்ந்த**
**வனிதாதி விடயசுக வாதனையால் தினமும்**
**புகுந்துமன நிலைகலக்கி உயிர்உண்மை உறாமல்**
**போக்கியிடல் தனைபூதப் பதிபந்தம் என்பர்.**

பிரம்மானுபவம் உண்டாயினும் அதற்கு தடையாக இருப்பது பிரதிபந்தமாம். இது பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப் பிரதிபந்தம், ஆகாமியப் பிரதிபந்தம் என மூவகைப்படும் ஒருவன் முத்தி விருப்பத்தோடு, துறந்து, அறிய வேண்டிய இலக்கணங்களால் சற்குருவை அறிந்து, சரணடைந்து, மனம் மகிழ்வோடு, சிரவண மனன நிதித்தியாசனங்களைச் செய்தாலும், முன் அனுபவித்த பெண்முதலிய விஷய சுக வாசனைகள் நாள் தோறும் அகத்தில் தோன்றி மன உறுதியைக் கலங்கச் செய்யும். இப்படி முன் அனுபவித்த விடய வாசனைகள் பிரம்மானுபவம் ஏற்படாமல் தடுத்துக் கெடுப்பது பூதப் பிரதிபந்தமாம்.

**138. மடிவிடயா சத்திஅபி மானமொடு குதர்க்கம்**
**மறுகுறுசிற் றினம்சேர்தல் சபலத்து வாதி**
**அடைதலின்மெய் தெரிந்தும்உயிர் உண்மைஉறாது அழித்தல்**
**அதுவாகும் வர்த்தமா னப்பதிபந் தம்காண்**
**விடல்அரிய சனனம்இனும் சிலஅடைந்தால் அன்றி**
**விடாதுபிர மாதிஉலகு இச்சைஎனும் தோடம்**
**ஓடுமருவி மறைப்பொருளை உணர்ந்திடினும் ஆன்ம**
**உண்மைஉறாது அழித்தல் ஆகாமியப்பதி பந்தம்.**

· ஒருவன் விசாரித்து அறிந்த மெய்யுணர்வை, சோம்பல் சத்தாதி விடய இச்சை, யான் எனதென்னும் அபிமானம், முறை பிறழ்ந்து வாதித்தல், சிற்றினத்தாரோடு கூடியிருத்தல், சஞ்சலத்தன்மை முதலிய இழிவான குணங்களால், ஆன்ம சாட்சாத்காரம் உண்டாகாதபடி தடுப்பது வர்த்தமானப் பிரதிபந்தமாம். ஒருவன் சுருதியின் உண்மைப் பொருளை ஆராய்ந்து அறிந்திருந்தாலும், இன்னும் சில பிறப்பெடுத்து பிரம்மலோகாதி போகங்களை அனுபவத்தாலன்றி அதன்கண் இச்சை விடாதென்னும் தீதான எண்ணம் உண்டாகி அவனுக்கு ஆன்ம சாட்சாத்காரம் உண்டாகாதபடி தடையாக இருப்பதே ஆகாமியப் பிரதிபந்தமாம்.

**139. பந்தம்அவை மூன்றினையும்கடந்திடுவான் பயில்வ**
**பகர்ஞானம் வைராகம் உபரதியாம் அவற்றின்**
**வந்துஅணுகும் இலக்கணம்கா ரணமொடுதான் சொரூபம்**
**மருவுகா ரியம்எனவே தனித்தனி ஞானக்கு**
**முந்துசவ ணாதிகமே காரணம்ஆன் மாவும்**
**மூலஅகங் காரமும்வேறு ஆக்குதலே சொரூபம்**
**நந்தும்அகங் காரகத மயற்குத்தான் கரியாய்**
**நணுகுதலே காரியம்என்று அறைகுவர்மூ தறிஞர்.**

கூறிய அந்தப் பிரதிபந்தங்கள் மூன்றினையும் நீக்குதல் பொருட்டு அப்பியாசம் செய்தற்குரியன ஞானம், வைராக்கியம், உபரதி முதலியனவாம். அம்மூன்றில் காரணம் சொரூபம் காரியம் என்னும் இலக்கணங்கள் தனித்தனியே வந்து பொருந்தும். ஞானம் பெறுவதற்கு, சிரவணம் மனனம் நிதித்தியாசனம் என்பன காரணமாம். அவற்றால் ஆன்மாவையும் மூல அகங்காரத்தையும் வேறாகப் பிரித்து அறிவது ஞானம் பெறுவதற்கு வழியாம். மூல அகங்கார சம்பந்தமான பிராந்திக்குத் தான் சாட்சியாய் விளங்குவதே ஞானத்திற்கு செய்யதக்கக் காரியமாம் என்று பேரறிஞர் கூறுவர்.

**140. வேண்டும்வை ராக்கியத்திற்கு உற்றவனி தாதி**
**விடயத்தில் நிலையாமை முதலாய குற்றம்**
**காண்டல்அது காரணம்எத் திறத்தானும் அதனைக்**
**கழன்றிடுதல் சொரூபம்பின்பு உறாமைகா ரியமாம்**
**மாண்டஉப ரதிக்குஇயமா திகளேகா ரணம்சூழ்**
**மனம்ஒடுங்கல் சொரூபமாம் புறக்கருமம் தன்னின்**
**மீண்டுபுகும் மயல்அறுதல் காரியம்என்று இசைப்பர்**
**விளம்பல்உறு ஞானாதி கட்குஅவதி மொழிவாம்.**

வைராக்கியம் பெறுவதற்கு மாதர் முதலிய விடயங்களில் நிலையாமை முதலிய குற்றங்களை முக்கியமாகக் காண்பதே காரணமாம். எவ்விதத்தாலும் அந்த மாதர் முதலிய விடயங்களை விட்டு விடுவதே வைராக்கியம் பெறுவதற்கு வழியாம். பின்னர் அவ்விடயங்களில் இச்சை பிறவாமையே வைராக்கியத்திற்கு செய்யதக்கக் காரியமாம். சிறந்த உபரதிக்கு இயமம் முதலிய அட்டாங்க யோகங்களை அப்பியாசம் செய்வதே காரணமாம். (அட்டாங்க யோகங்கள்: இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன.) அவற்றால் விடயங்களை

அனுபவிக்கக் கருதும் மனம், ஆன்ம சொரூபத்தில் இலயமாவதே உபரதிக்கு வழியாம். முன் நீக்கின புறக்கருமங்களில் மீண்டும் ஈடுபடும் மயக்கம் வராமையே உபரதி பெறச் செய்யத்தக்கக் காரியமாம். இவ்வாறு வைராக்கிய உபரதிகட்கு காரணம் முதலியவற்றைக் கூறுவர். முன்னர் கூறிய ஞானம் முதலியவற்றிற்கு முடிந்த நிலைகளைக் கூறுவோம்.

**141. தக்கதே கான்மபா வம்போலப் பிரமம்**
**தான்என்னும் திண்மைஞா னத்தினுக்குஆம் அவதி**
**மிக்கபிர மாதிபதம் துரும்புஎனவே நினைத்தல்**
**விளம்பும்வை ராக்கியத்திற்கு அவதிசுழுத் தியன்போல்**
**தொக்ககரு மங்கள்அனைத் தினையும்நினை யாமை**
**தோன்றும்உப ரதிக்குஅவதி ஆகும்இவை மூன்றும்**
**புக்குஒருவன் அடைந்திடுமேல் அதுமுன்னம் விடாது**
**புரிந்தமா தவத்தின்வலி என்றுஅறிக தெரிந்தே.**

அஞ்ஞான காலத்தில் தேகாத்ம புத்தி உறுதியாய் இருந்தது போல, பிரம்மமே நான் என்னும் புத்தி திடமாய் இருத்தலே ஞானத்திற்கு முடிந்த நிலையாம். மேலான பிரமலோகம் முதலிய பதப்பிராப்திகளை துரும்பாக நினைத்தலே வைராக்கியத்திற்கு முடிந்த நிலையாம். சுழுத்தி அவத்தையில் இருப்பவனைப் போல கருமங்கள் அனைத்தினையும் செய்ய நினையாது மறந்திருத்தலே வைராக்கியத்தால் உண்டாகின்ற உபரதிக்கு முடிந்த நிலையாம். இங்ஙனம் கூறிய ஞானம், வைராக்கியம், உபரதி என்னும் மூன்றையும் ஒருவன் முயன்று தவறாது அடைவானாயின், அது அவன் முற்பிறவிகளில் இடைவிடாது செய்து வந்த தவத்தின் பலமாம். இவ்வாறு அம்மூன்றினது சித்தியையும் ஆராய்ந்து அறிவாயாக.

**142. குறைஅகலும் வைராகம் உபரதியாம் இரண்டும்**
**கூடிஞா னம்கூடாது ஆயின்முத்தி அரிதுஆம்**
**உறும்இனிய மிசைஉலக பதம்கிடைக்கும் ஞானம்**
**ஒன்றும்அடைந்து அவைஇரண்டும் இலைஆயின் நிற்ப**
**முறியுமரம் நெடும்பணையோன் விழநினைவுஇன் றேனும்**
**முறியவிழல் போலவே தேகாந்தம் அதனில்**
**பெறுவன்உயர் முத்தியினை உடற்குஅமைந்த வினையால்**
**பிறந்திடும்துக் கானுபவம் உளதுஆதல் திண்ணம்.**

குறையைப் போக்குகின்ற வைராக்கியம், உபரதி ஆகிய இரண்டும் ஒருவனுக்கு முழுமையாகச் சேர்ந்து இருந்தாலும் ஞானம் மட்டும் சேராது இருந்தால் அவனுக்கு

வீடுபேறு என்னும் மோட்சம் சித்திப்பது இல்லை. மிக இனிமை உடைய எவ்வுலகத்திற்கும் மேலாய் உள்ள பிரம்ம லோகத்தை அடையும் பேறு கிடைக்கும் ஞானம் ஒன்றை மட்டுமே அடைந்து, வைராக்கியம், உபரதி ஆகிய இரண்டும் முழுமையாக இல்லாது போனால், மரத்தின் நீண்ட கிளையிலே இருப்பவன் கீழே விழ எண்ணம் இல்லாதவனாய் இருப்பினும், அம்மரத்தின் கிளை முறிந்து விழ பூமியில் அதனுடன் விழுதல் போல், அவன் பிராரத்த கருமம் உள்ளவரை சீவன் முத்தியும், முடிந்த பிறகு சரீரத்திற்கு இறுதி வரும் போது மோட்சத்தையும் பெறுவன். அதுவரை வினையால் வரும் திருஷ்ட துன்பத்தை அனுபவித்தல் உறுதியாகும்.

**143.** **சாற்றரிய சுபேச்சை விசாரணை தனுமா னசிசத்**
**வாபத்தி அசம்சத்தி பதார்த்தாபா வனையே**
**மேல்துரிய காமிஎனும் இவற்றினைமூ தறிஞர்**
**விளங்குசத்த ஞானபூ மிகள்என்பர் அவற்றுள்**
**தோற்றிடுநான் மூடனாய் இருந்தகா ரணம்என்**
**சுருதிகுரு வால்அறிவன் எனநினைதல் சுபேச்சை**
**மாற்றரிய சுருதிகுரு வால்சிறிது தோன்றும்**
**வைராகத்து உறுதல்சதா சாரம்விசா ரணையே.**

சொல்லுதற்கு அரிய சுபேட்சையும் (சுகம் என்னும் வீடுபேறு) விசாரணையும் (ஆராய்ச்சி) தனுமானசியும் (விடைய வாசனை நீக்கம்), சத்துவாபத்தியும் (சிந்தித் துணர்தல்), அசம் சத்தியும் (உலகம் மறந்து நிலைபெறுதல்), பதார்த்தா பாவனையும் (ஒன்றாய் இருப்பதில் இச்சை) எனக் கூறப்படும். இவ்வேழினையும் பேரறிவாளர் ஞான பூமிகள் என்பர். அவ்வேழினுள் ஒருவன் ஆன்ம அனான்ம விசாரம் செய்யும் அறிவு இல்லாதவனாய் இருக்கும் காரணம் யாது? அதனை வேத வாக்கியத்தாலும், குரு உபதேசத்தாலும் அறிவேன் என முயலுதல் சுபேட்சையாம். மாற்றிட இயலாத வேத வாக்கியத்தாலும் குருவின் உபதேசத்தாலும் சிறிது தோன்றும் வைராக்கிய பலத்தால் கேட்ட பொருளைச் சிந்தித்தல் ஆகிய மனனம் என்னும் பயிற்சியில் எப்பொழுதும் ஈடுபட்டிருத்தலே விசாரணையாம்.

**144.** **மருவலுறுசு பேச்சைவிசா ரணைவலியால் விடய**
**வலிஅறுதல் தான்தனுமா நசிஅவற்றின் பயில்வால்**
**விரவுநனவு ஆயஉல கினைக்கனவுஎன்று எண்ணி**
**மெய்த்தஆன் மாஉண்மை கருதல்சத்வா பத்தி**

**பரவல்உறும் உலகுதோன் றாதுசுழுத்தி யன்போல்**
**பகர்அறிவு மாத்திரையாய் நிற்றல்அசம் சத்தி**
**ஒருவிவா சனைஅனைத்தும் மிகுதுயில்வோன் போல**
**உயிர்ஆனந்தத்து ஒடுங்கல் பதார்த்தாபா வனையாம்.**

பொருந்துகின்ற சுபேட்சை விசாரணை ஆகியவற்றின் பயிற்சி வலிமையால் விடய வாசனைகள் நீங்குவதே தநுமாநசியாம். அவற்றின் பயிற்சி பலத்தால் தோன்றும் சாக்கிர உலகினைச் சொப்பனம் போல எண்ணி சத்துவடிவமான தன் உண்மை வடிவத்தை சிந்தித்து உணர்தல் சத்துவாபத்தியாம். விரிந்து கிடக்கும் உலக உணர்வு இன்றி சுழுத்தி உடையவனைப்போல அறிவு ஆனந்த மாத்திரமாய் நிற்றலே அசம் சத்தியாம் (உலகை மறந்து நிலைபெறுதல்). பின் அனைத்து வாசனைகளும் நீங்கி மிகுந்த நித்திரை செய்பவன் போல் ஆன்ம ஆனந்தத்துள் ஒடுங்கலே பதார்த்தா பாவனையாம்.

**145. உண்டுஇலைஎன் னாமல்அகங் கிருதிநிரங் கிருதி**
**உறாமல்அறிவு உருவாய அத்துவித பதத்தில்**
**கண்டதுஒரு வறும்குடம்போல் உட்புறம்சூ னியமாம்**
**கதிதுரிய காமியாம் உபரதியை அடைந்து**
**கொண்டுஇலகல் உறுதிரிசி யானுவித் தம்பின்**
**கூறல்உறு சத்தானு வித்தநிருவி கற்பம்**
**எண்தருசட் சமாதிகளாம் புறமொடுஅகம் என்னும்**
**இருபேதம் அடைந்துஅவற்றை முறையின்இவண் மொழிவாம்.**

சாக்கிரத்தில் உண்டு என்றும், சுழுத்தியில் இல்லை என்றும் கூறாமல், சாக்கிரத்தில் நான் என்னும் அபிமானமும், சுழுத்தியில் நான் என்னும் அபிமானம் இன்றி இருத்தலும் பொருந்தாமல், அறிவு வடிவமாயுள்ள பிரம்மத்தில் நீரின்றிய ஒரு வெறுங் குடம்போல, பேதம் சிறிதுமின்றித் தான் மாத்திரமாக விளங்குவதே துரிய காமியாம். முற்கூறிய உபரதியை அனுசரித்துக் கொண்டு விளங்குகின்ற சமாதிகள் அறுவகையாம். அவை திரிசியானு வித்தம், சத்தானு வித்தம், நிருவிகற்பம் எனக் கூறப்பட்டு, புறமும் அகமும் என்று இரண்டு வகையாய் பேதமடைதலால் ஆறு சமாதிகளாம். அச்சமாதிகளை முறையாக இவ்விடத்துக் கூறுவோம்.

**146. கடாதிவிட யத்தினில்ஒன் றினைக்குறித்து நாம**
**கற்பனையோடு உருவம்எனும் மாயைதன் திறத்தைத்**

**தடாதுவிடுத்து அத்திபா திப்பிரியம் என்னும்**
**சச்சிதா னந்தமாம் பிரமத்தின் திறத்தை**
**விடாதுஅனு சந்தானம்செய் திடுதலே புறத்து**
**மெய்த்திரிசி யானுவித் தம்பெயர்கொள் கின்ற**
**கெடாததொரு சவிகற்ப சமாதிஎனல் ஆகும்**
**கிளர்ந்தபுறச் சத்தானு வித்தமது கிளப்பில்.**

கடம் முதலான பொருள்களில் ஏதேனும் ஒன்றினைக் குறித்து நாமத்தோடு ரூபம் என்று கூறப்படுகின்ற மாயையின் அம்சங்கள் இரண்டையும் தடையின்றி நீக்கி, அதிலுள்ள சத்து சித்து ஆனந்தம் ஆகிய பிரம்மத்தின் அம்சங்கள் மூன்றையும் இடைவிடாது நெடுங்காலம் விசுவாசத்தோடு அப்பியாசம் செய்தலே, உண்மை ஞானத்தைக் கொடுக்கின்ற புறத்தே திரிசியானுவித்த பெயரைக் கொண்டுள்ள, கெடாது இருக்கின்ற ஒப்பில்லாத சவிகற்ப சமாதி என்று கூறுதற்கு உரியது. முற்கூறிய புறச்சத்தானுவித்தத்தைக் குறித்து சொல்லுமிடத்து. (குளகம்)

**147. சச்சிதா னந்தஉரு ஆகுவதே பிரமம்**
**தான்எனவே தியானித்தல் அதுவாகும் என்க**
**இச்சமாதி கள்பயின்ற வலியினால் தோன்றும்**
**இரும்பிரமா னந்தநிலை தனில்மனம்சென்று ஒடுங்கி**
**நிச்சலமாய் அலையில்கடல் போல்இருத்தல் புறத்து**
**நிருவிகற்ப சமாதியாம் மனோகதகா மாதிக்கு**
**அச்சம்அறு கரிதான்என்று எண்ணுதலுள் திரிசி**
**யானுவித் தப்பெயர்கொள் சவிகற்ப சமாதி.**

சச்சிதானந்தமாய் இருப்பதே பிரம்மமாம். அதுவே நான் என்று பாவனை செய்தலே மேலே கூறிய சத்தானுவித்த சவிகற்ப சமாதி என்று அறிக. இவ்விரு சமாதிகளிலும் பயிற்சி பெற்ற வலிமையால் தோன்றிய, என்றும் உள்ள பிரம்மானந்தத்தின் அனுபவத்தில், மனமானது மெல்ல மெல்லச் சென்று ஒடுங்கி விகற்பமெல்லாம் நீங்கி, அலையற்ற கடல் போல அசைவின்றி இருப்பதே புறத்தே நிருவிகற்ப சமாதியாம். மனத்தில் உள்ள காமம் குரோதம் முதலான சங்கற்ப வடிவ திருசியங்களுக்கு, பயமில்லாத சாட்சி மாத்திரமே ஆக இருக்கின்றேன் என்று பாவனை செய்வதே அகதிரிசியானுவித்த சமாதி என்னும் பெயரைக் கொண்டுள்ள சவிகற்ப சமாதியாம்.

**148. சங்கம்அறு சச்சிதா னந்தஒளி உருவம்**
**தான்எனச் சிந்தித்திடல்உள் சத்தானு வித்தம்**
**பொங்குறுதன் அனுபூதி ரசம்தோன்றும் அதனால்**
**புகன்றதிரி சியம்சத்தம் எனும்இரண்டும் அகன்றே**
**இங்குஅசைவுஇல் தீபம்எனப் பந்தம்அற இருத்தல்**
**இலங்குறும்உள் நிருவிகற்ப சமாதிஇவ்ஆ றானும்**
**தங்கலுற ஒழுகும்யோ கிக்குமனம் எங்குச்**
**சரிக்கும்ஆண்டு ஆண்டுஎலாம் சமாதிஎனல் ஆகும்.**

அசங்க சச்சிதனந்த வடிவமே நான் என்று பாவனை செய்வதே அக சத்தானுவித்த சவிகற்ப சமாதியாம். அதனால், முழுமையாக விளங்குகின்ற ஆன்மானுபவ அனுபூதி உண்டாகும். முற்கூறிய சத்தானுவித்தம் திரிவியானுவித்தம் என்னும் இரண்டும் அகன்று, இங்கே காற்றால் அசைதல் இல்லாத விளக்கினைப் போல உலக சிந்தனையற்று இருப்பதே விளங்குகின்ற அக நிருவிகற்ப சமாதியாம். இவ்விதமான ஆறு சமாதிகளினாலும் பொருந்தி ஒழுகுகின்ற யோகிக்கு அவன் மனம் எங்கு எங்கு சென்றதோ, அங்கு அங்கெல்லாம், ஆனந்த வடிவமாக விளங்குதலால் அத்தகைய மனநிலை சமாதியே என்று கூறலாகும்.

**149. தக்கமா ஞானபலம் நான்குதுக்கா பாவம்**
**சர்வகா மாப்தியொடு கிருதகிருத் தியமே**
**தொக்கபிராப் தப்ராப்பி யங்கள்என அவற்றுள்**
**சொல்லியதுக் காபாவம் இகபரத்தால் இரண்டாம்**
**பொய்க்கும்ஓர் தூலஉடம்பு எழில்ஒழிவுதீ நாற்றம்**
**புகுபிணிகள் முதலனவும் சூக்குமதே கத்து**
**மிக்ககா மாதியும்கா ரணத்தினில்அவ் ஆதி**
**வியாதிகட்கு வித்தாம்வா சனையும்இகத்து இடும்பை.**

மேலான ஞானத்தின் பலன் துக்காபாவம், சர்வகாமாப்தி, கிருத கிருத்தியம், பிராப்தப் பிராப்பியம் என்று நான்காம். அவற்றுள் துக்காபாவம் (துக்கமின்மை) என்பது இகலோகம் பரலோகம் என்னும் ஏதுக்களால் இரண்டு விதமாய் இருக்கும். அவ்விரண்டினுள் நசிக்கத்தக்க ஓர் தூல சரீரத்தில் அழகின்மை, துர்கந்தம், இடைவிடாது வருகின்ற வியாதிகள் முதலியனவும், சூட்சும சரீரத்தில் காமக் குரோத முதலியனவும், காரண சரீரமான அவித்தையில் அந்த வியாதிகளுக்கும், காமக் குரோதாதிகளுக்கும் காரணமாயுள்ள பூர்வ வாசனையும், ஆகிய இம் மூன்றும் இகலோக துக்கமாம்.

**150. மித்தைஎனும் மாயாகா ரியஉடம்பு ஆதிகளின்**
**வேறாய துரியஞா னத்தின்மே லாக**
**வைத்தஒரு போகபோத் துருக்கள்இலா மையினால்**
**வரஞானிக்கு அவ்இடும்பை மூன்றும்இலாது இருத்தல்**
**பொய்த்தஇக லோகதுக்கா பாவம்எனல் ஆகும்**
**புண்ணியம்வந்து என்றுபோம் பாவம்என நின்ற**
**சித்தம்உறு சிந்தனையே பரலோக துக்கம்**
**தெரியின்எனப் புகன்றிடுவர் திருக்குஅறுநல் அறிஞர்.**

மித்தியா வடிவம் என்று கூறப்படும் மாயையின் காரியமான தூல சரீர முதலியவற்றின் வேறான ஆன்ம ஞானத்தின் பின்னர், மேலாக வைத்திருக்கும் போக்கியங்களும் (இன்ப அனுபவத்திற்கு உரிய விடயங்கள்) போக்தாக்களும் (அனுபவிப்பவர்களும்) மூவுலகத்திலும் அரிதாய் விளங்குகின்ற ஞானிக்கு வேறு இல்லாமையால் ஆதி, வியாதி, வாசனை என்னும் மூவிதத் துக்கமும் அவனுக்கு இல்லாமல் இருப்பதே பொய்யான இவ்வுலகத் துக்க அபாவம் (துக்க நீக்கம்) என்று கூறப்படுவதாம். புண்ணியம் எப்போது வந்து பொருந்துமோ, பாவம் எப்போது நீங்குமோ என்று மனத்திலே பொருந்திய சிந்தனையையே பரலோக துக்கமென விபரீத புத்தி நீங்கிய பேரறிவுடையார் ஆராயும் இடத்து கூறுவர்.

**151. ஞானநிலை அடைதலும்தா மரைஇலை நீர்போல**
**ஞானிஇரு வினையும்உறா மையினால் இந்தனத்தில்**
**தீநணுகும் அழலில்விறகு இலாதது போல்கருமச்**
**செயலில்அவன் ஆம்அவனில் அஃதுஇரா மையினால்**
**மான்அழல்உண் வனத்தில்உ றாதது போலஞான**
**மயனைவினை யாவும்உறா மையினால் அச்சிந்தை**
**தான்அவனில் எழாதுஇருத்தல் தனைஉரைப்பர் மேலோர்**
**தக்கபர லோகதுக்கா பாவம்என அன்றே.**

ஐயம் திரிபு இன்றி சீவ பிரம்ம ஐக்கிய ஞானத்தின் நிலைப் பேற்றினை அடைந்தவுடன் ஞானியை அறம் பாவம் என்னும் இருவினைகள் பற்றாமையாலும், "விறகிலே அக்கினி இருப்பதாம், அக்கினியிலே விறகு இருப்பது இல்லை" என்பது போல நல்வினை தீவினை என்னும் கரும அனுட்டானங்களில், தாமரை இலைமேல் தண்ணீர் ஒட்டாதது போல, அவன் இருப்பவன். அந்தக் கர்ம அனுட்டானங்கள் இல்லாமையால், நெருப்புப் பற்றியுள்ள காட்டில்

மான் முதலிய விலங்குகள் பொருந்தாதது போல, ஞான வடிவமாய் உள்ள ஞானியிடம் கருமம் அனைத்தும் பொருந்தாமையால், புண்ணிய, பாவ சிந்தனையானது அந்த ஞானியிடம் தோன்றாது இருப்பதை அடையத்தக்க பரலோக துக்காபாவம் என்று சான்றோர் கூறுவார்கள்.

**152. எல்லாவாழ் வினையும்உறும் சார்வபௌ மாதி**
**இரணியகர்ப் பாந்தமாய் மேன்மேல் வேண்டுற்ற**
**நல்ஆனந் தங்கள்எலாம் பற்றுஇலா அறிஞன்**
**நணுகுதலால் ஞானம்கொண்டு அறிசிவத்தின் கூறாய்த்**
**தொல்ஆனந் தங்கள்எலாம் நிற்கையினால் அவற்க்குத்**
**தோம்இல்அகண்ட ஆனந்தச் சித்திதோன் றுதலே**
**பொல்லாத வினைப்பகையைக் கடந்தபெருந் தவர்கள்**
**புகன்றிடுவர் சர்வகா மாப்திஎன அன்றே.**

அழகு, இளமை, நோய் இன்மை, உறுதியான அறிவு என்பவற்றை உடையவனாய் நால்வகைச் சேனைகளுடன் உலகம் முழுதும் உள்ள செல்வத்தை அடைந்து இருக்கின்ற பேரரசன் (சார்வ பௌமன்) முதல் இரணிய கர்ப்பன் (நான்முகன்) ஈறாக உள்ளவர் விரும்பிப் பெற்றுள்ள சிறந்த ஆனந்தங்கள் அனைத்தினையும் பற்று இல்லாத ஞானி அடைந்து இருப்பதாலும், ஞானத்தால் அறிதற்கு உரிய பிரம்மத்தின் அம்சங்களாய்க் கூறிய பழைமையான ஆனந்தங்கள் அனைத்தும் இருப்பதாலும், அந்த ஞானிக்குக் குற்றம் இல்லாத அகண்டானந்தம் உண்டாவதைப் பொல்லாத வினைப்பகை கடந்த பெருந்தவத்தோர் சர்வகாமாப்தி (சர்வானந்தம்) என்று கூறுவர்.

**153. தத்துவ ஞானத்திற்கு முன்னம்இங்கு அடையத்**
**தக்கஇட்டம் பெறஅநிட்ட ஒழிவிற்கு வேண்டி**
**வைத்தஉழவு ஆதிகளும் துறக்கம்முதல் பெறற்கு**
**மகம்முதலா யினவும்முத்தி சாதனம்ஆம் ஞான**
**சித்தியுற மிகுசவணா திகமும்அறி ஞர்க்குச்**
**செய்வனவாம் தத்துவஞா னத்தின்பின் குடும்பப்**
**புத்தியொடு பலபோகத்து இச்சைஇலா மையினால்**
**புகன்றஉழவு ஆதிதொழில் யாவும்இலை மையினால்.**

தத்துவ ஞானம் தோன்றுவதற்கு முன்னர் இவ்வுலகில் தாம் அடைவதற்குத் தகுதியாய் உள்ள பிரியமான பொருள்களை பெறுவதற்கும், விருப்பம் இல்லாத

பொருள்களின் நீக்கத்திற்கும் வேண்டி, செய்கின்ற உழவு முதலான தொழில்களும், சொர்க்கம் முதலிய புண்ணிய உலகங்களை அடையும் பொருட்டு வேள்வி, உபாசனை, தவம், ஒழுக்கம், விரதம் முதலாயினவும், வீடுபேற்றிற்குச் சாதனமாய் உள்ள ஞான சித்தியைப் பெறுவதற்கு மேன்மை மிக்க சிரவணம், மனனம், நிதித்தியாசனம் ஆகியனவும் அறிஞர் செய்தற்கு உரியனவாம். தத்துவ ஞானம் ஏற்பட்ட பின்னர் குடும்பத்தை பாதுகாக்க வேண்டும் என்னும் புத்தி நீங்கி இன்பங்கள் பலவற்றில் இச்சை இல்லாததாலும் முன்னர்க் கூறிய உழவு முதலான அனைத்துத் தொழிலும் இல்லை என்பதாம்.

**154. வந்துசிறு சாளரத்தில் தோன்றுபர மாணு**
**வான்கதிரின் மிகும்ஒளியில் தோன்றிடா வாபோல்**
**நந்தலுறு சிற்றறிஞன் விடயமாம் கருமம்**
**ஞானியிடைத் தோன்றாமை யால்இயற்றத் தக்க**
**முந்துமகம் முதலனஇங்கு இலைபிரமா னந்தம்**
**முதல்உண்மை எய்தலால் சவணாதி எல்லாம்**
**சிந்தைஉற இயற்றுமளவு ஆகும்அதால் இதுவே**
**செப்பியஅக் கிருதகிருத் தியத்துவம்என்று அறியே.**

ஒரு சிறிய சன்னலின் வழியே வந்து தோன்றும் சூரிய ஒளியிலே தோன்றும் அணுத்துகள்கள் வெளியே உள்ள சூரியனின் மிகுந்த ஒளியிலே தோன்றாத தன்மையைப் போல, கெடுவதற்கு உரிய அற்ப அறிவினரிடத்துத் தோன்றும் கருமங்கள் ஞானியிடம் தோன்றாமையால் அவன் செய்யத் தக்க யாகம் முதலியன இவ்வுலகிலே இல்லையாம். பிரம்மானந்தத்தை அடைந்து இருத்தலால் சிரவண முதலியன அனைத்தும் அவனால் செய்யப்பட்டனவேயாம். அதனால் இதுவே முன்னர்க் கூறிய கிருத கிருத்தியம் (செயல் அனைத்தும் செய்து முடிந்தது) என நீ அறிவாய்.

**155. முற்றல்உறு விசிட்டபுண் ணியபரிபா கம்தான்**
**முத்திவிருப்பு அரியகுரு வழிபாடு பெருநூல்**
**வெற்றிதரு சவணாதி அறிவுஅறியா மைகளின்**
**விவேகம்மிகும் அஞ்ஞான அழிவொடுதன் உண்மை**
**பெற்றசமு சாரதுக்க நிவர்த்திநிசா னந்தப்**
**பேறுஎய்தலே பிராப்தப் பிராப்பி யமாம்**

**பற்றும்உயர் முத்திவகை இரண்டுஆகும் அவைதாம்**
**பகர்சீவன் முத்தியொடு விதேககை வல்யம்.**

புண்ணிய கருமத்தின் பரிபாகமும் (ஏற்ற பக்குவம்), அதனால் வீடுபேற்றில் விருப்பமும், அதனால் பெறுதற்கு அரிய குரு பணிவிடையும், வேதாந்த நூல் ஏற்றலும், வெற்றியைத் தருகின்ற சிரவண மனனம் முதலானவைகளும், ஆன்ம அநான்ம ஆகியவற்றின் விவேகமும், மிக்க அஞ்ஞானத்தின் அழிவும், தனை உணர்ந்து சாட்சாத்காரம் பெற்று, துக்க நீக்கமும், முக்கியமான நிசானந்தப் பேறும் அடைதலே பிராப்தப் பிராப்பியம் (அடையத்தக்க பேறுகள் அனைத்தும் பெற்றவன்) ஆம். அடையத்தக்க அனைத்தினும் உயர்வான வீடுபேற்றின் வகை இரண்டாகும். அவை ஞானிகள் புகழ்ந்து பேசும் சீவன் முத்தியும், விதேக முத்தியும் ஆகும்.

**156. அறிவுடையார்க்கு அகம்ஆன்மா வொடுவருசம் பந்தம்**
**அகறலினால் பிறர்உடல்போல் தம்உடலம் தனிலும்**
**உறுதிதரும் அபிமானம் இன்மையே ஆகி**
**உண்ணும்அநு பவஒப்பால் வருபிரா ரத்த**
**வறுநுகர்வுஉண் டாம்சுழுத்தி பாலாதி போல**
**மந்தானு சந்தானம் ஆதலில்தே காதி**
**செறிஅபிமா னம்கழன்றும் கடம்உதித்தும் சுழலும்**
**திகிரிபோல் வாதனையால் உறல்சீவன் முத்தி.**

அறிவுடைய ஞானிகளுக்கு, அகங்காரத்திற்கும் ஆன்மாவிற்கும் வந்துள்ள தொடர்பு நீங்கியமையால், அன்னியரது சரீரத்தைப் போலத் தம்முடைய சரீரத்திலும் நான் என்ற அபிமானம் சற்றும் இல்லாதவராய் இருப்பர். அஞ்ஞானிகளைப் போலச் சுக துக்கங்களை அனுபவிக்கின்ற அனுபவத்தின் ஒப்புமையால், அவர்களுக்கு அநாதியாய்த் தொடர்ந்து வருகின்ற பிராரத்தத்தின் பயனாக, சுக துக்க அனுபவம் தோன்றும். தூக்கத்தில் இருக்கும் பாலர் முதலியோர் போல சுக துக்க அனுபவத்தை மிகக் குறைவாய் அனுபவிப்பார்கள். எனவே சரீரம் முதலியவற்றில் பொருந்தியுள்ள அபிமானம் நீங்கியும், குடம் உற்பத்தியாகிய பின்னும் சுற்றுகின்ற குயவன் சக்கரம் போல, கரும வாசனையின் பலத்தால் சஞ்சரிப்பதே சீவன் முத்தியாம்.

**157. பரமமா ஞானம்தோன் றுதலுமே கதிர்முன்**
**பாயிருள்போல் அஞ்ஞானத் துடன்அதன் காரியமாம்**

***புரம்முதலா யினஅனைத்தும் அகன்றிடுதல் தானே**
**புகல்அரிய விதேககைவல்லியம்என்று இசைப்பர்**
**உரம்உறும் இங்குஇதுவாகச் சீவன்முத்தி உளதுஎன்று**
**உரைப்பதுஎவ் வாறுஎனில் கயிற்றின்அரவமயக்கு ஒழிந்தும்**
**வரும்அதன்கா ரியம்ஆகும் பயகம்பம் ஆதி**
**மருவுதல்போல் ஞானத்தால் அஞ்ஞானம் கெடினும்.**

ஞானிக்கு மிக உயர்ந்ததாய் உள்ள பிரம்ம ஞானம் தோன்றிய பொழுதே சூரியோதயத்தின் முன் பரவி இருக்கின்ற இருள் நீங்குவது போல, அஞ்ஞானத்தோடு அதன் காரியமாய் உள்ள சரீர முதலான அனைத்தும் நீங்கிக் கெடுதலே சொல்லுதற்கு அரிய விதேக முத்தி என்று மேலோர் கூறுவர். இங்கு ஞானத்தால் பெறுதற்கு உரிய விதேக முத்தி என்பது உளதாக, இதற்கு இடையில் சீவன் முத்தி என ஒன்று இருக்கின்றது என்பது எவ்வாறு பொருந்தும் என்றால், அறியாமையினால் கயிற்றைப் பாம்பு என்று கருதும் மயக்கம் நீங்கினாலும் அந்த பிராந்தியின் காரியமாய் உள்ள நடுக்கம், அச்சம் முதலியன அற்ப காலம் பொருந்தி இருப்பது போல, தத்துவ ஞானத்தால் அஞ்ஞானம் நாசம் ஆனாலும். (குளகம்)

**158.** **அதனதுகா ரியம்ஆகும் உடம்புஆதி நிற்கும்**
**அதனாலும் பிரமஞா னம்தோன்றும் பொழுதே**
**சிதைதரும் அஞ்ஞானமுடன் உடம்புஒழியும் ஆயின்**
**திகழ்பிரம வித்தியா சம்பிரதா யம்தான்**
**கதிஒழியும் அதனாலும் பரசிவனால் பிரமன்**
**கமலனால்உயர் பிரசா பதிஅவனால் மனுவாம்**
**புதமனுவால் மனுடர்உணர்ந் தனர்எனவே முறைமை**
**புகல்சுருதி விரோதமாம் அதனாலும் அன்றே.**

அந்த அஞ்ஞானத்தின் காரியமான சரீரம், இந்திரியம், மனம் முதலியன கெடாது இருக்கின்றன என்பதாலும், பிரம்ம ஞானம் உண்டான பொழுதே கெடுகின்ற அஞ்ஞானத்தோடு அதன் காரியமான சரீரம் அழியுமானால் பிரம்மவித்தியா சம்பிரதா யத்தின் முறை கெடும் என்பதாலும், பரமசிவனால், தாமரை மலர்மேல் வீற்று இருக்கின்ற நான்முகனும், அவனால் மனுவும், விவேக ஞானம் உடைய மனுவினால் இட்சுவாகு

* புரம் = சரீரம்

முதலான மனிதரும் பிரம்மத்தை அறிந்தனர் என்று சுருதி கூறுவதற்கு விரோதமாகும் ஆதலினாலும். (குளகம்)

**159. செஞ்ஞானிக்கு உரித்துஆகும் சீவன் முத்தி**
**சித்தித்தற்கு உற்றபிரா ரத்தவா தனையோடு**
**அஞ்ஞான லேசசற் பாவஉடன் பாட்டால்**
**ஆகநிலையும் சீடர்க்கு உபதேசா திகளும்**
**எஞ்ஞான்றும் கிடைத்திடுமால் அச்சீவன் முத்தற்கு**
**இரிதருசஞ் சிதம்அங்கி புகும்முளி புற்போல**
**மெய்ஞானத் தால்பிரா ரத்தம்நுகர்ந்து ஒழியும்**
**மேல்வினைகூ டாதுஅன திகாரிஆ தலினால்.**

சிறந்த ஞானி பெறுவதற்கு உரியதான சீவன் முத்தி அடையும் பொருட்டு, பொருந்திய பிராரத்த வாசனையுடன், அஞ்ஞானத்தின் அம்சமான விட்சேபத்தின் இருப்புத் தன்மையை சீவன் முத்தனுக்கு அங்கிகரிப்பதனால் (ஏற்கும் உடன்பாட்டினால்), சரீரத்தின் இருப்பும், சீடர் முதலியோருக்கு உபதேசம் செய்தலும், எக்காலத்திலும், சித்திப்பனவாம். அச்சீவன் முத்தனுக்குச் சஞ்சித கர்மங்கள், தத்துவ ஞானத்தினால், நெருப்பிலே சேர்த்த உலர்ந்த புல் போல அழிவதாம். பிராரத்தத்தின் பயன் ஆகிய இன்ப துன்பங்கள் அவன் அனுபவித்த பின்பே கெடும். அவனுக்கு கர்ம அதிகாரம் இல்லாமையால் ஆகாமிய கர்மம் (இனி செய்யும் புண்ணிய பாவங்கள்) அவனைப் பற்றுவதில்லை.

**160. பெற்றஉயர் ஞானத்தால் ஒழிந்தவினை தானே**
**பிராரத்த போகத்தை அளிக்கும்எனில் அதுமேல்**
**உற்றஉடல் உற்பத்தி தனையும்இயற்று உறும்என்று**
**உரைப்பில் வறுவிதைநுகர்ச் சிக்குஅன்றியே முளைக்கும்**
**மற்றுஅதுதான் காரணம்அன்று அதுபோல ஞானி**
**வருகரும நுகர்ச்சியினா லேஒழிவ தாகி**
**அற்றம்உறு பிறவிமேல் விளைத்திடுதற்கு ஏது**
**ஆகாதுஎன்று இயம்பிடுவர் அறிவுஅறி தக்கவரே.**

தான்அடைந்த உயர்வான தத்துவ ஞானத்தால் நீங்கின வினையே இன்னும் பிராரத்த கருமத்தால் போகத்தைத் தரும் அதனால் அவ்வினையானது இனி வரக் கூடிய சரீர உற்பத்தியையும் உண்டாக்கும் என்று கூறினால், வறுத்த விதையானது

உண்பதற்குப் பயன்படுமே அன்றி முளை விட அது காரணம் ஆக மாட்டாது. அதுபோல, தத்துவ ஞான அனுபவத்திற்குப் பின்னர் வருகின்ற பிரரரத்த கருமம் ஞானி அனுபவித்தலால் நீங்குமே அன்றி இனி பிறப்பினை உண்டாக்கக் காரணம் ஆகாது என்று மெய்யுணர்வை பெற்ற பெரியோர்கள் கருமத்தின் இயல்பினை கூறுவர்.

**161. அறைந்தநுகர் வினையதுதான் உலோகயாத் திரைகள்**
**அநதிகரித்து உறுநரற்கே ஓர்உடம்பு தன்னில்**
**செறிந்துநுகர்வு ஆம்அவற்றின் அதிகிருதர் ஆகிச்**
**சிறந்தமா புருடர்க்குத் தசசங்கை உடம்பில்**
**உறைந்துஅலது தீர்ந்திடாது எனினும்மறைப்பு இன்றி**
**உறுதலால் ஒருவனுக்குஇங்கு இளமைமுதல் பேதம்**
**பிறந்திடினும் அவனுக்குஓர் உடம்பேயாய் நின்ற**
**பெற்றிபோல் ஆகும்என உணர்ந்திடுக தெரிந்தே.**

முன்னர்க் கூறிய அந்தப் பிராரத்த கருமம் உலக ஆசாரங்களைக் கடவாத தகுதியற்ற மக்களுக்கு ஓர் சரீரத்தில் பொருந்தி அனுபவித்தற்கு உரியதாம். உலக ஆசாரங்களைக் கடந்து நற்குணங்களால் சிறப்புற்று இருக்கின்ற ஞானிகளுக்குப் பத்து சரீரங்களில் பொருந்தி அனுபவித்தால் அன்றித் தீராது என்று கூறப்படுவதாம். ஆயினும், மறைத்தல் சற்றும் இன்றி ஞானம் பொருந்தி இருத்தலால், ஒருவனுக்கு இளமை முதுமை முதலிய வேறுபாடுகள் பல தோன்றினாலும் அவனுக்கு ஓர் சரீரமே இருந்த விதம் போல ஞானியின் பல சரீரங்களுக்கும் பிராரத்த கருமமும் ஒன்றே ஆகும் என்பதை ஆராய்ந்து அறிவாயாக. (விஷ்ணுவிற்கு ஒரு பிராரத்தம் தசாவதாரத்தில் நீங்குதல் போலவாம்.)

**162. விடயங்கள் அனைத்தினுக்கும் பொய்மைசா திக்கும்**
**மெய்ஞ்ஞானம் தனக்கும்அவைக்கு உண்மைசா திக்கும்**
**உடலின்நுகர் வினைக்கும்ஒன் றற்குஒன்று விரோதம்**
**உண்மையினால் ஞானிக்கு நுகர்வுஎங்ஙன் என்னில்**
**கெடுகனவு முதலவற்றுள் மைதுனாதி களாம்**
**கேடுஇல்நுகர்வு ஆதல்போல் பிராரத்த போக**
**விடயங்கள் உண்மையாய் அலதுஆகாது என்னும்**
**விதிஇன்மை யால்நுகர்வும் உணர்வும் முரணாவால்.**

விடயங்கள் அனைத்தும் பொய் எனச் சாதிக்கின்ற உண்மையான தத்துவ ஞானத்திற்கும், அவற்றிற்குச் சத்தியத்தை சாதிக்கின்ற பிராரத்தத்திற்கும் ஒன்றுக்கு

ஒன்று வேறுபாடு இருத்தலால், தத்துவ ஞானிக்குப் பிராரத்த போக அனுபவம் எவ்வாறு பொருந்துவது என்று கேட்பாய் ஆயின், தோன்றி அழிகின்ற சொப்பனத்தில் உண்டாகும் புணர்ச்சியும், பாம்பு, புலி முதலியவற்றால் அச்சமும், கல்கண்டு பால் முதலியவற்றை உண்ட மகிழ்ச்சியும், ஆகிய உண்மையான போகானுபவம் ஆதல் போலவாம். விடயங்கள் உண்மையாய் இருந்தால் அல்லது போக அனுபவம் இல்லை என்னும் விதி பொருந்தாமையால் பிராரத்த கரும போகானுபவமும், தத்துவ ஞானமும் விரோதம் ஆக மாட்டாது.

**163. வந்தமயல் ஒழிந்தளவே இப்பிஇடை வெள்ளி**
**மாய்தல்போல் அறிவினால் அஞ்ஞானம் கெடலும்**
**இந்தஉலகு அதுதோற்ற மேஇலா மையினால்**
**எங்ஙனமாம் வினைப்போக நுகர்ச்சிஎனில் இப்பி**
**தந்தஇர சதநிருபா திகப்பிரமை ஆகும்**
**தன்மையால் உணர்ந்தளவில் வெள்ளிஉருவு ஒழியும்**
**பந்தம்உறும் இதுசோபா திகம்ஆகும் அதனால்**
**பகர்ந்ததுபோல் அன்றாம்மற்று எங்ஙன்எனில் உரைப்பாம்.**

ஒருவனுக்கு கிளிஞ்சலில் தோன்றிய வெள்ளி என்னும் மயக்கம், அது கிளிஞ்சல் என்ற ஞானம் தோன்றிய போதே, கிளிஞ்சலின்கண் உள்ள வெள்ளி மறைவது போல, தத்துவ ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கிய அளவில், இந்த உலகத்தின் தோற்றமே இல்லாமையால், அவனுக்கு பிராரத்த வினைத் தொடர்பால் உண்டாகிய போகானுபவம் எவ்வாறு பொருந்தும்? என்று கேட்பாய் ஆயின், கிளிஞ்சலில் தோன்றிய வெள்ளியானது நிருபாதிகப் பிராந்தி ஆம். அந்த முறையில் இது கிளிஞ்சல் என்று அறிந்த மாத்திரத்தில் வெள்ளியின் வடிவம் கெட்டு அழியும். பந்தம் காரணமாகப் பொருந்தி உள்ள இவ்வுலகம் சோபாதிகப் பிராந்தியாகும். அதனால் மேலே கூறிய நிருபாதிகப் பிராந்தி போல் கெடுவது அன்று. பின் எத்தன்மையது எனக் கேட்பின் விடை கூறுவோம். (நிருபாதிகம்= உபாதி இல்லாதது; சோபாதிகம்= உபாதியோடு கூடியது).

**164. தடத்தின்உயர் கரைஅமர்வோன் அத்தடத்துப் புனலில்**
**தான்அதோ முகம்ஆக இருப்பதுபொய் என்று**
**படைத்ததெளிவு உளமோடுஇருப் பினும்அதோ முகமாம்**
**படிவம்தோன் றுதல்போல் மூலஅகங் காரம்**

**அடுத்துவரு சீவபாவா திகமோ மித்தை**
**அறிதுரியன் தான்எனவே உணரினும்சீ வாதி**
**தொடுத்தஉலகு உறுதலினால் சீவன்முத்தன் தனக்குத்**
**துய்க்கும்வினைப் போகவிவ காரமுடன் பாடாம்.**

ஒரு குளத்தின் உயர்ந்த கரையில் இருப்போன், அக்குளத்து நீரில் தலை கீழாகத் தோன்றுவது பொய் என்று உறுதியாகக் கொண்டு தெளிந்த மனத்தோடு இருந்தாலும், நீரில் அவனுக்குத் தலை கீழாகக் காணும் தனது வடிவம் நீங்காது தோன்றுவது போல, சீவன் முத்தனுக்கு மூல அகங்காரத்தைப் பற்றி வருகின்ற சீவத்துவம் முதலிய அனைத்தும் பொய்யாம். அவற்றைச் சாட்சியாக இருந்து அறிகின்ற ஆன்மா, தானே என்று உணரினும், சீவன் முத்தனுக்குச் சீவாதி முதலியனவாகப் பொருந்திய உலகம் தோன்றிக் கொண்டு இருத்தலால், போகத்தை அனுபவித்தற்குக் காரணமாய் உள்ள பிராரத்த வினை நுகர்ச்சி விவ்காரம் ஏற்றுக் கொள்ளப்படுவதாம்.

**165. சீவன்முத்தற்கு உரியனவாம் மைத்திரியே கருணை**
**திகழ்முதிதை உபேட்சைஎனும் சற்குணங்கள் அவற்றுள்**
**மேவுறுசற் புருடரொடு நட்புமைத் திரியாம்**
**மெலிதருதுக் கிகள்இடத்தில் இரக்கமே கருணை**
**ஒவறுநல் புண்ணியர்பால் விருப்பமே முதிதை**
**உவப்புறுவெறுப்பு இரண்டும்இலாது உலகில்அவம் இயற்றும்**
**பாவிகளை விடுதலே உபேட்சைஎன அறிக**
**பயன்ஐந்துஅச் சீவன்முத்தற்கு உளஅவைஈண்டு.**

அந்தச் சீவன் முத்தனுக்கு மைத்திரி, கருணை, விளங்குகின்ற முதிதை, உபேட்சை என்னும் சிறந்த குணங்கள் உரியனவாம். அந்நான்கு குணங்களுள், சுகிகளிடத்து நட்புக் கொள்ளுவதே மைத்திரியாம். துக்கிகளிடத்து இரக்கங் கொள்ளுவதே கருணையாம். இடைவிடாது நல்வினைகளைச் செய்கின்ற புண்ணியரிடத்தில் உண்டாகும் விருப்பமே முதிதையாம். உலகில் தீவினைகளையே விடாது செய்யும் பாவிகளை விருப்பு வெறுப்பின்றி விட்டு நீங்குவதே உபேட்சையாம். இவ்வாறு சீவன் முத்தனின் சிறந்த குணங்களை அறிவாயாக. அத்தகைய சீவன் முத்தனுக்கு ஐந்து பயன்கள் உளவாம். அவற்றை இங்கே கூறுவோம்.

**166. ஞானரக்கை தவம்சகல சம்வாதம் உடனே**
**நவில்துக்க ஒடுக்கமொடு சுகாவிற்பா வம்தான்**

**ஆனவற்றுள் மருவும்வா சனைஅழிவு மனத்தின்**
**அடக்கங்க ளால்புத்தி நிருமலமாய் இருத்தல்**
**ஞானரக்கை மனம்பொறிகட்கு ஒருமையே தவமாம்**
**ஞானிஎன உலகம்எலாம்வழிபடல்சம் வாதம்**
**ஆனமனக் கிலேசம்அற லேதுக்க ஒடுக்கம்**
**அவற்றினால் பந்தம்அறல் சுகாவிற்பா வம்தான்.**

ஞானரட்சை, தவம், சம்வாதம், துக்கஒடுக்கம், சுகாவிற்பாவம் என்பன சீவன் முத்தனுக்குரிய ஐந்து பலன்களாம். இந்த ஐந்தனுள் அசுத்த வாசனைகள் அழிந்த மனம், நாம் பிரம்ம சொரூபம் என்னும் ஞானத்தால், சித்தம் ஆன்ம சொரூபத்தை நோக்கி நின்று, புத்தி அனான்ம சிந்தனையின்றி ஆன்ம சிந்தனை யோடு இருத்தல் ஞானரட்சையாம். மனத்திற்கும் இந்திரியங்களுக்கும் ஏகாக்கிரம் (ஒரு முகமாதல்) உண்டாதலே தவமாம். இவன் மெய் ஞானியென உலகில் உள்ளோர் அனைவரும் வந்து வணங்குதலே சம்வாதமாம். அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபினிவேஷம் ஆகிய மனக்கிலேசங்கள் ஒழிதலே துக்க நிவிர்த்தியாம். அந்த ஞான ரட்சை முதலிய சாதனங்கள் சித்தித்து இருத்தலால் பிரதிபந்தமற்று இருப்பதே சுகாவிற்பாவமாம். (ஆத்மானந்தம் வெளிப்படுதலாம்).

**167. குறிகள்ஓர் பத்துஉளவாம் ஞானமயற்கு அவைதாம்**
**குரோதம்இன்மை வைராக்கியம் பொறிபுலன்கள் அடக்கல்**
**அறம்உதவு சமைதமையே சனப்பிரியத்து வமோடு**
**அலோபமொடு கொடைஅபயம் நிருமதம் என்றுஅறிக**
**நெறிமருவு சீடரொடு பத்தர்உதா சீனர்**
**நிலையில்பா விகள்என்னும் நால்வகையோர் இடத்தும்**
**முறையின்அனுக் கிரகம்வந்து உறும்அருள்கொள் சீவன்**
**முத்தனால் என்பர்அவை முறையின்எடுத்து உரைப்பாம்.**

ஞான வடிவாக விளங்கும் சீவன் முத்தனிடம் ஒப்பற்ற பத்து அடையாளங்கள் உள்ளன. அவை, வெறுப்பின்மையும், வைராக்கிய பலமும், இந்திரியங்களைப் புற விடயங்களில் செல்லாமல் அடக்குதலும், நன்னெறிகளை உண்டாக்கிடக் காரணமான மன அடக்கமும், இந்திரியங்களின் அடக்கமும், அனைத்து மக்களிடமும் பிரியமாய் இருத்தலும், லோப குணம் இன்மையும், தன் பொருளைப் பிறருக்குக் கொடுத்தலும், பயம் இன்மையும், செறுக்கு இன்மையும் என அறிவாயாக. கருணையே தனக்கு வடிவமாக

கொண்டுள்ள சீவன் முத்தனுக்கு விவேகாதி சாதனங்களை பொருந்தி நடக்கின்ற சீடர்களும், பக்தர்களும், வெறுப்பு அற்றவர்களும் (உதாசீனர்கள்) நல்வழியில் நிற்காத பாவிகளும், எனக் கூறப்படும் நான்கு திறத்தோரிடம் முறையாக அருள் வந்து பொருந்துவதாம் என்று மேலோர் கூறுவதால் அவற்றை இனி முறையாக எடுத்துக் கூறுவோம்.

**168.** **தெரிவுஅரிய சீவன்முத்தன் தனைநம்பும் அதனால்**
**சீடர்க்கு முத்தியும்அன் பொடுவழிபாடு அதனை**
**புரியும்எஉயர் பத்தர்கு நல்வினையும் அவன்தன்**
**புனிதம்உறு சரிதம்அது கண்டஉதா சீனர்க்கு**
**உரியபுண் ணியவிருப்பும் அவன்தன்வடி வினைகண்**
**ணுறுதல்முத லானவற்றால் பாவிகட்குப் பாவ**
**இரிவும்உறும் என்பர்தருக்க ஆதியால் ஆதல்**
**எங்ஙன்எனின் முத்தனால் பிரமோப தேசம்.**

அறிதற்கு அரிய சீவன் முத்தனை பிரம்மமே என நம்பி வழிபடுவதால் சீடர்களுக்கு ஞான உபதேசத்தால் வீடு பேறும், அன்புடன் இட்ட பணி செய்யும் மேன்மை பொருந்திய பக்தர்களுக்கு புண்ணியமும், அச்சீவன் முத்தனது சரித்திரத்தை வாசித்து உணர்ந்த உதாசீனர்க்குப் புண்ணியச் செயலில் விருப்பமும், அவனது திருமேனியைத் தரிசித்தலும் முதலாக உள்ள நற்கருமங்களைச் செய்ததால் பாவிகளுக்குப் பாவ நீக்கமும் உண்டாவன என்று சீவன் முக்தன் பக்குவத்திற்கு ஏற்ப அருளும் வகையை அறிந்த மேலோர் கூறுவர். சீவன் முத்தனால் தருக்கம் முதலியவற்றால் சீடருக்குப் பிரம்ம உபதேசம் செய்வது எப்படிப் பொருந்தும் என்று வினவுவாய் ஆனால். (குளகம்)

**169.** **மறைப்புஅகலும் ஒருபிரம சொரூபம்ஆ தலினால்**
**மகிழ்ச்சிவெறுப்பு இலாஈசற்கு அனுக்கிரகம் செயவும்**
**ஒறுப்புஉறவும் வரும்வினையி னோரால்அத் தொழில்கள்**
**உறுதல்போல் சாதகர்தம் பக்குவபே தத்தால்**
**சிறப்புறுநல் உபதேசா திகள்ஞானிக்கு எய்தும்**
**செப்பியஇவ் இலக்கணமொடு இராதுபல முறையால்**
**துறப்பில்அருள் சீவன்முத்தர் இருப்பதுஎன்கொல் என்னில்**
**துணிவுதோன் றுறமுதுநூல் தொகுத்தபரிசு உரைப்பாம்.**

இயல்பாகவே மறைப்பு நீங்கியுள்ள ஒப்பற்ற பிரம்ம வடிவவமாய் இருத்தலால், விருப்பு வெறுப்பு இல்லாத ஈசுவரனுக்கு, புண்ணிய கருமம் செய்த சீவர்களுக்கு அருள் செய்தலும், தீவினை செய்த சீவர்களை தண்டிப்பதும், ஆகிய செயல்கள் உண்டாதல் போல, சீவன் முத்தனுக்கு சாதகம் செய்பவரது பக்குவ வேறுபாட்டிற்குத்தக்க அனைத்திலும் சிறப்பான பேரானந்தம் உண்டாகிடக் காரணமான சிறந்த ஞான உபதேசம் செய்தல் முதலியன உண்டாகும். நீக்கமற்ற கருணை கொண்ட சீவன் முத்தர்கள் முன்னர்க் கூறிய இந்த இலக்கணங்களோடு இல்லாமல் பலவிதமாக இருப்பது ஏன் என்று கேட்பாய் ஆனால், உறுதி தோன்றுமாறு பழைமையான வேதாந்த நூல்கள் தொகுத்துக் கூறியபடி அதனைக் கூறுவோம்.

**170. வந்துஅணையும் பிராரத்த வாசனைதீ விரமே**
**மத்தியமந் தம்சுத்தம் எனஒருநான்கு ஆகும்**
**பந்தம்அறு ஞானியா யினும்போகத்து அழுந்தி**
**பசுப்போலத் தன்மகிழ்ச்சி மாத்திரமாய் இருத்தல்**
**முந்துரைசெய் தீவிரம்போ கச்சிறப்புற் றிடினும்**
**மொழிஆன்ம தற்பரனாய் விநோதமே புரிந்து**
**மைந்தர்என இருத்தல்மத் தியம்போகம் அனைத்தும்**
**மாற்றிமிது னம்போல் ஆனந்தம்உறல் மந்தம்.**

சீவன் முத்தன் அனுபவித்து நீக்குவிக்கும் பொருட்டு அவனிடம் பிராரத்த வினை வந்து சேரும். அது தீவிரமும், மத்தியமும், மந்தமும், சுத்தமும் என்று ஒப்பற்ற நான்கு வகையாகும். அவற்றுள் ஒருவன் தத்துவ ஞானியாயினும், அவன் விடய போகத்து அழுந்திய சீவனைப் போலும், தன் மகிழ்ச்சி மட்டுமே கருதி இருத்தலுக்குக் காரணமாய் இருப்பது முன்னர்க் கூறிய தீவிரமான பிராரத்தமாம். ஞானியானவன் தான் அனுபவிக்கும் விடய இன்பத்தில் பொருந்தியவனாய் இருப்பினும், கூறுகின்ற ஆன்மாவின்கண் முக்கிய கருத்து உடையவனாய், குழந்தை போல பல திருவிளையாடல்களைச் செய்து இருப்பதற்குக் காரணமாய் இருப்பது மத்தியமான பிராரத்தமாம். ஞானி அனுபவிப்பதற்கு உரிய போகம் அனைத்தையும் மித்தை என நீக்கி (காதலியும் காதலனும் கருத்து ஒருமித்து அனுபவிக்கும் ஆனந்தம் போல) நிச ஆனந்தம் அடையக் காரணமாய் இருப்பது மந்தமான பிராரத்தமாம்.

**171. உலகவழக்கு அகன்றுநிரு பாதிகான் மாவில்**
**உற்றதற் பரன்ஆகிப் பரமுத்தன் எனவே**

**இலகுசுகத் துடன்இருத்தல் சுத்தவா சனையாம்**
**என்பர்இந் நால்வகையாகும் கருமவா சனையால்**
**தலைமைகொள் முத்தர்கள்வேறு வேறுஆய ஒழுக்கம்**
**சாரினும்செந் நெறிகோணல் நெறிபெருமா நதிகள்**
**அலைகடலில் புகுதல்போல் முடிவினில்மெய்ப் பரமாய்**
**அமர்தருநல் முத்திசுகம் ஒருபரிசுஎன்று அறியே.**

ஞானியானவன் உலக விவகாரம் அனைத்தும் அகன்று ஆன்மாவின்கண் பொருந்திய சித்தம் நிலைத்தவனாய் விதேக முத்தனைப் போல மாறாது விளங்குகின்ற பெரு மகிழ்ச்சியோடு இருக்கக் காரணமாய் இருப்பது சுத்த பிராரத்தமாம், என்று மேலோர் பிராரத்த வாசனையின் வகையைக் கூறுவர். நான்கு வகையாய் உள்ள இந்தப் பிராரத்த வாசனையால் மேன்மையுற்ற சீவன் முத்தர்கள் தம்முள் பலவிதமான ஒழுக்கங்களைப் பெற்று இருப்பர். அவ்வாறு இருப்பினும் நேரான வழிகளிலும் கோணலான வழிகளிலும் ஓடும் பெரு நதிகள் முடிவில் பெருங்கடலில் கலந்து ஒன்றாதல் போல பிராரத்த முடிவில் மெய்யான பிரம்ம வடிவமாய்ப் பொருந்தி அனுபவிக்கின்ற ஆனந்தம் ஒரே விதமாய் இருப்பதாம் என அறிவாய்.

**172. இச்சையுடன் அநிச்சைபிறர் இச்சைஎனும் இவற்றால்**
**இயம்பல்உறு பிராரத்தம் மூன்றுவகைப் படுமால்**
**அச்சுரர்க ளாலும்விலக் குதற்குஅரிய வாகும்**
**அபத்தியம்செய் திடல்தனக்கே கேடுஎனஇங்கு அறிந்து**
**வைச்சும்அது புரிவித்தல் இச்சைசெய்யேன் எனினும்**
**மன்னவர்தம் ஆணைபோல் செய்வித்தல் அநிச்சை**
**இச்சைஅநிச் சைகள்இன்றி இருந்தும்அய லோரால்**
**இன்பதுன்பம் நுகர்வித்தல் பிறர்இச்சை வினையாம்.**

முன்னர்க் கூறிய பிராரத்த கருமம், இச்சாப் பிராரத்தம், அநிச்சா பிராரத்தம், பிறர் இச்சா பிராத்தம் என மூன்று விதமாக இருப்பதாம். இவை அந்த நான்முகன் முதலிய தேவர்களாலும் நீக்குதற்கு அரியனவாகும். ஒருவன் இவ்வுலகில் பத்தியம் தவறுதல் தனக்குக் கேடு என்று அறிந்திருந்தும் விருப்பத்தின் மிகுதியால் அதனைச் செய்வித்தல் இச்சாப் பிராரத்தம் ஆகும். ஒருவன் இச்செயலைச் செய்ய மாட்டேன் என்று இருந்தாலும் அரசனது ஆணையால், பலவந்தமாக அதனைஉடன்படச் செய்விப்பது அநிச்சாப் பிராரத்தமாம். ஒருவன் இச்சை அநிச்சைகள் இல்லாது இருந்தும், பிறர் இச்சை மூலம் அவனை இன்ப துன்பங்களை அனுபவிக்கச் செய்வது பிறர் இச்சாப் பிராரத்தமாம்.

**173. இப்பரிசு மூவகையாம் பிராரத்த விளைவால்**
**எண்ணில்பல ஒழுக்கமாம் சீவன்முத்தர்க்கு இந்த**
**மெய்ப்பொருளை வசிட்டன்நா ரதன்துருவா சன்சீர்**
**வியாதனொடு சுகன்வாம தேவன்அருள் சனகன்**
**ஒப்பரிய பரதன்எழில் கௌதமனே முதலாய்**
**உளர்வருத்த னாபேதம் உணர்த்தல்உறும் இங்ஙன்**
**துப்புதவு பிராரத்தம் கொளின் அஞ்ஞா னிக்கும்**
**சுத்தனுக்கும் வேறுபாடு எங்ஙன்எனின் மொழிவாம்.**

சீவன் முத்தர்களுக்கு இவ்வாறு மூன்று விதமாக உள்ள பிராரத்த வினை உண்டாவதால் எண்ணிக்கை இல்லாத பலவிதமான ஒழுக்கங்கள் உண்டாகும். இந்த உண்மைகளை வசிட்டர், நாரதர், துருவாசர், சிறந்த வியாசர், சுகமுனிவர், வாம தேவர், அருளுடன் கூடிய சனகர், ஒப்பில்லாத பரதன், அழகிய கௌதம முனிவர் முதலாய் உள்ள சீவன் முத்தர்களது ஒழுக்க பேதமே அறிவிப்பதாம். இவ்வாறு போகத்தைத் தருகின்ற பிராரத்த வினை சீவன் முத்தர்களுக்கு உண்டு என்றால் அஞ்ஞானிக்கும், தத்துவ ஞானிக்கும் பேதம் எப்படி என்று கேட்பின் விடை கூறுவோம்.

**174. மண்உலகில் *விராத்திரியர் *சோத்திரியர் தமக்கு**
**மறைஒழிதல் ஓதலால் அன்றிஉணல் முதலாம்**
**எண்ணவரும் செயலால்வேறு இலாமையது போல**
**இதயபந்தம் உறல்ஒழித லால்அன்றிப் போகம்**
**உண்ணுநிலை அதனால்அஞ் ஞானம்உடை யோர்க்கும்**
**உணர்வுமய மாய்நின்ற சீவன்முத்தர் தமக்கும்**
**நண்ணிவரும் வேறுபாடு இலைஎனவே நவில்வர்**
**ஞானநூல் பலஉணர்ந்த நல்உணர்வி னவரே.**

உலகத்தில் விராத்திரியர், சுரோத்திரியர் ஆகிய இருவர்க்கும் வேதப் பயிற்சி செய்யாமையாலும், செய்வதாலும் வேறுபாடே தவிர, உண்ணல், உடுத்தல் முதலிய செயல்களால் வேறுபாடு இன்மை போல, அஞ்ஞானிகளுக்கும், ஞான வடிவாய் விளங்கும் சீவன் முத்தர்கள் என்னும் ஞானிகளுக்கும், பந்தம் அடைந்திருத்தலும், பந்தம் இல்லாது இருத்தலும் என்பனவற்றால் வேறுபாடே அன்றி, சுக துக்க போகமாகிய பிராரத்த

* விராத்திரியர் = வேத அத்தியயனம் செய்வதற்கு அதிகாரம் இல்லாதவர்.
* சுரோத்திரியர் = வேத அத்தியயனம் செய்வதற்கு அதிகாரம் உடையவர்.

கருமத்தை அனுபவிக்கும் நிலையினால் பொருந்தி வரும் பேதம் இல்லை என்று ஞான நூல் பலவற்றை ஆராய்ந்து அறிந்துள்ள உணர்வுடையோர் கூறுவர்.

**175. தத்துவஞா னத்தினால் பிரமம்அடைந் திடுமேல்**
**தறுகண்வரிப் புலிகண்டோன் போல்சீவத் துவத்தை**
**அத்தலையே அழித்திடும்ஆ தலினால்அச் சீவன்**
**அழிவுதனக்கு உடன்படுமோ எனில்கடவுள் தன்மைக்கு**
**உய்த்தஆ தரவினால் கங்கைமுதல் அவற்றுள்**
**ஒழிப்பதனுக்கு இசைவர்நரத் துவம்அதுபோல் என்றும்**
**பொய்த்தல்இலாத் துரியவடி வாம்பிரமத் துவத்தில்**
**பொருந்தத்தன் கேட்டினுக்குஇங்கு உடன்படும் சீவன்தான்.**

ஒருவன் தத்தவ ஞானத்தால் தான் பிரம்ம வடிவம் என்று அறிந்திடுவான் ஆயின், திடீரெனக் கோபமான கண்களோடு, வரிகளை உடைய புலியைக் கண்டவன் போல, அப்போதே சீவத்துவமானது அழிந்துபோம். ஆதலினால் அந்த சீவன், தனது சீவத்துவம் அழிவதற்கு உடன்படுமோ என்று கேட்பாய் ஆனால், தெய்வத் தன்மையை அடையும் பொருட்டு உண்டான விருப்பத்தால் கங்கை முதலான புண்ணிய நதிகளில் மனிதத் தன்மையை நீக்கிட உடன்படுவோர் உண்டு. அதுபோல் இவ்வுலகத்தில் எக்காலத்தும் சத்தியமான மேலான துரிய வடிவாய் உள்ள பிரம்மத் தன்மையில் பொருந்தி இருக்க, தன் சீவத்துவம் அழிவதற்கு உடன்படுவான்.

**176. வாதரா யணன்முதலோர் போல்சாபம் உடனே**
**மற்றுஅருள்செய் வலிஉடையோன் தத்துவஞா னத்தோன்**
**ஏதுஇலான் அலன்எனில்அவ் வலிதவத்தின் பலமாம்**
**இலங்குதத் துவஞானபலமன்றா ம்ஆயின்**
**மாதவமே ஞானத்திற் குஏதுஎனும் சுருதி**
**வழக்கினால் தவம்இலர்க்குத் தத்துவஞா னம்தான்**
**ஏதுஎனில்ஆம் சாபாதிக் குச்சகா மியமே**
**ஏதுநிட்கா மியதவஞா னத்தினுக்குஎன்று அறியே.**

வியாசர் முதலிய முனிவர்களைப் போலத் தன்னை இகழ்ந்தவர்களுக்கு சாபமும் புகழ்ந்தவர்களுக்கு அருளும் செய்யத் தக்க வலிமை உடையவனே தத்துவ ஞானி ஆவான் என்றும், அவ்வலிமை இல்லாதவன் தத்தவ ஞானி அல்லன் என்றும் கூறினால்

அவ்வலிமையானது தவத்தின் பயனேயாம், தத்துவ ஞானத்தின் பலன் அன்றாம். அங்ஙனம் ஆனால் தத்துவ ஞானம் உண்டாவதற்கு மாண்பு பொருந்திய தவமே காரணம் ஆகும் என்று கூறுகின்ற சாத்திர வாக்கியத்தால் தவம் இல்லாதவர்களுக்குத் தத்துவ ஞானம் எவ்வாறு உண்டாகும் என்று கேட்பாய் ஆனால், சாபமும் அருளும் உண்டாவதற்கு பயனை விரும்பிச் செய்யும் காமியத்தவமே காரணமாம். தத்துவ ஞானம் உண்டாவதற்கு பயனைக் கருதாத நிஷ்காமியத் தவமே காரணம். இவ்வாறு அவ்விரு தவங்களின் பயனையும் நீ அறிவாயாக.

**177. வேதவியா சாதிகட்கு ஞானம்வலி இரண்டும்**
**மேவுமே எனில்அவர்கட்கு இருதவமும் உளவாம்**
**ஆதலினால் அவ்விரண்டும் ஆகும்ஒரோர் தவமே**
**ஆயின்ஒவ் வொன்றேஅடையும் அதனால்மாறு இன்றாம்**
**மேதையாம் சாபாதி வலிஇலர்கள் ஆகி**
**விதிஇல்தத் துவஞானி களைக்கிரியா நிட்டர்**
**ஓதுவார் நிந்தைஎனில் அவர்தமக்கும் விடயத்து**
**உழல்பவரால் நிந்தைஆதலின் குறைவுஇன்று ஆமால்.**

வேத வியாசர் முதலான முனிவர்களுக்குத் தத்துவ ஞானமும் சாபம் அருளும் வலியும் என இரண்டும் பொருந்தி உள்ளனவே என்றால், அவர்களுக்கு இவ்விரு தவமும் உள்ளனவாம். ஆதலால் தத்துவ ஞானமும் சாபமும் அருளுதலும் ஆகிய வலிமை இரண்டும் உண்டாகும். ஒவ்வொரு தவத்தையே செய்திருப்பான் ஆயின் அவ்விருவகைப் பயன்களுள் ஒவ்வொரு பயனையே அடைவான், அதனால் மாறுபாடு இல்லையாம். மேன்மை மிக்க சாபம் அருள் ஆகிய வலி இல்லாதவராய் விதி நிடேதம் இல்லாத சீவன் முத்தர்களை வேதத்தில் விதித்த செயல்களை விரும்பிச் செய்வோர் (கிரியா நிட்டர்) நிந்தித்துப் பேசுவார்களே என்று கேட்பாய் ஆயின், அவர்களும் பொருட்பற்று உடையவராய் இருக்கின்ற மூடரால் நிந்திக்கப்படுவார்கள். அதனால் தத்துவ ஞானிக்கு யாதொடு குறைவும் உண்டாவதில்லையாம்.

**178. உலகுஇறந்த சீவன்முத்தன் நுகர்வினைவா சனையால்**
**உண்பொருள்கள் பலகவர்ந்து மௌனமே உற்றும்**
**பலதிறங்கள் மொழிந்தும்உப தேசநெறி புரிந்தும்**
**பரிதவித்தும் மகிழ்ந்துமிகு வேடங்கள் புனைந்தும்**

**கலைதுறந்தும் உடைஉடுத்தும் கல்விபல பயின்றும்**
**கல்லாது மாதர்முயக்கு இடைஉற்றும் இவ்வாறு**
**அலகிறந்த நடையுறினும் அருள்விளையாட்டு என்றே**
**அவன்தனைநம் புகஜயம் ஒருசிறிதும் உறாமல்.**

விதி நிடேதமில்லாத சீவன் முத்தன், பிராரத்த வினை வாசனையால் அனுபவித்தற்கு உரிய பொருள்கள் பலவற்றை அடைந்தும், மவுனமாய் இருந்து பல செயல்களைச் செய்தும், பல சொற்களைச் சொல்லியும், உபதேசத்தை முறையாகச் செய்தும், விரும்பியவற்றைப் பெறாமையினால் துன்பம் உற்றும், விரும்பியதைப் பெற்றபோது மகிழ்ந்தும், பல வேடங்கள் புனைந்தும், ஆடையின்றியும், ஆடையைத் தரித்தும், சாத்திரங்கள் பலவற்றைப் பயின்றும், சாத்திரங்களைப் பயிலாமலும், பெண்களைக் கூடுவதில் ஆசையுற்றும், இவ்வாறு அளவு கடந்த ஒழுக்கங்களை உடையவனாய் இருப்பினும் அவற்றை, அவனது அருள் விளையாடல் என, ஐயம் ஒருசிறிதும் இன்றி அறிந்து அவனை பிரம்ம வடிவமென்றே நம்புவாயாக.

**179.** **என்றும்எவ் இடத்தினும்ஓர் உடம்பும்உறாது ஒன்றாய்**
**இருந்தசச்சி தானந்த சிவசொரூபம் ஆதல்**
**நன்றிதரு விதேககை வல்லியம்என்று இசைப்பர்**
**நவின்றஇதை எய்துமாறு எவ்வாற்றால் என்னில்**
**பொன்றல்இல் நித்தியகருமா னுட்டானம் தன்னால்**
**புண்ணியம்அப் புண்ணியத்தால் பாலம்ஒழி வதனால்**
**குன்றல்அறு சித்தசுத்தி அதனால்பொய்க் குடும்பக்**
**குற்றம்நிகழ் வதனால்மெய்த் துறவுதுறவு அதனால்.**

எக்காலத்தும், எவ்விடத்தும், ஓர் சரீரத்தையும் அடையாது ஏகமாய் இருக்கின்ற சச்சிதானந்தப் பிரம்ம வடிவமாய் விளங்குதலையே நன்மையைத் தருகின்ற விதேக முத்தி என்று மேலோர் கூறுவர். முற் கூறிய விதேகமுத்தியை அடையும் முறை எவ்விதத்தால் ஆகும் என்று கேட்பாய் ஆனால், தவறுதல் இல்லாமல் நித்திய கரும அனுட்டானங்களைச் செய்வதனால் புண்ணியம் உண்டாகும். அப்புண்ணியக் கருமத்தால் பாவம் அழியும். அச்சித்தத் தூய்மையால் சம்சார தோஷம் விளங்கும். அச்சம்சார தோஷ தரிசனத்தால் உண்மையான துறவு உண்டாகும். அத்துறவால். (குளகம்)

**180.** **முத்திவிருப்பு அதனாலே புறக்கரும ஒடுக்கம்**
**மொழிந்ததனால் யோகநிலை முயற்சியது தன்னால்**

**பொய்த்தல்அறு துரியவிழைவு அத்துரிய விழைவால்**
**புகல்அறுமா வாக்கியஆ ராய்ச்சிஅத னாலே**
**அத்துவித ஞானம்அத னால்அவித்தை நாசம்**
**அதனால்பொய்த் துவிதமயக் கழிதல்அத னாலே**
**மெத்துசுக துக்கநினைவு ஒழிவதனால் விருப்பு**
**வெறுப்புஅறுதல் அதனால்ஒண் விதிவிலக்குஒழிவு அதனால்.**

அத்துறவால் மோட்ச விருப்பம் உண்டாகும். அந்த மோட்ச விருப்பத்தால் புறக்கரும ஒடுக்கம் உண்டாகும். அதனால் யோக நிலையாகிய யோக அப்பியச முயற்சியால், அழிவு இல்லாத ஆன்மாவை அறிய இச்சை உண்டாகும். அதனால் தத்துவமசி முதலிய மகா வாக்கிய ஆராய்ச்சியால் அத்துவித ஞானம் உண்டாகும். அதனால் அஞ்ஞானம் நாசம் ஆகும். அதனால் மித்தையான துவித மயக்கம் அழிவதாகும். அதனால் இன்ப துன்பங்களின் நினைவு ஒழிதல் உண்டாகும். அதனால் விருப்பு வெறுப்பு நீங்குதல் உண்டாகும். அதனால் விதித்த விலக்கிய கருமங்கள் நாசமாகும். அதனால். (குளகம்)

**181. வினைஇரண்டும் அகறல்அத னால்தேக பாவ**
**விச்சிந்தி அதனாலே பாசம்எலாம் ஒழிதல்**
**பினை அறைந்த அதனாலே பராபரமாய் முடிவாய்ப்**
**பெயர்சாதி குறிபெறாது ஒன்றுஆகி வாக்கு**
**மனம்இறந்து நித்தியா னந்தமயம் ஆகி**
**மறிவுஇலா விதேககைவல்லியம்வந்த எய்தும்**
**எனஅறிந்து துணிந்திடுக சுருதிகுரு பரனால்**
**இன்பவீடு அடையும்நெறி விரும்புறும்உத் தமரே.**

விதிவிலக்கு ஒழிவதால் புண்ணிய பாவம் என்னும் இரு வினைகளின் நாசம் உண்டாகும். அதனால் தேகத்தை நான் எனது என நினைக்கின்ற பாவனை கெடும். தேகமே ஆன்மா என்னும் அப்பாவனை கெடுவதால், பாசங்கள் அனைத்தும் நாசம் ஆகும். பின் கூறிய அப்பாச நாசத்தால், பிரம்மமாயும், முடிந்த பொருளாயும், பெயரும், சாதியும், குறியும் பெறாமல், ஒன்றாகவும், வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாததாகியும், நித்தியானந்த வடிவமாய் உள்ள, களங்கம் இல்லாத, விதேக முத்தியானது கிடைக்கும் என இன்ப வீடு அடையும் நெறியை விரும்புகின்ற உத்தமர்கள் சாத்திர வாக்கியத்தாலும், குருநாதனது உபதேசத்தாலும், துணிந்து நிச்சயமாக அறிதல் வேண்டும்.

**182. வேதமுதல் ஆகியநூல் அனைத்தினும்சொல் பொருளை**
**விளங்கியிடக் கரதலா மலகம்எனக் காட்டிப்**
**போதமயம் ஆகியபே ரானந்தத்து அழுந்தும்**
**பொருவுஇகந்த இந்நூலை முத்திபெறற்கு உரிய**
**சாதனம்நான் கினையும்அடைந்த எவரானும் என்றும்**
**தடுப்பரிய பிறவிநோய் தணிப்பதனுக்கு எண்ணி**
**ஆதரவின் அருள்குரவன் தனைத்தேடி உருகும்**
**அன்புடையோர் தமைக்காணின் அளித்திடுக உவந்தே.**

வேதாந்த சூடாமணி என்னும் இந்நூல் வேதங்கள் முதலான அனைத்துச் சாத்திர நூல்களும் சொல்கின்ற பொருள்கள் அனைத்தும், உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்கச் செய்து, ஞான வடிவமாகிய பேரின்பத்தின்கண் மூழ்கும்படி செய்வதாம். ஒப்பின்றி விளங்குகின்ற வீடு பேறு அடைய வேண்டும் என்பதற்கு உரிய சாதனங்களான விவேகம், வைராக்கியம், சமாதிசட்க சம்பத்தி, முமூட்சுத்துவம் என்னும் நான்கையும் பெற்று, எப்படிப் பட்டவர்களாலும், எக்காலத்தும் நீக்குவதற்கு அரிய பிறவிப் பிணியை நீக்க உறுதி கொண்டு, பக்தி விசுவாசத்தோடு, கருணையே வடிவான சற்குரு நாதனைத் தேடி உருகுகின்ற, பக்தி உடையவர்களைக் கண்டால், அவர்களுக்கு இந்நூலை மகிழ்ச்சியோடு உபதேசிக்கக் கூடியதாம்.

**வேதாந்த சூடாமணி நிறைவுற்றது**

நன்னிலம் தாண்டவராய சுவாமிகள்
அருளிச் செய்த

# கைவல்லிய நவநீதம்

# முன்னுரை

தமிழில் அமைந்த வேதாந்த நூல்களில் தலைசிறந்து விளங்குவது கைவல்லிய நவநீதமே ஆகும். ஸ்ரீ வியாச மகரிஷி, உபநிஷதங்கள் உபதேசிக்கும் சீவ பிரம்ம ஐக்கியத்தைப் பயில்வோருக்கு உண்டாகும் சந்தேகங்களை நீக்கும் பொருட்டு, உபநிஷதங்களின் சாரமாக "பிரம்ம சூத்திரம்" என்னும் நூலை அருளிச் செய்தார். இந்த நூலுக்கு நீலகண்டர், ஸ்ரீ ஆதி சங்கரர் முதலியோர் உரை எழுதியுள்ளனர். வடமொழியில் அமைந்த இத்தகைய உரை நூல்களுக்குப் பாஷியம் என்பது பெயர்.

**"தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு**
**காமுறுவர் கற்று அறிந்தார்"**

என்று திருவள்ளுவர் அருளிச் செய்துள்ளபடி, தாம் கற்று ஆனந்தம் அடைந்த பிரம்ம சூத்திரத்தினை எல்லோரும் கற்று ஆனந்தம் அடையும் பொருட்டு நன்னிலம் ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் தமிழில் இயற்றி அருளி "கைவல்லிய நவநீதம்" என்று பெயரிட்டார்.

இந்த நூல் தத்துவ விளக்கப் படலம், சந்தேகம் தெளிதல் படலம் என்று இரண்டு பகுதிகளைக் கொண்டதாகும். சீவ பிரம்ம ஐக்கிய ஞானத்தை விளக்குதலால் முதல் பகுதி தத்துவ விளக்கம் என்றும் அதில் உண்டாகும் சந்தேகங்களைத் தெளிவித்தலால் இரண்டாம் பகுதிக்கு சந்தேகம் தெளிதல் என்றும் கூறினார். கைவல்லிய நவநீதம் என்னும் இந்த நூலினைக் கற்றவர்கள் ஞான நூல்களின் பொருள்கள் அனைத்தையும் கற்று உணர்ந்த ஞானிகளுக்கு ஒப்பாய்த் திகழ்வார்கள்.

உ

சிவமயம்

நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் அருளிச் செய்த

# கைவல்லிய நவநீதம்

## பாயிரம்

1 **பொன்நில மாதர் ஆசை பொருந்தினர் பொருந்தார் உள்ளம்**
**தன்னில்அந் தரத்தில் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கும்**
**எந்நிலங் களினும் மிக்க எழுநிலம் அவற்றின் மேலாம்**
**நன்னிலம் மருவும் ஏக நாயகன் பதங்கள் போற்றி.**

பொன், மண், பெண் முதலியவற்றின் மேல் ஆசை உடைய அஞ்ஞானிகள், நிராசை உடைய ஞானிகள் ஆகிய இவர்தம் உள்ளங்களில் ஆகாயத்தைப் போல சாட்சி மாத்திரமாக விளங்கும் ஞான பூமிகளுள் சிறந்ததான துரியாதீத பூமியில் ஒன்றாகவும், சர்வ சாட்சியாகவும் விளங்குகின்ற பிரம்மத்தை போற்றி வணங்குவோம். ('நன்னிலம் மருவும் ஏக நாயகன்' என்பது நூல் ஆசிரியரின் குரு என்பதும் பொருந்தும்.)

2. **ஈன்றுஅளித்து அழிக்கும் செய்கைக்கு ஏதுவாம் அயனாய் மாலாய்**
**ஆன்றஈ சனுமாய்த் தானே அநந்தமூர்த் தியுமாய் நிற்கும்**
**பூன்றமுத் தனும்ஆய் இன்பப் புணரிஆ தவன் ஆய் நாளும்**
**தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே.**

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களுக்கும் காரணமான நான்முகன், திருமால், உருத்திரன் ஆகியும், இன்னும் அளவற்ற மூர்த்திகளாயும், பரிபூரணமாய், நித்தியமாய், ஆனந்தக் கடலாய், ஞான சூரியனாய் எப்பொழுதும் (தானே) விளங்குவதும் ஆகிய மாசற்ற ஆன்ம வடிவத்தை வணங்குகின்றேன்.

3. **எவருடை அருளால் யானே எங்கும்ஆம் பிரமம் என்பால்**
**கவருடைப் புவனம் எல்லாம் கற்பிதம் என்று அறிந்து**
**சுவரிடை வெளிபோல் யான்என் சொரூபசு பாவம் ஆனேன்**
**அவருடைப் பதும பாதம் அனுதினம் பணிகின் றேனே.**

குருவின் அருளினால் என் நிச வடிவம், எங்கும் நிறைந்துள்ள பிரம்ம வடிவம் என்றும், அளவற்ற வேறுபாடுடைய தேகாதிப் பிரபஞ்சம் எல்லாம், பிரம்ம வடிவமே ஆகிய என்னிடத்தில் கயிற்றரவு போல் மித்தை என்றும் ஐயம் திரிபு இன்றி அறிந்தேன். சுவரின் கண்ணுள்ள ஆகாசமும், வெளியில் உள்ள ஆகாசமும் ஒன்று என்று அறிவது போல், யான் எனது நிச வடிவமான பிரம்மமாய் நிலைபெற்றேன். அந்தக் குருமூர்த்தியின் தாமரை மலர் போன்ற திருவடிகளை நாள்தோறும் வணங்குகின்றேன்.

**4. என்னுடை மனது புத்தி இந்திய சரீரம் எல்லாம்**
**என்னுடை அறிவி னாலே இரவிமுன் *இமமே ஆக்கி**
**என்னுடை நீயும் நானும் ஏகம்என்று ஐக்கி யம்செய்ய**
**என்னுடைக் குருவாய்த் தோன்றும் ஈசனை இறைஞ்சி னேனே.**

என்து மனம், புத்தி, ஞானேந்திரியங்கள், வாயுக்கள், கன்மேந்திரியங்கள் என்னும் சூட்சும சரீரம், இதற்கிடமான தூலசரீரம், இவ்விரண்டிற்கும் காரணமான அவித்தையாகிய காரண சரீரம், இவை பற்றி நிகழும் சாக்கிரம் முதலிய மூன்று அவத்தைகள் ஆகிய அனைத்தையும் யுத்தியினால் விளங்கிய என்னுடைய அறிவினாலே சூரியன் முன்னே பனியைப் போல அபாவமாக்கினார். சீவ சாட்சியான கூடத்தனாகிய நீயும் ஈசுவர சாட்சியான பிரம்மம் ஆகிய நானும் ஒன்றே என்று எனது சுபாவ சித்தமாகிய ஐக்கியத்தை உபதேசித்து அருள என்னுடைய குருமூர்த்தமாய் எழுந்து அருளிய ஈசுவரனை வணங்கினேன்.

**5. அந்தமும் நடுவும் இன்றி ஆதியும் இன்றி வான்போல்**
**சத்ததம் ஒளிரும் ஞான சற்குரு பாதம் போற்றிப்**
**பந்தமும் வீடும் காட்டப் பரந்தநூல் பார்க்க மாட்டா**
**மந்தரும் உணரு மாறு வத்துதத் துவம்சொல் வேனே**

தோற்றமும், திதியும், முடிவும் இல்லாமல் வானம் போல எங்கும் பரவி, எப்போதும் விளங்குகின்ற ஞான வடிவமான குருவின் பாதம் போற்றினேன். அவரது அருளினால் பந்தத்தின் இலக்கணமும் வீடுபேற்றின் இலக்கணமும் (முமுட்சுகளுக்கு) விளக்கும் பொருட்டு இந்நூல் இயற்றினேன். பரந்து கிடக்கும் வேதாந்த நூல்களைக் கற்று உணர்ந்து திறமை இல்லாத மந்த புத்தி உடையோரும் எளிதில் அறிந்து கொள்ளும்படி உண்மையான பொருள் இது என இந்நூலில் கூறுகிறேன்.

* இமம் = பனி.

**6. படர்ந்தவே தாந்தம் என்னும் பாற்கடல் மொண்டு முன்னூல்**
**குடங்களில் நிறைத்து வைத்தார் குரவர்கள் எல்லாம் காய்ச்சிக்**
**கடைந்துஎடுத்து அளித்தேன் இந்தக் கைவல்ய நவநீ தத்தை**
**அடைந்தவர் விடய மண்தின்று அலைவரோ பசியி லாரே.**

வரையின்றி விரிந்துள்ள வேதாந்தம் என்னும் திருப்பாற் கடலில் முகந்து வியாசர் முதலிய பரமாசாரியர்கள் இயற்றி அருளிய முதல் நூல் என்னும்.வேதாந்தம் ஆகியப் பாலை குடங்களில் நிறைத்து வைத்தார்கள். இவைகளை எல்லாம் குருமுகமாக கற்று அறிந்து, பாலைக் காய்ச்சிக் கடைந்து எடுத்த வெண்ணெயைப் போல், கைவல்லிய நவநீதம் என்னும் இந்நூலினைத் திரட்டி எடுத்து அளித்தேன். இந்நூலினை நன்கு கற்று அறிந்தோர் விடயானந்தம் ஆகிய மண்ணை உண்ண விரும்பி பிறவியில் அலைய மாட்டார்கள். எனெனில், இதை அனுட்டித்து தத்துவ ஞானம் பெற்றவர், அடைய வேண்டியது எல்லாம் அடைந்தோம் என்னும் திருப்தி உடையவராய் விடய ஆசையின்றி இருப்பர்.

**7. முத்தனை வேங்க டேச முகுந்தனை எனைஆட் கொண்ட**
**கர்த்தனை வணங்கிச் சொல்லும் கைவல்ய நவநீ தத்தைத்**
**தத்துவ விளக்கம் என்றும் சந்தேகம் தெளிதல் என்றும்**
**வைத்துஇரு படலம் ஆக வகுத்துரை செய்கின் றேனே.**

அஞ்ஞானத்தில் இருந்து விடுபட்டவரை, மானுட சரீரம் எடுத்து நாரயண தேசிகர் என்னும் நாமம் தரித்து எழுந்தருளி முத்தியைத் தருபவரை, எனது துயரை நீக்க, கருணையினால் என்னை தடுத்தாட் கொண்ட குருமூர்த்தியை வணங்குகின்றேன். அவருடைய அருளால் சொல்லப் புகுந்த கைவல்லிய நவநீதம் என்னும் நூல், மெய்ப் பொருளான பிரம்மத்தை தெரிவிப்பதால், முதல் பகுதியைத் தத்துவ விளக்கம் என்றும், அதன்கண் உண்டாகும் சந்தேகங்களைத் தெளிவித்தலால் இரண்டாம் பகுதியைச் சந்தேகம் தெளிதல் என்னும் இரண்டு அத்தியாயமாக பிரித்துக் கூறுகின்றேன்.

**பாயிரம் நிறைவுற்றது**

உ

சிவமயம்

# கைவல்லிய நவநீதம்

## 1. தத்துவ விளக்கப் படலம்

**8. நித்திய அநித்தி யங்கள் நிண்ணயம் தெரிவி வேகம்**
**மத்திய இகப ரங்கள் வருபோகங் களில்நி ராசை**
**சத்தியம் உரைக்க வேண்டும் சமாதிஎன்று ஆறு கூட்டம்**
**முத்தியை விரும்பும் இச்சை மொழிவர்சா தனம்இந் நான்கே.**

நாம் அறியும் பொருள்களில் மாறுதல் அடைவது எது? மாறுதல் அடையாதது எது? என சிந்தித்து அறிவது முதல் சாதனமாம். (இதற்கு நித்தியாநித்திய வஸ்து விவேகம் என்று பெயர்.) இவ்வுலகத்திலும், சுவர்க்காதி உலகத்திலும் உள்ள போகங்களில் ஆசை அற்று இருத்தல், இரண்டவது சாதனமாம். (இதற்கு இகாமுத்திரார்த்த பல போக விராகம் என்று பெயர்.) பின் கூறப் போகும் சமம் முதலிய ஆறும் சேர்ந்து மூன்றாவது சாதனமாம். (இதற்கு சமாதிசட்க சம்பத்தி என்று பெயர்.) முத்தியில் தீவிரமான விருப்பம் வைத்தல் நான்காவது சாதனமாம். (இதற்கு முமுட்சுத்துவம் என்று பெயர்.) இந்நான்கும் உண்மையான அதிகாரிக்கு* உரிய சாதனங்களாம்.

**9. சமம்தமம் விடல்ச கித்தல் சமாதானம் சிரத்தை ஆறாம்**
**சமம்அகக் கரண தண்டம் தமம்புறக் கரண தண்டம்**
**அமர்தரு கருமம் பற்றாது அறுத்தலே விடல்என்று ஆகும்**
**மமர்செயும் காமம் ஆதி வரின்அடக் குதல்ச கித்தல்.**

(முன்னர் சொன்ன சமாதிசட்க சம்பத்தி என்பது) சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என ஆறாகும். வாசனாப் பிரகாரம் மனம் செல்லும் வழி எல்லாம் செல்லாது தடுத்தல் சமமாம். புறக் கரணங்களை சத்தம் முதலிய விடயங்களில் செல்லாது தடுத்தல், தமமாம். உலக விகாரங்கள் எல்லாம் மீண்டும் வந்து பற்றாதவாறு ஒழித்தல்,

விடலாம். மயக்கத்தைச் செய்கின்ற காமம், குரோதம் முதலியன மனதில் எழும் பே அவற்றை விரிய விடாது விவேகத்தினால் அடக்குதல், சகித்தலாம்.

**10. சிரவணப் பொருளைத் தானே சித்தம்சிந் திக்கு மாறு**
**சரதமா வைக்கும் இத்தைச் சமாதானம் என்பர் மேலோர்**
**பரமசற் குருநூல் அன்பு பற்றலே சிரத்தை ஆகும்**
**வரம்மிகு சமாதி ஆறு வகையின்சொற் பொருள்இ தாமே.**

சித்தமானது வேதாந்த சிரவண அர்த்தத்தை உள்ளவாறு சிந்திக்கும்படி செய் சமாதானம் என்று சான்றோர் கூறுவர். சிறந்த சற்குரு உபதேசத்திலும் வேதாந்த நு களிடத்தும் நம்பிக்கை வைத்தலே சிரத்தையாம். மேன்மை பொருந்திய ச முதலியவற்றின் பொருள் இதுவேயாகும்.

**11. சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை**
**ஆதலால் இந்த நான்கும் அடைந்தவர்க்கு அறிவு உண்டாகும்**
**நூதன விவேகி உள்ளம் நுழையாது நுழையும் ஆகில்**
**பூதசன் மங்கள் கோடி புனிதனாம் புருடன் ஆமே.**

கருவிகள் ஏதும் இன்றி ஒரு செயலைச் செய்து முடிக்க வல்லோர் உலகில் ஒருவரு இலர். ஆகையால் விவேகம், வைராக்கியம், சமாதிசட்க சம்பந்தி, முமுட்சுத்துவம் ஆகி இந்நான்கு சாதனங்களையும் அடைந்தோர்க்கே சீவபிரம்ம ஐக்கிய ஞானம் உண்டாகு இந்த சாதனங்கள் இல்லாத அந்திகாரியின் உள்ளம் ஞான வழியிற் செல்லாது செல்லுமானால், அத்தகையவன் பல கோடிப் பிறவிகளில் நிஷ்காம கரும உபாசனைகளை அனுட்டித்து, அதனால் தூய்மையான அந்தக் கரணத்தை உடையவனாம்.

**12. இவன்அதி காரி ஆனோன் இந்திரி யங்க ளாலும்**
**புவனதெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலும்**
**தவனம்*மூன்று அடைந்த வெய்யில் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்**
**பவம்அறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னானே.**

இத்தகைய நான்கு சாதனங்களை உடையவனே இந்நூல் கேட்பதற்கு உரிய அதிகாரி ஆவான். இவன் இந்திரியங்களாலும்*, உலகத்தின் தெய்வங்களினாலும் பூதங்களின் செயல்களாலும் உண்டாகும் மூவகைத் துன்பங்களை அடைந்து, வெய்யில்

---
*தவனம் = துன்பம்*

தாங்காத புழுப்போல் வெம்பி, இந்த துன்பங்களை நீக்கக் கூடிய, ஞான தீர்த்தத்தில் மூழ்கிட விரும்புவான்.

**13. ஆனபின் மனைவி மக்கள் அர்த்தஏ டணைகள் மூன்றில்**
**கானவர் வலையில் பட்டுக் கைதப்பி ஓடும் மான்போல்**
**போனவன் வெறுங்கை யோடே போகாத வண்ணம் சென்று**
**ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே.**

இவ்வாறு ஆனபின், மனைவி, புதல்வர், தனம் என்னும் மூவாசையில் சிக்கியவன், வேடுவர் வலையில் அகப்பட்டுப் பின் அதில் இருந்து தப்பித்து ஓடுகின்ற மானைப் போல, எல்லாவற்றையும் துறந்து சற்குருவைத் தேடிச் செல்வான். அவ்வாறு செல்பவன், கையில் பூ, பழம் முதலியவற்றுடன் சென்று, ஞான குருவை அடைந்து நன்கு வணங்கிப் பணிந்தான்.

**14. வணங்கிநின்று அழுது சொல்வான் மாயவாழ்வு எனும்சோ கத்தால்**
**உணங்கினேன் ஐய னேஎன் உள்ளமே குளிரும் வண்ணம்**
**பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்னம் ஆக்கி**
**இணங்கிய குருவே என்னை இரட்சித்தல் வேண்டும் என்றான்.**

பின்னர் இருகரம் கூப்பி வணங்கி அழுதவாறு, "குருவே பொய்யான இவ்வுலக வாழ்வின் துக்கத்தினால் நான் வாடினேன். என் உள்ளம் குளிருமாறு பஞ்சகோசங்களில்* யான், எனது என்று எழுகின்ற பற்றுக்களை நாசம் செய்து, என்னைக் காத்து, அருள் செய்ய வேண்டும்" என்றான்.

**15. அன்னதன் சிசுவை ஐயன் ஆமைமீன் பறவை போலத்**
**தன்அகம் கருதி நோக்கித் தடவிச்சந் நிதிஇ ருத்தி**
**உன்னது பிறவி மாற்றும் உபாயம்ஒன்று உண்டு சொல்வேன்**
**சொன்னது கேட்பாய் ஆகில் தொடர்பவம் தொலையும் என்றான்.**

அப்படி இரந்து நின்ற சீடனைக் குருவானவர், ஆமையானது கரு உருவாக வேண்டும் என்று தனது முட்டையை பாவிப்பது போல், சீடனது அஞ்ஞானம்* ஒழிந்து, அவன் தன் நிச வடிவத்தை உணர வேண்டும் என்று தம் திருவுள்ளத்தில் பாவித்தார். மேலும் மீன்

---

*அஞ்ஞானம் : ஞானத்திற்கு எதிர்மறை*

தனது சினையை குஞ்சு ஆகுமாறுப் பார்ப்பது போல், அவனது பிறவிக்குக் காரணமான சஞ்சித* வினைகள் அழிய வேண்டும் என்று கருணையோடு நோக்கினார். கோழியானது தன் சிறகினால் முட்டையைத் தழுவுவது போல், ஆத்ம விசாரம் இவனுக்கு உதயம் ஆகட்டும் என்று அபயகரத்தை சிரசில் வைத்து ஆசீர்வாதம் செய்தார். அவனைத் தனது சந்நிதானத்தில் இருக்கவைத்து, உனது பிறவித் துன்பம் தீர உபாயம் ஒன்று உண்டு. அதை உனக்கு உபதேசிப்பேன் அந்த உபதேசத்தைக் கேட்டு, அவற்றைக் கடைப்பிடிப்பாய். இதனால் தொடர்ந்து வருகின்ற பிறவித் துன்பம் தீரும் என்று அருளிச் செய்தார்.

**16. தொடர்பவம் தொலையும் என்று சொன்னதைக் கேட்ட போதே**
**தடமடு மூழ்கி னான்போல் சரீரமும் குளிர்ந்துஉள் ஆறி**
**அடரும்அன்பு ஒழுகு மாபோல் ஆனந்த பாஷ்பம் காட்டி**
**மடல்மலர்ப் பாதம் மீண்டும் வணங்கிநின்று ஈது சொல்வான்.**

தொடர்ந்து வரும் பிறவித் துயரம் அழியும் என்று சொன்னதைக் கேட்ட உடனேயே, வெய்யிலின் வெம்மையால் வாடியவன் பெரிய குளத்தில் மூழ்கினதைப் போல மன வெம்மை மாறி அவனுடைய உடல் குளிர்ந்தது, உள்ளே பெருகிய அன்பு ததும்பி வெளியே ஒழுகுமாறு போல, ஆனந்தக் கண்ணீர் சிந்தித் தாமரைப் பூப்போன்ற குருவின் திருவடியை மீண்டும் வணங்கி நின்று இதனை விண்ணப்பம் செய்தான்.

**17. சொன்னது கேட்க மாட்டாத் தொண்டன் ஆனாலும் சுவாமி**
**நின்னது கருணை யாலே நீர்எனை ஆள லாமே**
**உன்னது பிறவி மாற்றும் உபாயம்ஒன்று உண்டுஎன் றீரே**
**இன்னதுஎன்று அதைநீ காட்டி ஈடேற்றல் வேண்டும் என்றான்.**

சொல்வதனைக் கேட்டுத் தவறாமல் பின்பற்ற இயலாத அடிமை ஆயினும், குருவாகிய தாங்கள் கருணையால் அடியேனாகிய எனக்கு அருளுதல் முறையாகும். உன் பிறவியை மாற்றும் வழி ஒன்று உள்ளது என்று கூறினீர்கள், அது எப்படிப்பட்டது என்று எனக்கு உபதேசித்து என்னை இப்பிறவித் துயரில் இருந்து ஈடேற்ற வேண்டும் என்று விண்ணப்பம் செய்தான்.

**18. அடங்கிய விருத்தி யான்என்று அறிந்தபின் செறிந்த மண்ணின்**
**குடம்பையுள் புழுமுன் ஊதும் குளவியின் கொள்கை போலத்**

---

*சஞ்சிதம் = சேர்ந்துள்ள முன்வினைப்பயன்*

**தொடங்கிய குருவும் ஆன்ம சொரூபமே மருவ வேண்டி**
**உடம்பினுள் சீவ னைப்பார்த்து உபதேசம் ஓது வாரே.**

இவன் அகம்பாவ உணர்வுகள் அடங்கியவன் என்பதை அறிந்த பின், மண் கூட்டின் உள்ளே தான் சோதித்துக் கொண்டு வந்து வைத்த புழுவுக்கு முன்னே, அது தன் உருவம் ஆகும்படி செய்திட ஊதும் குளவியின் தன்மை போல, உபதேசிக்கத் தொடங்கிய குருவும், அவன் ஆன்ம வடிவம் பெற வேண்டி, அவன் சரீரத்தில் உள்ள சீவனை நோக்கி உபதேசம் செய்யலானார்.

**19. வாராய்என் மகனே தன்னை மறந்தவன் பிறந்து இறந்து**
**தீராத சுழற்காற்று உற்ற செத்தைபோல் சுற்றிச் சுற்றிப்**
**பேராத கால நேமிப் பிரமையில் திரிவன் போதம்**
**ஆராயும் தன்னைத் தான்என்று அறியும்அவ் வளவும் தானே.**

என் மகனே வருக, தன்னை நான் யார் என்று விசாரித்து அறியாதவன், பிறந்து இறந்து தீராத சுழற் காற்றில் அகப்பட்ட புல்லைப் போலச் சுற்றிச் சுற்றி, இவ்வுலகிற்கும், மேல் உலகிற்கும் வருவதும் போவதுமாய் நீங்காத காலச் சக்கரத்தின் சுழற்சியில் சுற்றித் திரிவான். அறிவு வடிவமாகிய தன்னை விசாரித்து ஆத்மாவே தான் என்று அறியும் மட்டும் பிறவிக் கடலில் சுற்றுவான்.ஃ

**20. தன்னையும் தனக்குஆ தாரத் தலைவனை யும்கண் டானேல்**
**பின்னைஅத் தலைவன் தானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்**
**உன்னைநீ அறிந்தாய் ஆகில் உனக்கொரு கேடும் இல்லை**
**என்னைநீ கேட்கை யாலே ஈதுஉப தேசித் தேனே.**

ஆபாசனான தன்னையும், தனக்கு ஆதாரமான கூடத்தனையும் ஒருவன் அறிந்தான் ஆயின், அவ்வாறு அறிந்த பின் தானே பிரம்மம் என்னும் அனுபவம் உடையவனாய் பிறப்புத் தீர்வான். இவ்வாறு உன்னை நீ அறிந்தாய் என்றால் உனக்கு ஒரு கேடும் விளையாது. பிறவித் துயர் நீங்க வேண்டும் என்று என்னை நீ கேட்டதால் இதனை நான் உனக்கு உபதேசித்தேன்.

**21. என்னைத்தான் சடனா உள்ளத்து எண்ணியோ சொன்னீர் ஐயா**
**தன்னைத்தான் அறியா மாந்தர் தரணியில் ஒருவர் உண்டோ**
**பின்னைத்தான் அவர்கள் எல்லாம் பிறந்துஇறந்து உழலுவா னேன்**
**நின்னைத்தான் நம்பி னேற்கு நிண்ணயம் அருளு வீரே.**

என் குருநாதரே, அடியேனை மூடனாகத் திருவுள்ளத்தில் எண்ணியோ, உன்னை அறிந்தால் உனக்கொரு கேடில்லை என்று சொன்னீர்கள். தம்மையே தாம் யார் என்று அறியாத மானிடர் உலகில் எவரேனும் ஒருவர் உளரோ? பின் அவர்கள் அனைவரும் பிறந்து இறந்து துன்புறுவது எதன் பொருட்டு? உம்மையே நம்பிய எனக்கு அந்த உண்மையை உள்ளவாறு உபதேசித்து அருள்வீராக, என்று பிரார்த்தித்தான்.

**22. இன்னது தேகம் தேகி இவன்என உணர்வான் யாவன்**
**அன்னவன் தன்னைத் தான்என்று அறிந்தவன் ஆகும் என்றார்**
**சொன்னபின் தேகி யார்இத் தூலம்அல் லாமல் என்றான்**
**பின்னது கேட்ட ஐயர் பீழையும் நகையும் கொண்டார்.**

இது தேகம், இதனை அறிபவனான இவன், தேகி (தேகத்தை உடையவன்) என்று இவ்வாறு பிறித்து அறிந்த விவேகியே தன்னைத் தான் அறிந்தவன் என்று குரு உரைத்து அருளினார். இவ்வாறு சொன்ன பின் இந்தத் தூல தேகமே தான் அன்றி வேறு தேகி யாவன்? இருந்தால் காணப்படானா அவ்வாறு காணப்படாமையின் அவனில்லை என்று சீடன் கூறினான். அது கேட்ட குரு பின்னர் துன்பமும், மகிழ்வும் கொண்டார்.

**23. தேகம்அல் லாமல் வேறே தேகியார் காணேன் என்றாய்**
**மோகமாம் கனவில் வந்து முளைத்தவன் எவன்நீ சொல்வாய்**
**சோகமாம் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவன்ஆர் சொல்வாய்**
**ஆகநீ நனவில் எண்ணும் அறிவுதான் ஏது சொல்வாய்.**

தான் என்பதற்குப் பொருள் தேகமே அல்லாமல் இதற்கு வேறாக தேகி ஒருவன் இருக்கிறானா? நான் காணவில்லை, காணப்படாமையின் தேகி இல்லை என்று கூறினாய். நித்திரா மோகத்தால் உண்டாகும் சொப்பனத்தில் வந்து தோன்றி சொப்பனத்தை அறிபவன் யார்? அவன் தேகமா? தேகத்திற்கு வேறானவனா? என்பதை நீ சொல்வாய். துன்பத்தைத் தரும் சொப்பனமும் நீங்கி ஒன்றும் தோன்றாத சுழுத்தியில் அஞ்ஞானத்தை அறிந்தவன் யார் என்று சொல்வாய். சாக்கிரத்தில் சொப்பனம் சுழுத்தி என்னும் இரண்டையும் நினைக்கின்ற அறிவுதான் யாது? அது நீ கருதுகின்ற தேகமா? அதற்கு வேறானதா? இதனையும் நீ ஆராய்ந்து சொல்வாய் என்று கூறியருளினார்.

**24. நனவுகண் டதுநான் கண்ட நனவுஉள நினைவு நீங்கி**
**கனவுகண் டதும்சு ழுத்தி கண்டதும் வேறுஒன் றேபோல்**

**தினம்அநு பவிப்பது ஒக்கும் தெரியவும் இல்லை சற்றே**
**மனதினில் உதிக்கும் பின்னே மறைக்கும்அது அருளு வீரே.**

சாக்கிரத்தை அறிந்ததும், நான் சாக்கிரத்தில் அறிந்த நினைவுகள் முழுதும் நீங்கி சொப்பனத்தை அறிந்ததும், பின்பு சுழுத்தியை அறிந்ததும் இத்தேகத்திற்கு வேறான ஒரு தேகியே போல், நான் நாள்தோறும் அனுபவிப்பது தெளிவாக விளங்குகின்றது. அங்ஙனம் ஆயினும் அது உள்ளபடி விளங்கவில்லை. இமைப் போது மனத்தில் விளங்குகின்றது. பின்பு மறைந்து விடுகின்றது. அங்ஙனம் ஆகாது தேகியின் வடிவம் பிரத்தியட்சம் ஆகும் உபாயத்தை உபதேசித்து அருளு.ங்கள், என்று பிரார்த்தித்தான்.

**25. தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டு வார்போல்**
**ஆலத்தின் உடுக்கள் காட்டி அருந்ததி காட்டு வார்போல்**
**தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூபம் ஆன**
**மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கி னாரே.**

பூமியில் உள்ள மரங்களின் கிளை நுனியை முன்னர்க் காட்டி, (அதன் மூலம்) மூன்றாம் பிறையைக் காட்டுவார் போலவும், வானிலே நட்சத்திரங்களை முன்னே காட்டிப் பின் அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டுவார் போலவும், தூலமான சக சீவ பரங்களை முன்னே காட்டி, சூட்சும வடிவான பிரம்மத்தைப் பின்பு குருவானவர் விளக்கத் தொடங்கினார்.

**26. அத்தியா ரோபம் என்றும் அபவாதம் என்றும் சொல்லும்**
**உத்தியால் பந்தம் வீடுஎன்று உரைக்கும்வே தாந்தம் எல்லாம்**
**மித்தையாம் ஆரோ பத்தால் பந்தம்ஆம் அபவா தத்தான்**
**முத்திஆம் இவ்வி ரண்டின் முந்திஆ ரோபம் கேளாய்.**

வேதாந்த சாத்திரங்கள் அனைத்தும் அத்தியாரோப யுக்தியினால் பந்தமும், அபவாத யுக்தியினால் முத்தியும் உண்டாகின்றன என்று கூறுகின்றன. மித்தியா வடிவான ஆரோபத்தினால் பந்தமும், அபவாதத்தினால் முத்தியும் உண்டாவனவாம். இவ்விரண்டனுள் முன்னர் அத்தியாரோபத்தினைக் கேட்பாயாக.

**27. ஆரோபம் அத்தி யாசம் கற்பனை ஆவ எல்லாம்**
**ஓர்ஓர்வத் துவினில் வேறே ஓர்ஓர்வத் துவினை ஓர்தல்**
**நார்ஊடு பணியாய்த் தோன்றல் நரன்ஆகித் தறியில் தோன்றல்**

ஆரோபம், அத்தியாசம், கற்பனை என்பன ஒரே பொருளை உடைய சொற்களே. அது ஒரு பொருளினிடத்து மற்றொரு பொருளை உணர்தலாம். (பாம்பில்லாத) கயிற்றினிடத்து பாம்பு தோன்றுதலும், (கள்ளன் இல்லாத) கட்டையினிடத்துக் கள்ளன் தோன்றுதலும், (நிறமும் வடிவமும் இல்லாத) ஆகாயத்தில் நீலநிறமும், கொப்பரை கவிழ்ந்தால் போன்றுள்ள வடிவமும் தோன்றுதலும் போன்றன அதற்குச் சான்றுகளாம்.

**28. இப்படிப் போல நாம ரூபங்கள் இரண்டும் இன்றி**
**ஒப்பமாய் இரண்டுஅற்று ஒன்றுஆய் உணர்வுஒளி நிறைவாய் நிற்கும்**
**அப்பிர மத்தில் தோன்றும் ஐம்பூத விகாரம் எல்லாம்**
**செப்புகற் பனையி னாலே செனித்தஎன்று அறிந்து கொள்ளே.**

கயிறு முதலியவற்றின்கண் பாம்பு முதலியவை தோன்றுதல் போல, ஒரு நாமமும் ஒரு வடிவமும் தன்பால் இல்லாது, எங்கும் ஒரே தன்மையாயும், இரண்டாய் அல்லாமல் அத்துவிதமாயும், அறிவு வடிவமாயும், சுயம்பிரகாசமாயும், பூரணமாயும் விளங்குகின்ற அந்தப் பிரம்மத்தின் இடத்தில் நாம வடிவமான ஐம்பூத வடிவ காரியங்கள் அனைத்தும் மெய் போலத் தோன்றும். இவை யாவும் முன் பாடலில் சொல்லியது போல கற்பனையாகவே உண்டாயின என்று அறிந்து கொள்வாய்.

**29. அதுதான்எப் படிஎன் றக்கால் அநாதிஆம் சீவர் எல்லாம்**
**பொதுவான சுழுத்தி போலப் பொருந்தும்அவ் வியத்தம் தன்னில்**
**இதுகால தத்து வப்பேர் ஈசன்உட் பார்வை யாலே**
**முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்தம் ஆமே.**

அந்த சிருட்டிக் கிரமம்தான் எங்ஙனம் என்று கேட்டால், அநாதியாய் உள்ள சீவர்கள் அனைவருக்கும் உலக தேக வாசனைகள் அனைத்தும் சுழுத்தியில் எங்ஙனம் அடங்கியிருந்து மீண்டும் சாக்கிரத்தில் வெளிப்படுகின்றதோ அங்ஙனமே, அவ்வியத்தம் என்னும் மூலப்பிரகிருதியின் இடத்து முக்குணங்களும் வெளிப்படாது அடங்கியிருக்கும். மீண்டும் கால தத்துவமான ஈசுவரனுடைய சங்கற்பத்தினால் அவ்வியத்தமானது முக்குண வடிவமாக வெளிப்பட்டு விளங்கும்.

**30. உத்தம வெளுப்புச் செம்மை உரைத்திடு கறுப்பும் ஆகும்**
**சத்துவ குணத்தி னோடு ரசோகுணம் தமோகு ணந்தான்**
**சுத்தமோடு அழுக்கு இருட்டாச் சொல்லுமுக் குணமும் மூன்றாய்**
**ஒத்துஉள வேனும் தம்முள் ஒருகுணம் அதிகம் ஆமே.**

அவற்றுள் சத்துவ குணம் உத்தமமும், வெண்ணிறமும், சுத்தமுமாம். இரசோ குணம் மத்திமமும், செந்நிறமும், அழுக்குமாம். தமோ குணம் அதமமும், கரு நிறமும், இருட்டுமாம். இம்முக்குணங்களும் தம்முள் ஒத்திருப்பன ஆயினும், அவற்றுள் ஒரு குணம் (நெருஞ்சி முள் போன்று) மேலோங்கி நிற்கும். (சத்துவ குணம் மேற்பட்டு இருக்கும் போது இரசோ குணமும் தமோ குணமும் கீழ்பட்டு இருக்கும். இரசோ குணம் மேற்பட்டு இருக்கும்போது சத்துவ குணமும் தமோ குணமும் கீழ்பட்டு இருக்கும். தமோ குணம் மேற்பட்டு இருக்கும் போது சத்துவ குணமும் இரசோ குணமும் கீழ்பட்டு இருக்கும்.)

**31. ஒருவழி இதுஆம் மித்தை ஒருவழி வேறாச் சொல்வர்**
**மருவும்அவ் வியத்தம் தானே மகதத்வம் ஆகும் அந்த**
**அருள்மக தத்து வம்தான் அகங்காரம் ஆகும் என்றும்**
**கருஅகங் காரம் மூன்றாக் காட்டிய குணம்ஆம் என்றும்.**

மேற்கூறியபடி மூலப்பிரகிருதில் இலிருந்து முக்குணங்கள் வெளிப்பட்டு சிருட்டி உண்டாவது ஒரு வகையாம். வேறுவகையாக சிருட்டி உண்டாகும் முறைமையும் சொல்லுவார்கள். முற்கூறிய அவ்வியத்தம் என்னும் மூலப் பிரகிருதியே ஈசுவரனது சங்கற்பத்தால் சமட்டி புத்திவடிவ மகதத்துவமாகத் தோன்றும். அந்த புத்தி வடிவமே நான் என்னும் அகங்கார தத்துவமாம். சகத்துக்குக் காரணமான அந்த அகங்காரமே முக்குணமாக வெளிப்பட்டதாகவும் சொல்லுவார்கள்.

**32. இக்குணங் களிலே விண்போன்று இருக்கும்சிற் சாயை தோன்றும்**
**முக்குணங் களினும் தூய்தாம் முதற்குணம் மாயை ஆகும்**
**அக்குணப் பிரமச் சாயை அந்தரி யாமி மாயை**
**எக்குணங் களும்பற் றாதோன் நிமித்தகா ரணன்ஆம் ஈசன்.**

சத்துவ, இராசத, தாமத என்ற முக்குணங்களில் வானம் போல அசையாது, எங்கும் பரந்து நுண்ணியதாய், உள்ள சித்தின் பிரதி பிம்பம் தோன்றும். இந்த முக்குணங்களிலும் தூயதாகி விளங்கு சத்துவ குணம் மாயை என்று சொல்லப்படும். அந்த சுத்தமான சத்துவ குணத்தில் தோன்றிய பிரம்மத்தின் பிரதிபிம்பம் அந்தரியாமியாம். எல்லாப் பொருள்களிலும் நிறைந்து இருப்பவனாம். ஏனைய இரசோ தமோ குணங்கள் இந்த ஈசுவரனைப் பற்றாததால் அவனுக்கு தனது சரீரமான மாயையில் யான் எனது என்னும் அபிமானம் இல்லாமல் இருப்பன். அவன் உலகிற்கு நிமித்த காரணன் ஆகிய ஈசுவரனாம்.

33. **ஈசனுக்கு இதுசு ழுத்தி இதுவேகா ரணச ரீரம்**
**கோசம்ஆ னந்தம் ஆகும் குணம்இரா சதம்அ வித்தை**
**தேசுஅறும் அவித்தை தோறும் சிற்சாயை சீவ கோடி**
**நாசம்ஆம் உயிர்க்கு அப்போது நாமமும் பிராஞ்ஞன் ஆமே.**

ஈசுவரனுக்கு இந்த சத்துவ குண மாயையே சுழுத்தி அவத்தையாகும். இதுவே காரண சரீரமும் ஆனந்தமய கோசமும் ஆகும். இராசத குணம் அவித்தை என்று சொல்லப்படும். மலின சத்துவமாய் உள்ள அவித்தைகள் தோறும் தோன்றி உள்ள சித்தின் பிரதிபிம்பமே சீவராசிகளாம். காரிய சரீரங்கள் ஒடுங்கி, காரண சரீரத்தை மாத்திரம் உடைய சீவர்களுக்கு அப்போது பிராஞ்ஞன் (நன்றாய் அறிபவன்) என்று பெயர் கூறப்படும்.

34. **அழுக்கொடு பற்றும் சீவர்க்கு அதுவே ஆனந்த கோசம்**
**சுழுத்திகா ரணச ரீரம் சொன்னதுஇம் மட்டும் மோக**
**முழுக்குணத்து இரண்டால் வந்த மூலஆ ரோபம் சொன்னோம்**
**வழுத்துசூக் குமஆ ரோப வழியும்நீ மொழியக் கேளாய்.**

மலின சத்துவமான அவித்தையில் பிரதிபிம்பித்துள்ள சீவர்களுக்கு அந்த அவித்தையே ஆனந்தமய கோசமாம். அதுவே சுழுத்தி அவத்தை நிகழும் இடமும், காரணசரீரமும் ஆகும். இதுவரையில் மூல அகங்காரத்தின் காரியமான சத்துவ குண மாயையாலும், இரசோ குண அவித்தையாலும் உண்டான காரண சரீரக் கற்பனையக் கூறினோம். சூட்சும சரீரம் கற்பனையாக உண்டான விதத்தையும் இனிக் கூற நீ கேட்பாயாக.

35. ***ஏமமா யாவி னோத ஈசனார் அருளி னாலே**
**பூமலி உயிர்கட்கு எல்லாம் போகசா தனம்உண் டாகத்**
**தாமத குணம்இ ரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்**
**வீமமாம் மூடல் என்றும் விவிதமாம் தோற்றம் என்றும்**

மயக்கமான மாயையில் இருந்து சிருட்டியாதிகளை வருத்தம் இன்றி குழந்தையைப் போல விளையாட்டாகச் செய்வது ஈசுவரனது கருணையாகும். சிறப்பு மிகுந்த கருணையினால் சீவர்கட்கு எல்லாம் போக சாதனமான சூட்சும சரீரம் உண்டாகும்

---

* *ஏமம் = கலக்கம், மயக்கம்.*

பொருட்டுத் தமோ குணப் பிரதான மாயையானது ஆவரணம் (மறைப்பு), விட்சேபம் (தோற்றம்) என்று இரண்டு சத்திகளாகப் பிரிந்து தோன்றும்.

**36. தோற்றம்ஆம் சத்தி தன்னில் சொல்லிய விண்ஆம் விண்ணின்**
**காற்றதுஆம் காற்றில் தீஆம் கனலின்நீர் நீரின் மண்ஆம்**
**போற்றும்இவ் ஐந்தும் நொய்ய பூதங்கள் என்று பேர்ஆம்**
**சாற்றும்மற்று இவற்றின் போக சாதன தனுஉண் டாகும்.**

விட்சேப சத்தியின் நின்றும் சத்த தன்மாத்திரை என்று சொல்லப்படும் ஆகாயம் உண்டாகும். ஆகாயத்தின் நின்றும் பரிச தன்மாத்திரையான வாயு உண்டாகும் வாயுவின் நின்றும் ரூப தன்மாத்திரையான அக்கினி உண்டாகும். அக்கினியின் நின்றும் ரச தன்மாத்திரையான அப்பு உண்டாகும். அப்புவின் நின்றும் கந்த தன்மாத்திரையான பிருதிவி உண்டாகும். போற்றப்பட்ட இந்தத் தன்மாத்திரைகள் ஐந்தும் சூட்சும பூதங்கள் (அபஞ்சீசிருத பூதங்கள்) என்று பெயர் பெறும். சொல்லப்பட்ட இந்த தன்மாத்திரைகளின் நின்றும் சூட்சும சரீரங்கள் தோன்றும்.

**37. ஆதிமுக் குணம்இப் பூதம் அடங்கலும் தொடர்ந்து நிற்கும்**
**கோதுஇல்வெண் குணத்தில் ஐந்து கூறுஉணர் கருவி ஆகும்**
**ஓதிய பின்னை ஐந்தும் உளம்புத்தி இரண்டாம் ஞான**
**சாதனம் ஆம்இவ் ஏழும் சற்குணப் பிரிவி னாலே.**

தமக்குக் காரணமான தமோ குணப்பிரதான மாயையின்கண் உள்ள தமசில் சத்துவம், தமசில் இராசதம், தமவில் தமசு என்னும் மூன்று குணங்களும் இந்த தன்மாத்திரைகள் ஐந்திலும் கூடியிருக்கும். குற்றமற்ற சூட்சும பூதங்களின் சத்துவகுணத்தில் இருந்து தனித்தனியே எடுத்துவைத்த ஐந்து கூறும் ஞானேந்திரியங்களாம். சொல்லப்பட்ட சூட்சும பூதங்களின் சத்துவகுணத்தில் இருந்து எடுத்து ஒன்றாகக் கூட்டி வைத்த ஐந்து கூறும் மனம் புத்தி என இரண்டாகும். சத்துவகுண அம்சம் ஆதலால் இந்த ஏழும் அறிகருவிகளாம்.

**38. இராசத குணத்தில் வேறிட்டு எடுத்தகூறு ஐந்தும்**
**பிராணவா யுக்கள் என்றும் பெருந்தொழில் கருவி என்றும்**
**பராவிய பெயராம் இந்தப் பதினேழும் லிங்க தேகம்**
**சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய உயிர்கட்கு எல்லாம்.**

இரசோ குணத்தில் எடுத்து ஒன்றாகவைத்து கூறு ஐந்தும் பிராண வாயுக்கள் எனவும், தனித்தனியே எடுத்துவைத்த கூறு ஐந்தும் பெரும் கிரியைச் செய்யும் கன்மேந்திரியங்கள் எனவும் பெயர்கள் சொல்லப்படும். இந்த பதினேழு தத்துவங்களும், தேவர், அசுரர், மனிதர், விலங்கு எனத் தோன்றிய உயிர்களுக்கு எல்லாம் சூட்சும சரீரங்களாம்.

**39. இவ்உடல் மருவும் சீவன் இலங்குதை சதன்என்று ஆவன்**
**இவ்உடல் மருவும் ஈசன் இரணிய கர்ப்பன் ஆவன்**
**இவ்உடல் இரண்டு பேர்க்கும் இலிங்கசூக் குமச ரீரம்**
**இவ்உடல் கோசம் மூன்றாம் இதுகனா அவத்தை ஆமே.**

இந்த சூட்சுமசரீரத்தில் பொருந்திய சீவன் ஆனவன் தைஜசன் என்று சொல்லப்படுவன். இந்த சூட்சுமசரீரத்தில் பொருந்திய ஈசுவரன் இரணியகர்ப்பன் என்று சொல்லப்படுவன். இந்த சரீரம் சீவன் ஈசவரன் ஆகிய இருவருக்கும் இலிங்க தேகம் என்னும் பெயரை உடைய சூட்சும சரீரமாம். இந்த சூட்சும சரீரமானது பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம் என்னும் மூன்று கோசங்கள் கொண்டது. இந்த சூட்சும சரீரத்தில் நிகழ்வது சொப்பன அவத்தை ஆகும்.

**40. சூக்கும சடம்இம் மட்டும் சொல்லினோம் இப்பால் தூலம்**
**ஆக்கும் ஆரோபம் தானும் அடைவினில் மொழியக் கேளாய்**
**தாக்கும்இவ் உயிர்க்குத் தூல தநுவும்போ கமும் உண்டாகக்**
**காக்கும்அவ் ஈசன் பஞ்சீ கரணங்கள் செய்தான் தானே.**

சூட்சுமசரீரம் தோன்றியக் கற்பனையை இதுவரை கூறினோம். இனி தூல சரீரம் தோன்றும் கற்பனையையும் நீ கேட்பாயாக. சூட்சும சரீரத்தோடு கூடிய இந்தச் சீவர்களுக்கு (அவரவரது கருமங்கட்குத் தக்கவாறு) தூல சரீரமும், போகமும் உண்டாகும் பொருட்டு சீவர்களைப் பாதுகாக்கும் இந்த ஈசுவரன் பஞ்சீகரணம் செய்தான்.

**41. ஐந்துபூ தமும்பத்து ஆக்கி அவைபாதி நன்நான்கு ஆக்கி**
**நந்துதம் பாதி விட்டு நான்கொடு நான்கும் கூட்ட**
**வந்தன தூல பூதம் மகாபூதம் இவற்றின் நின்றும்**
**தந்தன நான்காம் தூல தநுஅண்ட புவன போகம்.**

ஐந்து பூதங்களில் ஒவ்வொன்றையும் சமமாக இரண்டிரண்டு பகுதி ஆக்க வேண்டும்.

அரைப் பாகத்தை மற்ற நான்கு பூதங்களின் அரைப் பகுதியுடன் நான்கு பகுதிகளையும் சேர்க்கவே தூல பூதங்கள் உண்டாகும். தூல பூதங்களான இவைகளில் இருந்தும் பேரண்டமும், புவனங்களும் சீவர்களின் அனுபவத்திற்கு உரிய அன்னம் முதலானவைகளும் கருவில் பிறப்பன (சராயுஜம்) முட்டையிற் பிறப்பன (அண்டஜம்) வியர்வையிற் பிறப்பன (சுவேதஜம்) வேர் முதலியவற்றில் தோன்றுவன (உற்பீஜம்) என்னும் நால்வகைப் பிறப்பாகிய தூல சரீரங்களும் ஈசுவரனால் படைக்கப்பட்டன.

**42. தூலமே மருவும் சீவன் சொல்லிய விசுவன் ஆகும்**
**தூலமே மருவும் ஈசன் சொலும்விராட் புருடன் ஆகும்**
**தூலமே அன்ன கோசம் துன்னும்சாக் கிரஅ வத்தை**
**தூலகற் பனைஈது என்று தொகுத்தது மனத்தில் கொள்வாய்.**

முன்னர்ச் சொல்லிய தூல சரீரத்தில் பொருந்தும் சீவன் ஆனவன் விசுவன் என்னும் பெயர் உடையவன். அத்தூல சரீரத் தொகுதியில் (சமஷ்டி) பொருந்தும் ஈசுவரன் விராட் என்னும் பெயர் உடையவன். அத்தூல சரீரமே அன்னத்தினால் வளர்வது ஆதலால் அன்னமய கோசமாம். அதுவே சாக்கிரம் என்னும் அவத்தைக்கு இடமாகும், என நாம் தொகுத்துக் கூறியதை மனத்தில் கொள்வாய்.

**43. சீரிய ஈச னார்க்கும் சீவர்க்கும் உபாதி ஒன்றேல்**
**ஆரிய குருவே பேதம் அறிவதுஎப் படிஎன் றக்கால்**
**காரிய உபாதி சீவன் காரண உபாதி ஈசன்**
**வீரியம் மிகுச மட்டி வியட்டியால் பேதம் ஆமே.**

சிறப்புடைய ஈசுவரனுக்கும் சீவனுக்கும் சரீரவடிவ உபாதி ஒன்றே ஆனால், இவன் ஈசுவரன், இவன் சீவன் என்ற வேறுபாட்டினை அறிவது எங்ஙனம் குருவே என்று கேட்பாயானால், காரிய உபாதியை உடையவன் சீவன், காரண உபாதியை உடையவன் ஈசுவரன். இந்த இருவருக்கும் பெருமை மிக்க தொகுதியினாலும் (சமட்டி) தனிப்பட்டதாலும் (வியட்டி) வேறுபாடு உள்ளது என்று அறிவாயாக.

**44. மரங்கள்போல் வியட்டி பேதம் வனம்எனல் சமட்டி பேதம்**
**சரங்கள்தா வரங்கள் பேதத் தனிஉடல் வியட்டி என்பார்**
**பரம்பிய எல்லாம் கூட்டிப் பார்ப்பதே சமட்டி என்பார்**
**இரங்கிய பலசீ வர்க்கும் ஈசர்க்கும் பேதம் ஈதே.**

இரு ஒரு மரம், இது ஒரு மரம் என்று தனித்தனியாகப் பிரிப்பது வியட்டியாம். மரங்கள் எல்லாவற்றையும் ஒருங்கு சேர்த்து இது ஒரு தோப்பு என்பது சமட்டியாம்.

அசையாத தாவரங்கள், அசைகின்ற உயிர்களின் தனித்தனி சரீரங்கள் வியட்டி ஆகும். பரவிய அனைத்தையும் ஒருங்குசேர்த்துப் பார்ப்பதே சமட்டி ஆகும். துன்பமுடைய பல சீவர்களுக்கும் ஈசுவரனுக்கும் இதுவே வேறுபாடு ஆகும்.

**45. கற்பனை வந்த ஆறு காட்டினோம் காண்ப எல்லாம்**
**சொற்பனம் போலும் என்றே துணிந்தவன் ஞானி ஆவான்**
**செல்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்த ஆகாசம் போலும்**
**அற்புத முத்தி சேரும் அபவாத வழியும் கேளாய்.**

இதுவரை கற்பனையாகத் தோன்றிய சிருட்டிக் கிரமத்தைச் சொன்னோம். காணும் உலகங்கள் அனைத்தும் சொப்பனம் போலக் கருதி, ஐயமின்றி பொய் என்று நிச்சயித்தவனே ஞானி ஆவான். மேகம் நெருங்கிய மழைக்காலம் நீங்கித் தெளிந்திருக்கின்ற வானம் போல, அனைத்துத் துன்பங்களும் நீங்கி அற்புதமான வீடுபேற்றினை அடையும் அபவாத வழியையும் கேட்பாயாக.

**46. அரவுஅன்று கயிறுஎன் றாற்போல் ஆள்அன்று தறிஎன் றாற்போல்**
**குரவன்சொல் உபதே சத்தால் கூறும்நூல் ஒளியைக் கொண்டு**
**புரம்அன்று புவனம் அன்று பூதங்கள் அன்று ஞானத்**
**திரம்என்னும் பிரமம் என்று தெளிவதே அபவா தம்காண்.**

இது பாம்பு இல்லை கயிறு என்று தெளிந்தாற் போலவும், இவ்வடிவம் கள்ளன் அன்று கட்டைதான் என்று தெளிந்தாற் போலவும், குரு உபதேசத்தாலும், சாத்திர விசாரனையினாலும், இது சரீரம் அன்று, இது உலகம் அன்று, இவை பூதங்கள் அல்ல, இவை உறுதியாக பிரம்மமே என ஐயம் இன்றித் தெளிவதே அபவாதமாம்.

**47. படமும் நூலும்போல் செய்த பணியும் பொன்னும்போல் பார்க்கில்**
**கடமும் மண்ணும்போல் ஒன்றாம் காரிய கரணங்கள்**
**உடல்முதல் சுபாவம் ஈறா ஒன்றில் ஒன்று உதித்த வாறே**
**அடைவினில் ஒடுக்கிக் காண்பது அபவாத உபாயம் ஆமே.**

காரியமான உலகத்தையும், அதற்கு அதிட்டானம் ஆகிய பிரம்மத்தையும் ஆராய்ந்து பார்க்கும் போது, காரியம் ஆகிய ஆடையும் அதற்குக் காரணம் ஆகிய நூலும் போலவும்,

செய்யப்பட்ட (காரியம் ஆகிய) அணிகலனும், (அதற்குக் காரணம்) ஆகிய பொன்னும் போலவும், (காரியம் ஆகிய) குடமும், (அதற்குக் காரணம் ஆகிய) மண்ணும் போலவும் ஒன்றாகுமே அன்றி அந்நியம் ஆகா. இப்படி சரீரம் முதல் அவித்தை வரை ஒன்றில் இருந்து ஒன்று உண்டான படியே முறையே ஒடுக்கிப் பார்ப்பது அபவாதமாம்.

**48. தூடண தமத்தில் வந்த தோற்றமாம் சத்தி செய்யும்**
**ஏடணை விகாரம் சொன்னீர் இரண்டுசத் திகள்என் றீரே**
**மூடலாம் சத்தி செய்யும் மோகமும் சொல்லும் ஐயா**
**கேடுஅறக் குருவே என்னக் கிருபையோடு அருள்செய் வாரே.**

நிந்திக்கத் தக்க மாயையில் தோன்றிய விட்சேபம் சத்தி உண்டாக்கும் விருப்பத்திற்கு இடமான பிரபஞ்சம் பற்றிச் சொன்னீர். முன்னர் தாமத குணம் இரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும் என்றீர். ஆதலால் ஆவரண சத்தி செய்யும் மயக்கமும் எனது துன்பமும் நீங்கும்படி, ஐயா குருவே, எனக்கு உபதேதசித்து அருளும் என்று சீடன் கேட்க கருணையோடு கூறத் தொடங்கினார்.

**49. தான்நிகர் தனக்காம் ஈசன் தனையும்தங் களைத்தாம் கண்ட**
**ஞானிகள் தமையும் அன்றி நாஸ்திந பாதி என்னும்**
**ஊன்இடை உயிர்கள் உள்ளத்து உணர்விழி குருடுஆம் வண்ணம்**
**வான்நிலம் திசைகள் மூடும் மழைநிசி இருள்போல் மூடும்.**

ஆவரணசத்தியானது தனக்குத் தானே நிகரான ஈசுவரனையும், தம்மை பிரம்மமாக அறிந்துள்ள ஞானிகளையும் மறைக்காது. பிரம்மம் என்பது இல்லை, இருந்தால் தோன்றாதோ என்று மற்ற சரீரத்தின் கண்ணுள்ள சீவர்களின் உள்ளத்தில் உள்ள ஞான திருஷ்டி குருடு ஆகுமாறு மறைக்கும், வானம், பூமி, திசைகள் ஆகியனவற்றை விழிக்குத் தோன்றாமல் மழைகாலத்து இருள் மறைப்பது போல், ஆவரண சத்தி மறைக்கும்.

**50. பூன்றம்ஆம் பிரமத் துக்கும் புறத்துஉள விகாரங்கட்கும்**
**ஆன்றகூ டஸ்த னுக்கும் அகத்துஉள விகாரங் கட்கும்**
**தோன்றிய பேதம் சற்றும் தோன்றாமல் மறைத்து மூடும்**
**ஊன்றிய பவவி யாதி உண்டாக்கும் உபாதி ஈதே.**

பரிபூரணமாகிய பிரம்மத்தின் நித்தியத் தன்மைக்கும், புறத்தே இது எனப்படும் ஆகாசாதி வடிவப் பிரபஞ்சத்தின் அநித்தியத் தன்மைக்கும், சாட்சியாகிய கூடத்தனின்

அறிவுத் தன்மைக்கும், சரீரமே நான் எனக் கருதும் அகங்காரத்தின் சடதன்மைக்கும் உள்ள வேறுபாடுசிறிதும் விளங்காதபடி ஆவரணசத்தி மறைக்கின்றது. சீவர்களுக்கு (இங்ஙனம் மறைத்து) பிறவித்துன்பத்தைக் கொடுக்கும் உபாதி இந்த ஆவரண சத்தியே ஆகும்.

**51. ஆதாரம் மறைந்து போனால் ஆரோபம் எங்கே தோன்றும்**
**ஆதாரம் மறையாது ஆகில் ஆரோபம் இலையே என்றால்**
**ஆதாரம் சமம்வி சேடம் ஆம்என இரண்டு கூறுஆம்**
**ஆதாரம் சமம்ஆம் எங்கும் ஆரோபம் விசேடம் ஆமே.**

மிக்க இருளினால் கயிறு மறைந்து விடுவது போல, ஆவரண சத்தியினால் சர்வத்திற்கும் ஆதாரமான பிரம்மமானது மறைந்து போகுமாயின், ஆரோப வடிவ உலகம் எவ்வாறு தோன்றும்? மத்தியான வெயிலில் உள்ள கயிறு போல, ஆதாரமான பிரம்மம் மறைபடாது தோன்றுமாயின், ஆரோப வடிவ உலகம் தோன்ற மாட்டாது. ஆதலால் இவற்றிற்கு விடை அருளுமாறு பிரார்த்திக்கின்றேன். அன்பனே, ஆதாரமானது சமம் விசேடம் என இருவகைத்தாம். அதிக தேசத்திலும் அதிக காலத்திலும் உள்ள ஆதாரம் சம ஆதாரமாம். அற்பதேசத்திலும் அற்பகாலத்திலும் உள்ள ஆதாரம் விசேட ஆதாரமாம்.

**52. சகம்அதில் இதுஎன் சுட்டுஆம் சமானம்தான் மறைந்தி டாது**
**மிகஇது கயிறுஆம் என்னும் விசேடம்தான் மறைந்து போகும்**
**அகம்எனும் சமானம் தன்னை அஞ்ஞானம் மறைத்தி டாது**
**பகர்விசே டம்அதாம் சீவன் பரம்எனும் அதனை மூடும்.**

அற்ப இருளில் எதிரே கிடப்பதான கயிற்றில் இது பாம்பு என்று தோன்றிய இடத்து, இது என்று சுட்டப்படுவதான சமானிய வடிவம் மறையாது. இது கயிறு என்னும் விசேட வடிவம் மறைந்து விடுகின்றது. அதுபோல கற்பித விசேட வடிவ சீவனது நான் இருக்கிறேன் என்னும் சாமானிய வடிவ ஆதாரத்தை ஆவரணமானது மறைக்காது. நான் சச்சிதானந்த வடிவப் பிரம்மம் என்னும் விசேடவடிவ ஆதாரத்தை மறைக்கின்றது.

**53. கேவல நிலைதோன் றாமல் கெடுத்தது பஞ்ச கோசம்**
**சீவனும் சகத்தும் ஆகிச் செனித்தவிட் சேபம் அன்றோ**
**ஆவ ரணம்தா னேபாழ் அனர்த்தம்என்று உரைத்தது ஏதோ**
**மேவரும் குருவே என்று வினாவிடின் மகனே கேளாய்.**

சீவ பிரம்ம ஐக்கிய நிலையை விளங்காவாறு மறைத்துக் கெடுத்தது அன்னமயம் முதலிய பஞ்சகோசங்களும், அவற்றின் அபிமானியான சீவனும், ஆகாயம் முதலிய சகத்துமாய் உண்டான விட்சேப சத்தியல்லவா? அங்ஙனம் கொடிதாயுள்ள விட்சேப சத்தியை நிந்தியாது ஆவரண சத்திதானே சீவர்கள் உள்ளத்து உணர்விழி குருடாம் வண்ணம் மறைத்துப் பாழாக்கிற்று என்றும், ஊன்றிய பவ வியாதி உண்டாக்கும் உபாதி என்றும் அதனை வெறுத்துக் கூறிய காரணம் என்ன? கிடைத்தற்கரிய குருவே, என்று கேட்கில், மைந்தனே, அதனை விளக்கக் கேட்பாய்.

**54. தோற்றம்ஆம் சத்தி தானும் துன்பம்ஆம் பவம்ஆ னாலும்**
**ஆற்றலால் முத்தி சேர்வார்க்கு அனுகூலம் ஆகும் காண்நீ**
**ஊற்றம்ஆம் பகற்கா லம்போல் உபகார நிசியால் உண்டோ**
**மாற்றம்என் உரைப்பேன் மைந்தா மறைப்பது மிகப்பொல் லாதே.**

விட்சேப சத்தியானது அவிவேகட்குத் துன்பத்தைத் தரும் பிறவிக்குக் காரணமாயினும், விட்சேப சத்தியில் தோன்றிய குரு, சாத்திராதிகள் விவேகிகட்கு முத்தி அடைய அனுகூலமாக இருப்பதாம். இராக்காலம் போல் ஆவரண சத்தியையும், பகல் காலம் போல் விட்சேபசத்தியையும் கொள்க. பகல்காலம் போல் உபகாரம் இராக் காலத்தில் இல்லை அல்லவா? ஆதலால் மைந்தனே, விட்சேபசத்தியினும் ஆவரணசத்தியே மிகவும் கொடியது.

**55. சுழுத்தியில் பிரள யத்தில் தோற்றம்ஆம் சகங்கள் மாண்டும்**
**அழுத்திய பவம்போம் முத்தி அடைந்தவர் ஒருவர் உண்டோ**
***முழுத்தவிட் சேபம் எல்லாம் முத்தியில் கூட்டு கிற்கும்**
**கொழுத்தஆ வரண முத்தி கூடாமல் கெடுத்த கேடே.**

நித்தியப் பிரளயமாகிய சுழுத்தியிலும், பிரளய காலத்திலும் விட்சேப சத்தியின் காரணமான உலகம் முதலியன நசித்தும், பிறவித்துன்பம் நீங்கி முத்தியை அடைந்தவர்கள் ஒருவரும் இலர். ஆதலால் முழுமையாக விட்சேப சத்தியின் காரியம் அனைத்தும் முத்தியை அடையச் செய்யும். அறியாமை மிகுந்த ஆவரண சத்திதான் முத்திய அடையாமல் கெடுப்பதாம்.

---

* முழுத்த = முழுமையாக.

**56. சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்றம் ஆன**
**சத்தியும் பொய்யே என்றால் சத்திசா தனமா வந்த**
**முத்தியும் பொய்யாம் என்னில் மோகநித் திரைவி லங்கால்**
**நித்திரை தெளியு மாபோல் நிருவாண நிலைமெய் ஆமே.**

கிளிஞ்சலில் வெள்ளி போல பொய்த் தோற்றமாய்த் தோன்றிய விட்சேப சத்தியின் காரியமான குரு சாத்திராதிகளும் பொய் ஆதலால் அதன் வாயிலாக உண்டான முத்தியும் பொய்யாகும் அல்லவா? என்பாய் ஆகில் பொய்யான நித்திரையில் கண்ட புலி முதலிய விலங்குகளால் நித்திரை தெளிந்து சாக்கிரம் வருவதுபோல, விட்சேப சத்தியின் காரியமான குரு சாத்திராதிகளால் உண்டாகும் முத்தியும் சத்தியமாகும்.

**57. இம்பரில் நஞ்சை நஞ்சால் இரும்பினை இரும்பால் எய்யும்**
**அம்பினை அம்பால் பற்றும் அழுக்கினை அழுக்கால் மாய்ப்பர்**
**வம்புஇயல் மாயை தன்னை மாயையால் மாய்ப்பர் பின்னைத்**
**தம்பம்ஆம் அதுவும் கூடச் சவம்சுடு தடிபோல் போமே.**

உலகில் விஷத்தை அதற்கு விரோதியாகிய வேறொரு விஷத்தால் அழித்து விடுகிறார்கள். இரும்பை, எஃகு ஆகிய இரும்பால் அழித்து விடுகிறார்கள். அம்பினை வேறு ஒரு அம்பினால் வென்று விடுகிறார்கள். ஆடையில் இருக்கும் அழுக்கினை உவர் மண்ணாகிய அழுக்கினால் போக்குகிறார்கள். அதுபோலவே நிலையில்லாத அவித்தையாகிய மாயையை சத்துவகுண மாயையாலே கெடுப்பார். பின்பு அந்த சத்துவகுண மாயையும் பிணஞ்சுடு தடிபோல அசுத்த மாயையோடு கெட்டுப்போம். (இதுதான் மாயையைக் கெடுப்பதற்குரிய வழி ஆகும்).

**58. இந்தமா யையினால் சீவர்க்கு ஏழுஅவத் தைகள்உண்டு ஆகும்**
**அந்தஏழ் அவத்தை தம்மை அடைவினில் மொழியக் கேளாய்**
**முந்தஅஞ் ஞானம் மூடல் முளைத்தல்கா ணாத ஞானம்**
**சந்ததம் கண்ட ஞானம் தழல்கெடல் குளிர்மை ஆதல்.**

இந்த சுத்த அசுத்தமான மாயையால் சீவர்களுக்கு ஏழு அவத்தைகள் உண்டாகின்றன. அவை அஞ்ஞானம், ஆவரணம் (மறைத்தல்), விட்சேபம் (தோன்றல்), பரோட்ச (கேள்வி) ஞானம், அபரோட்ச (பிரத்தியட்ச) ஞானம், சோக நிவிர்த்தி (துன்பம் கெடல்), நிரங்குசதிருப்தி (தடையற்ற ஆனந்தம்) என்பனவாம்.

**59. பிரமம்ஆம் தனைம றந்த பேதைமை யேஅஞ் ஞானம்**
**பரன்இலை காணோம் என்று பகர்தல்ஆ வரண மூடல்**
**நரன்ஒரு கருத்தால் சீவன் நான்என முளைத்தல் தோற்றம்**
**குரவன்வாக் கியத்தால் தன்னைக் குறிக்கொளல் பரோட்ச ஞானம்.**

பிரம்ம வடிவமாகிய தன் நிச வடிவத்தை மறந்திருப்பதே அஞ்ஞானமாம். பிரம்மம் இல்லை, அது இருந்தால் விளங்கும், இல்லாமையின் விளங்கவில்லை என்று கூறுதல் ஆவரணமாம். தன்னை கர்த்தா போத்தாத் தன்மை உடைய சீவன் என்று நினைப்பதே விட்சேபமாம். குருவின் உபதேசத்தினால் பிரம்மம் உண்டென்று குறிப்பாக தெரிந்து கொள்வது பரோட்ச ஞானமாம்.

**60. தத்துவ விசாரம் செய்து சகலசந் தேக மும்போய்**
**அத்துவி தம்தான் ஆதல் அபரோட்ச ஞானம் ஆகும்**
**கர்த்தனாம் சீவ பேதம் கழிவதே துக்கம் போகல்**
**முத்தனாய் எல்லாம் செய்து முடிந்ததுஆ னந்தம் ஆமே.**

நீயே பிரம்மம் என்னும் மகாவாக்கியத்தினால் தத்துவ விசாரம் செய்து, சகல சந்தேகங்களும் நீங்கி அத்துவிதப் பிரம்மமே தானாதல் அபரோட்ச ஞானமாம். நான் கர்த்தா போக்தா என்னும் சீவத்துவம் நீங்குவதே துக்க நிவிர்த்தியாம். அனைத்து துக்கங்களில் இருந்தும் விடுபட்டு தொழிலற்று, பிரம்மானந்தக் கடலில் மூழ்கி ஆனந்த மயனாய் ஒன்றும் வேண்டாது திருப்தி அடைந்து இருப்பதே தடையற்ற ஆனந்தமாம்.

**61. இதுநினக்கு அறியும் வண்ணம் இப்படி ஒருதிட் டாந்தம்**
**புதுமையாம் கதைகேள் பத்துப் புருடர்ஓர் ஆற்றை நீந்தி**
**உதகதீ ரத்தில் ஏறி ஒருவன்ஒன் பதுபேர் எண்ணி**
**அதனொடு தசமன் தான்என்று அறியாமல் மயங்கி நின்றான்.**

ஒருவனுக்கே ஏழு அவத்தைகள் உண்டு என்பது உனக்கு நன்றாக விளங்கும் படி, இதற்கு ஒரு உதாரணம் ஆகப் புதுமையான ஒரு கதையினைக் கேள். ஆடவர் பத்துப்பேர் ஓர் ஆற்றை நீந்தி அதன் கரையில் ஏறி, ஒருவன் ஒன்பது பேரை எண்ணி அவர்களோடு தன்னைச் சேர்த்து தான் பத்தாமவன் என்பதை அறியாமல் மயங்கி நின்றான்.

**62. அறியாத மயல்அஞ் ஞானம் அவன்இல்லை காணோம் என்றல்**
**பிறியாஆ வரணம் ஆகும் பீழைகொண்டு அழல்விட் சேபம்**

**நெறியாளன் தசமன் உண்டு நிற்கின்றான் என்ற சொல்லைக்**
**குறியாக எண்ணி நெஞ்சில் கொள்வது பரோட்ச ஞானம்.**

ஒன்பது பேரை நன்கு பார்ப்பவனாக இருந்தும், மயக்கத்தினால் ஒன்பது பேரை எண்ணியவன் தன்னைப் பத்தாமவனாக அறியாத மயக்கமே அஞ்ஞானமாம். பத்தாமவன் இல்லை காணோம் என்று கூறுதல் பிறியாத ஆவரணமாம். ஆற்றில் பத்தாமவன் இறந்தான் என்று துக்கத்தோடு அழுதல் விட்சேபமாம். வழிச் செல்பவன் ஒருவன் பத்தாமவன் இருக்கின்றான் இறந்திலன் என்ற சொல்லை நெஞ்சில் உறுதியாகக் கொள்வது பரோட்ச ஞானமாம்.

**63. புண்ணிய பதிகன் பின்னும் புருடர்ஒன் பதின்மர் தம்மை**
**எண்ணும்நீ தசமன் ஆவை என்னவே தன்னைக் காணல்**
**கண்ணினில் கண்ட ஞானம் கரைதல்போ வதுநோய் போதல்**
**திண்ணிய மனதில் ஐயம் தெளிதல் ஆனந்தம் ஆமே.**

புண்ணியவான் ஆன வழிச்செல்வோன் பின்னும் ஒன்பது ஆடவரை எண்ணுகின்ற நீ பத்தாமவன் ஆவாய் என்று உணர்த்தவே, நான் பத்தாமவன் ஆகின்றேன் என்று தன்னைக் கண்ட ஞானம் அபரோட்ச ஞானமாம். பத்தாமவன் நதியில் இறந்தான் என்று அழுத அழுகை நீங்கினதே துக்க நிவிர்த்தியாம். தனது சித்தத்தில் உறுதியாக சந்தேகம் நீங்குவதே ஆனந்தம் ஆகும்.

**64. தசபுமான் தனைக்கண் டாற்போல் சற்குரு மூர்த்தி யேஎன்**
**நிசவடி வினையான் காண நீர்காட்டல் வேண்டும் என்றான்**
**சுசிபெறும் இலட்சி யார்த்தம் துவம்பதம் தற்ப தங்கட்கு**
**அசிபத ஐக்யம் செய்யும் அதுசெயும் உண்மை கேளாய்.**

பத்தாமவன் தன்னைப் பத்தாமவனாகக் கண்டதைப் போலச் சற்குருமூர்த்தியே என் உண்மை வடிவான ஆன்மாவை, பிரம்மமாக நான் அறியுமாறு நீர்காட்டல் வேண்டும் என்று சீடன் கேட்டான். தத்துவமசி என்னும் சாம வேத மகாவாக்கியத்தின் துவம்பதத் தத்பதங்களின் சுத்தமான இலட்சிய அர்த்தங்களுக்கு (கூடத்த பிரம்மங்கட்கு) அசிபதம் பாகத்தியாக லட்சணையினால் ஐக்கியத்தைப் போதிக்கின்றது. அங்ஙனம் போதிக்கும் தத்துவ அர்த்தத்தை உரைப்போம் கேட்பாயாக

**65. விண்ஒன்றை மகாவிண் என்றும் மேகவிண் என்றும் பாரில்**
**மண்ஒன்று கடம்விண் என்று மருவிய சலம்விண் என்றும்**

**எண்ணும்கற் பனைபோல் ஒன்றே எங்கும்ஆம் பிரமம் ஈசன்**
**நண்ணும்கூ டஸ்தன் சீவன் நான்குசை தந்யம் ஆமே.**

ஒரே ஆகாயமானது மகா ஆகாசம் எனவும், மேகசல பிரதிபிம்ப ஆகாசம் எனவும், ஒரு குடத்தில் தோன்றும் ஆகாசம் கடாகாசம் எனவும், அந்தக் குடத்து நீரில் தோன்றும் ஆகாசம் கடசல பிரதிபிம்ப ஆகாசம் எனவும் கற்பனையாய் நான்காக எண்ணப்படுகிறது. அது போல் பரிபூரணமான பிரம்மம் ஒன்றாய் இருந்தும் பிரம்மம், ஈசுவரன், கூடத்தன், சீவன் என்று கற்பிதமாக நான்கு சைதன்யமாகத் தோன்றுகின்றது.

**66. பூச்சிய ஈசன் சீவன் புகல்பதம் இரண்டி னுக்கும்**
**வாச்சியம் லட்சி யந்தான் மலம்இலாப் பிரமம் ஆன்மா**
**காய்ச்சிய பாலில் நெய்போல் கலந்துஒன்றாம் கடைந்து எடுக்கும்**
***ஆச்சியம் என்ன உன்னை அறிந்துநீ பிறிந்து கொள்ளே.**

அனைவராலும் வழிபடத்தக்க ஈசுவரனும் அவ்வாறு வழிபடும் சீவனும், மகா வாக்கியத்தில் சொல்லப்படும் தத்பத துவம்பதங்கள் இரண்டினுக்கும் வாக்கிப் பொருளாகும். அவற்றிற்கு உரிய இலட்சியார்த்தம் ஆவது குற்றம் இலாப் பிரம்மமும் கூடத்தனுமாம். காய்ச்சிய பாலில் வெண்ணெய் கலந்து ஒன்றி இருப்பது போல அவை கலந்து ஒன்றாய் இருக்கின்றன. மத்தினால் கடைந்து பிரித்து எடுக்கப்படும் வெண்ணெய் போல விவேகத்தால் உன்னை அறிந்து, நீ வாக்கியப் பொருளில் இருந்து உன்னை வேறுபடுத்தி அறிந்து கொள்வாய்.

**67. பிறிவதுஎப் படிஎன் றக்கால் பிணம்ஆகும் உடல்நான் என்னும்**
**அறிவினைக் கொல்லல் வேண்டும் ஐம்பூத விகாரம் அன்றோ**
**வெறியதுஓர் துருத்தி மூக்கின் விடுவது போல்உன் மூக்கால்**
**எறிபிரா ணனும்நீ அல்லை இராசத குணவி காரம்.**

அநாத்மாவில் இருந்து பிரித்து அறிவது எப்படி என்று கேட்பாயாகில், சில நாளில் பிணமாய்ச் சிதைந்து போகும் அன்னமயக் கோசமான தூல சரீரத்தை ஆன்மா என்று கருதும் மயக்கத்தைக் கெடுக்க வேண்டும். அந்த சரீரம் ஐம்பூதங்களின் காரியம் அல்லவா. வெறுமையான ஒரு தோல் துருத்தி மூக்கினால் காற்றை விடுவது போல, உனது

*ஆச்சியம் = வெண்ணெய்.

மூக்கின் வழி வீசுகின்ற சடமான பிராணவாயுவும் நீ அல்ல. பிராணமய கோசமும் சூட்சும பூதங்களின் இரஜோ குணகாரியம் ஆதலால் அதுவும் நீ அல்ல.

**68. கரணமாம் மனது புத்தி கருத்தாவாம் அவைஆன் மாவோ**
**தரம்உள இரண்டு கோசம் சத்துவ குணவி காரம்**
**வரம்அறு துயில்ஆ னந்த மயனையும் நான்என் னாதே**
**விரவிய தமஅஞ் ஞான விருத்தியின் விகார மாமே.**

கருவியாகிய மனமும் கருத்தாவாகிய புத்தியும் அல்ல. சங்கற்பரூபம், நிச்சயரூபம் என்னும் தார தம்மியம் உள்ள அவ்விரண்டு கோசங்களும் சத்துவ குணங்களின் காரியம் ஆதலால் நீ அல்ல. சிறப்பற்ற சுழுத்தியில் வளங்குகின்ற ஆனந்தமயனையும் ஆன்மா என்று கருதாதே. ஆனந்தமய கோசம் தமோ வடிவமான அஞ்ஞான விருத்தியின் காரியம் ஆதலால் அதுவும் நீ அல்ல.

**69. சத்தொடு சித்து ஆனந்தம் சமம்திரம் சாட்சி ஏகம்**
**நித்தியம் வியாபி ஆன்மா நீஅதுவா அறிந்து**
**பொத்தொடு சடம்துக் காதி பொருந்துபே தங்கள் ஆன**
**குத்திர பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியில் ஆவாய்.**

சச்சிதானந்தமாயும், சமமாயும், நிலையாயும், சாட்சியாயும், ஏகமாயும், அழிவற்றதாயும், வியாபகமாயும், பஞ்ச கோசங்களுக்கும் ஆதாரமான ஆன்மாவாகவே உன்னை அறிந்து கொள்வாய். அசத்து சடம் துக்கம் முதலான பேதங்களைப் பொருந்தி விபரீதத் தன்மைகளோடு கூடிய அநான்மாவான வஞ்சகம் பொருந்திய ஐந்து கோசங்கள் ஆகிய குகைகளை விட்டு விலகிநிற்பாய்.

**70. பஞ்சகோ சமும்விட்டு அப்பால் பார்க்கின்ற பொழுது பாழே**
**விஞ்சியது அதுஅல் லாமல் வேறுஒன்றும் தெரியக் காணேன்**
**அஞ்சன இருளை யோநான் அகம்என அனுப விப்பேன்**
**வஞ்சம்இல் குருவே என்ற மகன்மதி தெளியச் சொல்வார்.**

அன்னமய முதலிய ஐந்து கோசங்கள் ஒவ்வொன்றையும் முறையே இது நானல்ல, இதுநானல்ல என்று தாங்கள் அருளியபடியே நீக்கி அப்பால் பார்க்கின்ற போது சூனியமே (பாழே) எஞ்சி நின்றது. அச்சூனியத்தை அன்றி வேறு ஒன்றும் தோன்றக் காண்கிலேன். ஆதலால் காரிருள் போன்ற சூனியத்தையா நான் ஆன்மா என்று அனுபவிப்பேன்? கபட

மற்ற குருவே என்று வினாவிய சீடனின் புத்தி தெளிவடையுமாறு உபதேசிக்கத் தொடங்கினார்.

**71. முன்புகல் தசமன் புத்தி மோகத்தால் எண்ணி எண்ணி**
**ஒன்பது பேரைக் கண்ட ஒருவனாம் தனைக்கா ணாத**
**பின்புஅவன் இடையில் கண்ட பெரியபாழ் அவனோ பாராய்**
**அன்புஉள மகனே காண்பது அடங்கலும் காண்பான் நீயே.**

அன்புள்ள மகனே! முன்னர் கூறிய தசமன் புத்தி மயக்கத்தினால் ஒன்பது புருடர்களை மீண்டும் மீண்டும் எண்ணிப் பார்த்து, ஒன்பதுபேரை எண்ணிய தன்னை பத்தமாவனாக அறியாதவிடத்து, அவன் இடத்தில் அவனால் காணப்பட்ட பெரும் சூனியம் அவன் ஆவானோ? ஆகமாட்டான். சூனியத்தைக் கண்ட அவனே பத்தாமவன். அதுபோல உன்னால் காணப்பட்ட சூனியம் நீயல்ல. யாவற்றையும் காணும் சித்துப் பொருளான நீயே ஆன்மா ஆகும்.

**72. தூலசூட் சுமஅஞ் ஞானம் தோன்றும்மூன்று அவத்தை தாமும்**
**காலம்ஓர் மூன்றும் சன்மக் கடல்எழுங் கல்லோ லங்கள்**
**போலவே வந்து வந்து போனஎத் தனைஎன் பேன்நான்**
**ஆல்அமர் கடவுள் ஆணை அவைக்குஎலாம் சாட்சி நீயே.**

தூலம், சூட்சுமம், காரணம் என்று கூறப்படும் மூன்று சரீரங்களும், அந்த சரீரங்களைப் பற்றி உண்டாகின்ற சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்ற மூன்று அவத்தைகளும், இறப்பு, எதிர், நிகழ்வு என்ற முக்காலங்களும் பிறவியாகியக் கடலில் உண்டாகும் அலைகள் போல, உன்னிடத்தில் தோன்றித் தோன்றி அழிந்தவைகளுக்கு ஓர் அளவே இல்லை. கல்லால விருட்சத்தின் கீழ் குருமூர்த்தமாக எழுந்தருளிய தட்சிணா மூர்த்தியின் மேற்சத்தியம், அவை அனைத்திற்கும் நீ சாட்சி ஆகும்.

**73. எல்லாம்கண்டு அறியும் என்னை ஏதுகொண்டு அறிவேன் என்று**
**சொல்லாதே சுயமாம் சோதிச் சுடருக்குச் சுடர்வேறு உண்டோ**
**பல்லார்முன் தசமன் தன்னைப் பார்ப்பதும் தனைக்கொண் டேதான்**
**அல்லாமல் பதினொன் றானும் அவன்இடத்து உண்டோ பாராய்.**

எல்லாவற்றையும் அறியும் என்னை எதைக் கொண்டு அறிவேன் என்று சொல்லாதே. சுயம்பிரகாசமான அறிவாகிய உன்னை நீ அறிவதற்கு வேறொரு பிரகாசம்

வேண்டுவதில்லை. முன்னர் கூறிய தசமன் கதையில், தசமன் தன்னைப் பத்தாமவன் என்று அறிந்ததும் தன்னாலேயே அன்றி, அவனுக்கு வேறாக பதினொன்றாமவன் இருக்கின்றானா? இல்லை அல்லவா, அங்ஙனமே நீ உன்னை அறிவதற்கு வேறொரு பிரகாசம் வேண்டப்படுவது இல்லை என்பதை ஊகித்து அறிவாய்.

**74. அறிவுக்கும் அறிவு செய்யும் அறிவுவேறு உண்டுஎன்று எண்ணும்**
**அறிவுஅற்ற குதர்க்க மூடர்க்கு அனவஸ்தை பலமாய்த் தீரும்**
**அறிபடும் பொருள்நீ அல்லை அறிபடாப் பொருள்நீ அல்லை**
**அறிபொருள் ஆகும் உன்னை அனுபவித்து அறிவாய் நீயே.**

அறிவு வடிவமான உன்னைக் காண்பதும் வேறொரு ஞானத்தால் என்று கூறுவது மூடத்தனம் ஆகும். ஏனெனில் அந்த ஞானத்தைக் காண, இன்னமொரு ஞானம் வேண்டும் என, இது முடிவு பெறாமல் வரம்பின்றி போய்க் கொண்டே இருக்கின்ற அனவத்தை தோஷமே பிரயோசனமாக முடியும். அறிபடு பொருளாகிய உலகமும் நீயல்ல. அறிபடாப் பொருளாகிய மாயையும் நீயல்ல. நீ இவ்விரண்டிற்கும் வேறாய் சுயம்பிரகாசமான அறிவு வடிவமாய் இருக்கின்றாய். அப்படிப்பட்ட உன்னை நீயே உணர்ந்து, உன் சுயவடிவத்தை அனுபவித்து அறிய வேண்டும்.

**75. மதுரமாம் கட்டி சுட்ட மாப்பணி யாரம் எல்லாம்**
**மதுரம்ஆக் கியஅு தற்கு மதுரம்தான் சுபாவம் அன்றோ**
**அதுஇது எனும்ச டங்கள் அறிவாக அறிவைத் தந்தே**
**அதுஇது இரண்டும் ஆகா அகம்பொருள் அறிவாய் நீயே.**

வெல்லக்கட்டியை மாவில் சேர்த்து சுட்ட பலகாரங்கள் அனைத்தையும் அந்த வெல்லக் கட்டி இனிக்கச் செய்கிறது. அப்படி யாவற்றையும் இனிக்கச் செய்த அந்த வெல்லக் கட்டிக்கு இனிப்பே சுபாவம் அல்லவா. அதுபோல காரணவடிவ மாயை, காரியவடிவ உலகம் என்னும் சடங்களை விளக்கிக் கொண்டிருக்கும் அறிவு வடிவமே நீயாகும். மாயை, உலகம் என்னும் இரண்டும் தானாகமல் அவற்றிற்கு வேறான அறிவாகிய நீயே அகம் என்ற பதத்தின் லட்சியார்த்தமாய் இருக்கின்றாய்.

**76. இந்தநீ துவம்ப தத்தின் இலட்சியப் பொருளாம் என்றும்**
**பந்தம்இல் பிரம மேதற் பதந்தனில் இலட்சி யார்த்தம்**
**அந்தமாம் சீவன் ஈசன் அவர்களே வாச்சி யார்த்தம்**
**சந்ததம் பேதம் ஆவார் தமக்குஅயிக் கியம்கூ டாதே.**

மூன்று சரீரங்களுக்கும் அன்னியமாய், மூன்று அவத்தைகளுக்கும் சாட்சியாய், பஞ்ச கோசத்திற்கு அப்பாற்பட்டதாய், அகம் பதத்தின் லட்சியார்த்தமாய் உள்ள நீயே துவம்பத லட்சியார்த்தமாம். எக்காலத்தும் பந்தமற்ற பிரம்மமே தத் பதத்திற்கு இலட்சியார்த்தமாம். தத்துவ ஞானத்தினால் நாசமாகும் சீவன் ஈசுவரன் இவர்களே முறையே துவம்பத தத் பதங்களின் வாச்சியார்த்தம் ஆவர். சீவனும் ஈசுவரனும் எப்போதும் பேதம் உடையவராய் இருத்தலால் அவர்களுக்கு ஐக்கியம் ஒரு போதும் சித்திக்காது.

**77. பேதம் ஆ னதுவும் கேளாய் பெயராலும் இடங்க ளாலும்**
**ஓதுஅரும் உபாதி யாலும் உடலாலும் உணர்வி னாலும்**
**பாதலம் விசும்பு போலப் பலதூரம் அகன்று நிற்பர்**
**ஆதலால் இவர்க்குஎந் நாளும் ஐக்கியம்என் பதுகூ டாதே**

சீவ ஈசுவரனுக்கு எக்காரணத்தால் பேதம் உண்டாயிற்று என்பதைக் கேட்பாயாக. சீவன் ஈசுவரன் என்னும் பெயராலும், பிண்டம் அண்டம் என்னும் இடத்தாலும், சொல்லுதற்கரிய காரிய காரணவடிவ உபாதியாலும், வியட்டி சமட்டிஎன்னும் சரீர அபிமானத்தாலும், கிஞ்சிஞ்ஞன் சர்வஞ்ஞன் என்னும் உணர்வினாலும் சீவ ஈசுவரர்களுக்கு பேதம் உண்டாயிற்று. அதனால் அவர்கள் பாதாளமும், விண்ணுலகமும் போல வெகுதூரம் வேறுபட்டு இருக்கின்றனர். இங்ஙனம் வேறுபட்டு இருப்பதால் இவர்களுக்கு எக்காலத்திலும் ஐக்கியம் என்பது சித்தியாது.

**78. வடநூல்வல் லவர்கள் சொல்லும் வாசகப் பொருள்சே ராமல்**
**இடர்ஆகில் பொருள்ஆம் வண்ணம் இலக்கணை உரையால் கொள்வார்**
**திடமான அதுவும் மூன்றாச் செப்புவார் விட்டது என்றும்**
**விடல்இலாதது என்றும் விட்டு விடாதது என்றும்பே ராமே.**

வடமொழிப் புலவர்கள், சாத்திரங்கள் சொல்லும் வாக்கியார்த்தங்கள் பொருந்தாது விரோதப்படுமாயின், அவை விரோதமின்றி அர்த்தமாகும்படி இலட்சணா விருத்தியினால் பொருள் கொள்கின்றனர். திடமான அந்த லட்சணைகளும் மூன்று விதமாய் சொல்வார்கள். அவை விட்ட லட்சணை என்றும், விடாத லட்சணை என்றும், விட்டுவிடாத லட்சணை என்றும் பெயர் பெறுவனவாம்.

**79. கங்கையில் கோஷம் என்றும் கருப்புச்சேப்பு ஓடுது என்றும்**
**தங்கிய சோயம் தேவ தத்தன் என்றும்சொல் வார்கள்**

**இங்குஉதா ரணங்கள் ஆக்கி இந்தமூன்று உரைக ளாலே**
**துங்கநூல் விரோத மான சொல்எலாம் பொருளாம் தானே.**

கங்கையில் கிராமம் இருக்கிறது என்பது விட்ட லட்சணைக்கும், கறுப்பு நிற்கச் சிவப்பு ஒடுகின்றது என்பது விடாத லட்சணைக்கும் அந்த இந்த தேவதத்தன் என்பது விட்டுவிடாத லட்சணைக்கும் உதாரணங்களாம். இம்மூவகை இலட்சணா வாக்கியங்களால் பெருமை உடைய சாத்திரங்களில் விரோதம் உடைய வாக்கியங்கள் எல்லாம் விரோதமின்றித் தாமே பொருள்படும்.

*விட்ட லட்சணை: வாக்கியார்த்தப் பொருளை அடியோடு விட்டுவிட்டு வாக்கியார்த்தத்தின் சம்பந்தமாகிய வேறு பொருளை உணர்த்துவது விட்ட லட்சணையாம். இங்கு கங்கை என்ற பதத்திற்கு வாக்கியார்த்தம் பிரவாகம். (வெள்ளம்). ஓடும் ஆற்று வெள்ளத்தில் கிராமம் எவ்வாறு இருக்கும்? ஆகையால் அந்தப் பிரவாகம் என்ற வாக்கியார்த்தத்தை அடியோடு விட்டு, வெள்ளத்தோடு சம்பந்தப்பட்டிருக்கும் கரையைப் பொருளாகக் கொள்ள வேண்டும். இவ்வாறு பொருள் கொள்வதே விட்ட லட்சணையாம்.*

*விடாத லட்சணை: வாக்கியார்த்தத்தை விடாமலே அதனோடு சம்பந்தப் பட்டிருக்கும் பொருளின் அர்த்தத்தை கிரகிப்பது விடாத இலட்சணையாம் கறுப்பு நிற்கச் சிவப்பு ஒடுகின்றது என்று சொல்லும் போது கறுப்பு சிகப்பு என்னும் பதங்கள் தனது வாக்கியார்த்தமாகிய கறுப்பு சிவப்பு நிறங்களை விடாமலே அந்த நிறங்களை உடைய பசுக்கள் என்று பொருள் கொள்வதே விடாத இலட்சணையாம். இங்கு வாக்கியார்த்தத்தை விடாது இருந்தால்தான் கறுப்புப்பசு நிற்க சிவப்புப்பசு ஓடுகிறது என்று பொருள் விளங்கும்.*

*விட்டுவிடாத லட்சணை: வாக்கியார்த்தத்தில் அர்த்தம் செய்து கொள்வதற்கு விரோதமாகத் தோன்றுகிற பாகத்தை விட்டுவிட்டு, விரோதமில்லாத மற்ற பாகத்தைப் பொருளாகக் கொள்வது விட்டுவிடாத லட்சணையாம். இதற்கு உதாரணம் அடுத்த செய்யுளில் கூறுகின்றார்.*

**80. பன்னிய ஸோயம் என்னும் பதங்களின் வாச்சி யார்த்தம்**
**அன்னிய தேசம் காலம் அவன்இவன் என்ப எல்லாம்**
**சொன்னஇவ் விரோதம் விட்டுத் தொடர்இலக் கியம்வி டாமல்**
**உன்னிடில் தேவ தத்தன் ஒருவனை வெளியாக் காட்டும்.**

முன் சொல்லிய அந்த இந்த தேவதத்தன் என்னும் வாக்கியத்துள் அந்த இந்த என்னும் பதங்களின் வாக்கியார்த்தம் தூர தேசம் சமீப தேசம், இறந்தகாலம் நிகழ்காலம், அந்தத் தேவதத்தன் இந்தத் தேவதத்தன் என்பனவாம். இவை ஒன்றற்கொன்று விரோதம் உடையனவாய் இருத்தலால், இவ்விரோதமான வாக்கியார்த்தங்களை எல்லாம் விட்டு அவற்றை அனுசரித்து உள்ள இலட்சியார்த்தம் என்னும் சரீர மாத்திரத்தை விடாது சிந்தித்துப் பார்த்தால், அவ்வாக்கியமானது விரோதமின்றித் தேவதத்தன் என்னும் ஒரு புடனைப் பிரத்தியட்சமாய்க் காட்டும்.

*(அந்த இந்த தேவதத்தன்! அந்த தேவதத்தனே இந்த தேவதத்தன், என்பது இதன் பொருள். 1995வது வருடம் காசியில் கார் ஓட்டிக் கொண்டிருந்த தேவதத்தன் என்பவனை ஒருவன் கண்டான். பிறகு 2004 வது வருடம் இரமேஸ்வரத்தில் அதே தேவதத்தனை சந்நியாசியாக மீண்டும் கண்டான். அப்போது அவன், அந்த தேவதத்தனே இந்த தேவதத்தன் என்றான். இதில் அந்த என்பது 1995ம் வருடத்தையும் காசியையும், கார் ஓட்டும் தொழிலையும் குறிக்கிறது. இந்த என்பது 2004-ம் வருடத்தையும், இராமேஸ்வரத்தையும், சந்நியாசியையும் குறிக்கிறது. இப்போது முன்குறித்த காலம், இடம், தொழில் முதலியவையும் இப்போது குறிக்கும் காலம், இடம் முதலியவையும் ஒன்றற்கொன்று விரோதமாக இருப்பதால் இந்த வாக்கியார்த்தங்களை விட்டுவிட்டு, அவைகளை அனுசரித்துள்ள லட்சியார்த்தமான தேவதத்தனை மட்டும் விடாமல் "அந்த தேவதத்தனே இவன்" என்று பொருள் கொள்கிறோம். இதுவே விட்டுவிடாத இலட்சணையாம். இதற்கே பாகத்தியாக இலட்சணை என்றும் பெயர்.)*

**81. தத்துவம் என்னும்ப தங்கள் பிரமம் ஆய்ச் சாட்சி ஆன**
**வத்துவை விடாமல் பேத வாச்சியார்த் தத்தை விட்டு**
**நித்தமும் அதுநீ யாகும் நீஅது ஆகும் என்னும்**
**அர்த்தமும் அகண்டம் என்றே அசிபத ஐக்கியம் காட்டும்.**

தத்துவமசி மகாவாக்கியத்தில் தத் துவம் என்னும் இவ்விரு பதங்களும் பிரம்மமாயும் சாட்சியாயும் உள்ள சுயம்பிரகாசமான லட்சியார்த்தத்தை விடாமல், சீவன் ஈசுவரன் என்னும் பேத தர்மங்களை உடைய வாக்கியார்த்தத்தை விட்டுவிட உணர்த்தும். எப்போதும் பிரம்மமே நீயாகும் நீயே பிரம்மமாகும் என்னும் அசி பதமும் பிரம்மம் ஏகமே என்று ஐக்கியத்தை விளக்கும்.

**82. கடல்நீரில் மேக நீரில் கண்டவான் இரண்டும் பொய்யே**
**குடவானும் பெரிய வானும் கூடிஒன்று ஆம்எப் போதும்**
**இடமான பிரமம் சாட்சி இரண்டும் எப்போதும் ஏகம்**
**திடமாகச் சுவானு பூதிச் சிவோகம்என்று இருந்தி டாயே.**

கடசலத்தில் தோன்றும் பிரதிபிம்ப ஆகாசமும், மேகசலத்தில் பிரதிபிம்பித்துத் தோன்றும் ஆகாசமும் மகா ஆகாசமும் எப்போதும் பேதமின்றி ஒன்றே ஆகும். அதுபோல் சர்வ வியாபகமான பிரம்மமும் சாட்சியும் ஆகிய இரண்டும் எப்போதும் ஒன்றே ஆகும். இந்த ஐக்கிய அனுபவம் திடமாகும் பொருட்டு பிரம்மமே நான், நானே பிரம்மம் என்று அப்பியாசம் செய்து பிரம்ம அனுபவத்தில் நிலைபெற்று இருப்பாய்.

**83. தஞ்சமாம் குருவும் சொன்ன தத்துவ வழிதப் பாமல்**
**பஞ்சகோ சமும்கடந்து பாழையும் தள்ளி உள்ளில்**

**கொஞ்சமாம் இருப்பும் விட்டுக் கூடஸ்தன் பிரமம் என்னும்**
**நெஞ்சமும் நழுவி ஒன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான்.**

தனக்கு உறுதுணையாய் உள்ள ஆசான் அருளிய வண்ணம் சீடன் தத்துவ நெறி தவறாது பஞ்சகோசங்களையும் தான் அல்ல என்று நீக்கி, அதற்குமேல் காணப் படுகின்ற சூனியமான பாழையும் தான் அல்ல என்று ஒழித்து, பின்பு அகத்தில் சாட்சியே தான் என்று அறிந்த நிலைமையும் விட்டு, அப்பால் நான் பிரம்மாய் இருக்கிறேன் என்னும் அகண்டாகார விருத்தியும் நீங்கப் பெற்று, ஏகமான பரிபூரணமான பிரம்ம அனுபவ நிலையை அடைந்தான்.

**84.** **அனுபவஆ னந்த வெள்ளத்து அழுந்தியே அகண்டம் ஆகித்**
**தனுகர ணங்கள் ஆதி சகலமும் இறந்து சித்தாய்**
**மனதுபூ ரணமாய்த் தேக ம்ஆனசற் குருவும் கான**
**நனவினில் சுழுத்தி ஆகி நன்மகன் சுபாவம் ஆனான்.**

அனுபவமாய் உள்ள தடையற்ற ஆனந்தக் கடலில் மூழ்கி அகண்டமாய் சரீரம் இந்திரியங்கள் முதலிய எல்லாம் நாசமாகப் பெற்றான். அறிவே வடிவமாகி மனம் பரிபூரண நிலை அடைந்து திருவருளே திருமேனியாக உடைய சற்குருவும் காணுமாறு, நனவில் சுழுத்தியாகிய சமாதியை அடைந்து நல்ல சீடன் ஆனவன் தனது சுபாவ வடிவம் ஆனான்.

**85.** **அளிமகன் நெடும்போது இவ்வாறு ஆனபின் மனது மெள்ள**
**வெளியில் வந்திட உணர்ந்தான் விமலதே சிகனைக் கண்டான்**
**துளிவிழி சொரியப் பாதம் தொழுதுவீழ்ந்து எழுந்து சூழ்ந்தான்**
**குளிர்முகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான்.**

அன்புள்ள சீடன் வெகுநேரம் சமாதியில் இருந்து அதன்பின்னே மனம் பிராரத்த கன்மத்தால் மெல்ல மெல்ல சமாதியினின்றும் பகிர்முகம் ஆனபின் தூய்மையான குருவைக் கண்டான். பக்தி மேலிட்டுக் கண்களில் ஆனந்தக் கண்ணீர் வெளிப்பட குருவின் திருவடியில் விழுந்து வணங்கினான். பின் அவரை வலம் வந்து கைகூப்பி நின்று குளிர்ச்சி பொருந்திய முகமுடைய குருகேட்கச் சொல்லத் தொடங்கினான்.

**86.** **ஐயனே எனதுஉள் ளேநின்று அனந்தசன் மங்கள் ஆண்ட**
**மெய்யனே உபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி**
**உய்யவே முத்தி நல்கும் உதவிக்கோர் உதவி நாயேன்**
**செய்யுமாறு ஒன்றும் காணேன் திருவடி போற்றி போற்றி.**

ஐயனே! எனது சித்தத்தின் கண் அளவிறந்த பிறவிகளில் தொடர்ந்து நின்று என் மனதின்கண் இருந்த மல விட்சேப தோஷங்களை ஒழித்து என்னை ஆட்கொண்டு அருளிய ஈசனே! தத்துவ ஞானத்தை உபதேசித்து அருளும் பொருட்டு அருளே வடிவமாய் எழுந்தருளிய குருவே தங்களை வணங்குகின்றேன். அடியேன் கடைத்தேற எனக்கு மோட்சத்தை தந்தருளிய உதவிக்கு நாயினும் கீழ்ப்பட்டவன் ஆன நான் செய்யும் கைம்மாறு யாதோன்றும் அறியேன். உங்களது திருவடிக்கு நமஸ்காரம் நமஸ்காரம் என்று கூறினான்.

**87. சிட்டன்இவ் வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்**
**கிட்டவா எனஇருத்திக் கிருபையோடு அருளிச் செய்வார்**
**துட்டமாம் தடைகள் மூன்றும் தொடராமல் சொரூப ஞான**
**நிட்டனாய் இருக்கின் ஈதே நீசெயும் உதவி யாமே.**

இவ்வாறு கூறிய சீடனைச் சற்குருவானவர் மகிழ்ந்து அவனைக் கருணையுடன் பார்த்து, இங்கேவா என்று அழைத்து அருகில் அமரச்செய்து கூறலாயினார். சீவ பிரம்ம ஐக்கிய ஞானத்தைக் கெடுக்கவல்ல தீமையான தடைகள் மூன்றும், உன்னைத் தொடராமல் சொரூப ஞான நிட்டையில் இருந்தாய் ஆனால் இதுவே நீ எனக்குச் செய்யும் உதவியாகும் என்றார்.

**88. நீநான்என்று இரண்டுஇ லாமல் நிறைந்தபூ ரணமாய் எங்கும்**
**நான்ஆகத் தெளிந்த ஞானம் நழுவுமோ குருவே என்றான்**
**தான்ஆகும் பிரம ரூபம் சற்குரு நூலால் தோன்றும்**
**ஆனாலும் தடைகள் உண்டேல் அனுபவம் உறைத்தி டாதே.**

பரமகுருவே! தத்பத லட்சியார்த்தமான பிரம்மம் துவம்பத லட்சியார்த்தமான கூடத்தன் என்னும் இரண்டுவித கற்பனையும் இல்லாமல் நிறைந்த பரிபூரணமாய் எவ்விடத்தும் அறிவே வடிவமாக யான் உள்ளேன் என்று தெளிந்து அறிந்த ஞானமும் நீங்கிப் போமோ? என்று சீடன் வினவினான். சுபாவமாகத் தன்மயமாய் உள்ள பிரம்ம அனுபவமானது சற்குருவினுடைய உபதேசத்தாலும் வேதாந்த சாத்திர விசாரத்தாலும் தோன்றும். அவ்வாறு தோன்றினாலும் தடைகள் உண்டானால் அந்த அனுபவம் திடப்படாது.

**89. தடைஎவை எனில்அஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்**
**படர்செயும் இந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே**

**உடன்உடன் வரும்வந் தக்கால் உயர்ஞானம் கெடும்இ வற்றைத்**
**திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே.**

அத்தடைகள் எவை என்றால் அவை அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் என்பனவாம். துன்பத்தைச் செய்வதையே இயல்பாக உள்ள இம்மூன்று தடைகளும் அளவிறந்த பிறவிகளில் பழகி வந்த பழக்கத்தினால் அடிக்கடி உண்டாகின்றன. அவை உண்டாவதினால் சீவ பிரம்ம ஐக்கிய ஞானம் திடப்படாமல் கெட்டுப் போகும். அதலால் அஞ்ஞானத்தைச் சிரவணத்தாலும், சந்தேகத்தை மனனத்தினாலும், விபரீதத்தை நிதித்தியாசனத்தினாலும் உறுதியோடு முயற்சி செய்து கெடுப்பாயாக.

**90. அக்கினி கட்டுப் பட்டால் அற்பமும் சுடமாட் டாது**
**மக்கின ஞானத் தாலே வந்தபந் தமும்வே வாது**
**சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே**
**விக்கின மடம்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே.**

மந்திரத்தினால் அக்கினி கட்டுப்பட்ட விடத்து அது சற்றும் சுடமாட்டாது. அதுபோல அஞ்ஞான, சந்தேக, விபரீதங்களால் தடைபட்ட தத்துவ ஞானத்தால், பலபிறவிகளில் தொடர்ந்து வந்துள்ள, நான் கர்த்தா போக்தா என்னும் பந்தமும் நாசமாகாது. ஆதலால் நெடுங்காலம் நிரந்தரம் நேசத்தோடும் அப்பியாசம் செய்து சிரவண, மனன, நிதித்தியா சனங்களாலே முறையே ஞானத்திற்குத் தடையான அஞ்ஞான, சந்தேக, விபரீதங்களை நீக்குவாய்.

**91. பிரமபா வனையை மூடிப் பேதம் காட்டுவதுஅஞ் ஞானம்**
**குரவன்வாக் கியம்நம் பாமல் குழம்புவ தாம்சந் தேகம்**
**திரம்அறு சகம்மெய் என்றும் தேகம்நான் என்றும் உள்ளே**
**விரவிய மோகந் தானே விபரீதம் என்பர் மேலோர்.**

அகம் பிரம்மம் என்னும் பாவனையை மறைத்து நான் பிரம்மம் அல்லேன் என்னும் பாவனையை உண்டு பண்ணுவது அஞ்ஞானமாம். நீயே பிரம்மம் என்று அருளிய சற்குருவின் வாக்கியத்தை நம்பாமல் நான் பிரம்மமோ அல்லவோ என்று மனம் கலங்குதல் சந்தேகமாம். நிலையில்லாத உலகத்தை சத்தியம் என்றும், அநாத்மாவாகிய சரீரத்தை ஆன்மா என்றும் கருதும் மோகமே விபரீதம் என்றும் பெரியோர் சொல்லுவர்.

**92. தத்துவ அனுபோ கம்தான் சாதித்தல் கேட்டல் என்பார்**
**ஒத்துள பொருள்ஊ கத்தால் உசாவல்சிந் தித்தல் என்பார்**

**சித்தம்ஏ காந்தம் ஆன தெரிசனம் தெளிதல் என்பார்**
**நித்தம்இப் படிசெய் தக்கால் நிர்வாணம் பெறுவாய் நீயே.**

மகாவாக்கிய உபதேசத்தை குருமுகமாகப் பெறுதல் சிரவணமாம். சிரவணத்தால் அறிந்த சீவ பிரம்ம ஐக்கியத்தை உத்தியினால் ஆராய்தல் மனனமாம். நான் பிரம்மமாய் இருக்கின்றேன் என்னும் விருத்தியும் நழுவி மனம் பிரம்மானந்ததில் மூழ்கியிருத்தல் நிதித்தியாசனமாம். நாள்தோறும் இவ்வாறு அஞ்ஞானம் முதலிய தடைகளை நீக்குவதற்குச் சிரவணம் முதலிய மூன்றையும் அப்பியாசம் செய்தவதனால் தடைகளின்றி சுபாவமான பிரம்மானுபவம் விளங்கும்.

**93. எத்தனை நாள்ஞா தாவும் ஞானமும் இருக்கும் உன்பால்**
**அத்தனை நாளும் வேண்டும் அப்பால்ஓர் செயலும் வேண்டா**
**நித்தமும் வெளிபோல் பற்றா ஞேயமாத் திரமாய்ச் சீவன்**
**முத்தர்ஆ னவர்வி தேக முத்திபெற்று இருப்பார் என்றும்.**

எதுவரையில் காண்பான், காணப்படும் பொருள், காட்சி என்னும் திரிபுடி உன்னிடம் இருக்குமோ அது வரையில்தான் சிரவணாதிகள் செய்தல் வேண்டும். காண்பான், காட்சி என்னும் விகற்பங்கள் அற்ற பின்னர் சிரவணாதி சாதனங்கள் ஒன்றும் வேண்டுவதில்லை. ஆகாயம் போல் ஒன்றோடும் பற்றாது சீவபாவனை முதலியன இறந்து சின் மாத்திரமாய் இருத்தலே சீவன் முத்தியாகும். அவர் பிராரத்த கன்மம் நாசமானபின் எப்போதும் விதேகமுத்தி பெற்று இருப்பார்.

**94. ஞானம்ஆர் சீவன் முத்தர் நால்வகை ஆவர் கேளாய்**
**வான்நிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்டன்**
**ஆனவர் நாமம் ஆகும் அவர்களில் பிரம வித்தின்**
**தானமும் மற்றை மூவர் தாரதம் மியமும் சொல்வேன்.**

ஆத்மஞானம் நிறைந்த சீவன் முத்தர்கள் நான்கு வகையினராக இருப்பார்கள், அவற்றை சொல்லக் கேட்பாயாக. ஆகாயத்தைப் போன்று எக்கருமத்திலும் பற்றாத பிரமவித்து, வரன், வரியான், வரிட்டன் என்பன அவர்களுடைய பெயர்களாம். அவர்களில் பிரம்மவித்தின் அனுபவமும், ஏனைய மூவரின் தாரதம்மியத்தையும் இனிக் கூறு கின்றேன்.

**95. தீரராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியும் முன்னம்**
**வாரமாய் இருந்த தங்கள் வருணம்ஆச் சிரமம் சொன்ன**

**பாரகா ரியம்ஆ னாலும் பலர்க்குஉப காரம் ஆக**
**நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர்.**

மனஉறுதி உடையவராய் சிரவணாதிகளால் தெளிந்தோர் சீவன் முத்தர் ஆவர். அங்ஙனம் தெளிவு அடைவதற்கு தத்தமது வருண ஆசிரம தருமத்திற்குரிய சற்கருமங்கள் சிரமமாக இருந்த போதிலும் பல பேர்க்கு உபகாரமாக செவ்வனே செய்வர். அங்ஙனம் செய்தாலும், சீவித்திருக்கும் போதே முத்தராய் உள்ள இவர் தான் பிரம்மமே என்னும் அனுபவத்தை விட்டு நீங்காது இருப்பர்.

**96. காமம்ஆ திகள்வந் தாலும் கணத்தில்போம் மனத்தில் பற்றார்**
**தாமரை இலைத்தண் ணீர்போல் சகத்தொடும் கூடி வாழ்வார்**
**பாமரர் எனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்**
**ஊமரும் ஆவார் உள்ளத்து உவகையாம் சீவன் முத்தர்.**

பிரம்மவித்து ஆனவர் மனதில் காமக் குரோதாதிகள் யாதோர் காராணத்தில் வந்தாலும் அவை ஒரு கணப்பொழுதிலே நீங்கிவிடும். அவைகளின் வாசனைகளும் மனதில் பொருந்தப் பெறார். தாமரை இலையில் நீர் நின்றாலும் அதில் பற்றாது இருப்பது போல உலக விவகாரத்தோடு கூடியிருந்தாலும் அதில் பற்றின்றி வாழ்வார். மூடரைப் போலத் தம்மைப் பிறர்க்குக் காட்டிக்கொண்டு திரிவார். தமக்குள்ள பிரம்ம ஞானத்தினை பிறர்க்குக் காட்டாது விடினும் விடுவார். இவ்வாறு மனதில் தடையற்ற ஆனந்தத்தை உடைய சீவன் முத்தர் பல திறத்தராய் இருப்பர்.

**97. பேதகர் மத்தால் வந்த பிராரத்தம் நாநா வாகும்**
**ஆதலால் விவகா ரங்கள் அவர்அவர்க்கு ஆவ ஆகும்**
**மாதவம் செயினும் செய்வார் வாணிபம் செயினும் செய்வார்**
**பூதலம் புரப்பார் ஐயம்புகுந்து உண்பார் சீவன் முத்தர்.**

சீவன் முத்தர்களுக்கு சஞ்சித கன்மத்தால் உண்டான பிராரத்த கன்மம் பல விதமாம். அதனால் பிராரத்த வினைக்கு தக்கவாறு விவகாரங்களும் அவர்க்கு பல விதமாய் வந்து பொருந்தும். ஒருவருக்கு இருப்பது போல் மற்றெருவர்க்கு இருக்காது. அதனால் ஒருவர் மகாதவத்தைச் செய்ய விருப்பமுற்றுச் செய்வார். ஒருவர் வியாபரம் செய்ய விருப்பமுற்றுச் செய்வார். பூமியை ஆள வேண்டினும் ஆளுவார். சிலர் பிச்சையெடுத்து உண்பார். (இவ்வாறு சீவன் முத்தர்கள் பல விதமான விவகாரங்களை உடையவர்களாய் இருந்தாலும் அவர்கள் அனைவருக்கும் ஞானமும் அதன் பலமான முத்தியும் சமமே ஆகும்.)

**98. சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்**
**நின்றது புசிப்பார் வெய்யில் நிலவாய்விண் விழுது வீழ்ந்து**
**பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா ஒன்றும் பாரார்**
**நன்றுதீது என்னார் சாட்சி நடுவான சீவன் முத்தர்.**

சீவன் முத்தர்கள் தேகாதிப் பிரபஞ்சம் பொய் என்ற நிச்சயித்தினால் சென்ற காலத்தில் நடந்து போன காரியங்களைப் பற்றி நினைக்கமாட்டார். எதிர்காலத்தில் கிடைக்கக் கூடியப் புகழ், பொருள் முதலியவற்றைப் பற்றியும் நினைக்கமாட்டார். நிகழ்காலத்தில் பிராரத்த கன்மத்தால் வந்து கிட்டிய உண்வு, உடை முதலியவற்றை அனுபவிப்பார். சூரிய கிரணமானது சந்திர கிரணம் போன்று குளிர்ச்சி உடையதாகி ஆலமரத்தின் விழுது போல ஆகாசத்தில் இருந்து விழுதாக இறங்கினாலும், மரித்துப் போன உடல் மீண்டும் உயிர் பெற்று எழுந்தாலும் அவற்றுள் ஒன்றையும் வியப்பாக நோக்கார். இது நன்று என்றும் மற்றொன்று தீது என்றும் கூறார். இவ்வாறு இருத்தலே சாட்சி மாத்திரமாய் நடு நிலையில் இருக்கும் சீவன் முத்தரது செயலாம்.

**99. பின்னைமூ வரில்இ ரண்டு பேர்களும் சமாதி யோகம்**
**தன்னைஉற்று இருப்பார் தேக சஞ்சார நிமித்தம் தானாய்**
**உன்னுவோன் வரன்வேற் றோரால் உணர்பவன் வரியான் ஆகும்**
**அந்நியர் தம்மால் தன்னால் அறியாதோன் வரிட்டன் ஆகும்.**

வரன் வரியான் வரிட்டன் எனப்படும் ஏனைய மூவருள், வரன் வரியான் என்னும் இருவரும் சமாதி யோகத்தைப் பொருந்தி இருப்பார்கள். வரிட்டன் என்பவன் சமாதியில் அதீதமாய் இருப்பான். சமாதிகலைந்து தேகம் நிலைத்தல் பொருட்டு தன் முயற்சியால் உணவு முதலியவைகளைத் தேடுபவன் வரன் எனப்படுவான். சீடர், பத்தர் முதலியோர் சமாதியின் நின்றும் விழிக்கச் செய்து உணவு கொடுத்து உண்பவன் வரியான் எனப்படுவான். அந்நியராலும் தன்னாலும் உணவைப் பற்றி அறியாதோன் வரிட்டன் எனப்படுவான்.

**100. அரிதுஆகும் இவர்கள் இவ்வாறு அநேகர் ஆனாலும் முத்தி**
**சரியாகும் பாடு பட்ட சமாதிக்குப் பலன்ஏது என்றால்**
**பெரிதான திருஷ்ட துக்கம் பிரமவித்து அனுப விப்பன்**
**வரியானும் வரனும் மற்றை வரிட்டனும் சுகமாய் வாழ்வார்.**

கிடைத்தற்கு அரிய இச்சீவன் முத்தர்கள் இங்ஙனம் பிராரத்த கன்மத்தால் பலவித விவகாரங்களை உடையராய் இருப்பினும், முத்திபேற்றில் ஏற்றத் தாழ்வின்றி சமமாய்

இருப்பார். அவர்கள் வருத்தமடைந்து அப்பியாசம் செய்த சமாதிக்கு பலன் யாதெனில், பிரம்மவித்தானவன் உலக உபகார விவகாரத்தில் ஈடுபட்டு இருப்பதால், அதனால் நேரிடும் துக்கங்களை அனுபவிப்பான். ஏனைய வரன், வரியான், வரிட்டன் என்னும் மூவரும் உலக விவகாரங்கள் இன்மையால் பரிபூரண முத்தி சுகத்தினை உடையராய் வாழ்வார்கள்.

**101.** **பிரம ஞானிகளும் கர்மப் பேதையர் போலே வாழ்ந்தால்**
**திரம்உறும் அஞ்ஞா னம்போய்ச் செனியாத வழிஏது என்றால்**
**பரவும்ஆ காசம் ஒன்றில் பற்றாது மற்றை நாலும்**
**விரவின தோடும் கூடும் விதம்இரு வோரும் ஆவார்.**

பிரம்மவித்துக்களும் பிரதிபலனை விரும்பி கர்மங்களைச் செய்யும் அறிவிலி களைப் போல உலக விவகாரங்களை உடையவராய் வாழ்ந்தால், வலிமையான அஞ்ஞானம் நீங்கி, மீண்டும் பிறவாது இருப்புதற்கு காரணம் யாது என்றால்? வியாபித்துள்ள ஆகாசமானது மற்ற நான்கு பூதங்களோடு ஒன்றிலும் பற்றாமல் நிற்க, ஏனைய வாயு முதலிய நான்கு பூதங்களும் ஒன்றுடன் ஒன்று கலந்து நிற்கும். அதுபோல ஞானிகள் கர்மங்களின் பலனில் பற்று இல்லாமையால் அவர்கள் மீண்டும் பிறப்பதில்லை. அஞ்ஞானிகள் தாம் செய்யும் கர்மங்களின் பலனில் பற்று உடையவர்கள். ஆதலால் அவர்களுக்குப் பிறவித்துன்பம் வரும்.

**102.** **சீவன்முத் தரைச் சேவித்தோர் சிவன்அயன் நெடுமால் ஆன**
**மூவரும் மகிழ நோன்பு முழுவதும் செய்து சன்ம**
**பாவனம் ஆனார் என்று பழமறை முழங்கும் இப்பால்**
**மேவரும் சீவன் முத்தர் விதேகமுத் தியும்நீ கேளாய்.**

சீவன் முத்தரை வணங்கியவர்கள் அரன், அயன் அரி ஆகிய மூவரும் மகிழ, தவங்கள் அனைத்தையும் குறைவின்றிச் செய்து பிறவியில் தூய்மை அடைந்தார்கள் என்று பழைமை வாய்ந்த வேதங்கள் கூறுகின்றன. இனி கிடைத்ததற்கு அரிய சீவன் முத்தர் அடைகின்ற விதேக முத்தி பற்றியும் நீ கேட்பாயாக.

**103.** **பஞ்சினை ஊழித் தீப்போல் பலசன்ம விவித வித்தாம்**
**சஞ்சிதம் எல்லாம் ஞானத் தழல்சுட்டு வெண்ணீறு ஆக்கும்**
**கிஞ்சித் ஆகாமி யம்தான் கிட்டாமல் விட்டுப் போகும்**
**விஞ்சின பிராரத் தத்தின் வினைஅனு பவித்துத் தீரும்.**

பஞ்சினை பிரளயகால அக்கினி மிக எளிதாக எரிப்பது போல, அளவற்ற பிறவிகளுக்கு விதைகளாக விளங்கும் சஞ்சித வினைகள் அனைத்தையும் ஞான அக்கினி மிக எளிதாக எரித்து சாம்பலாக்கும். கர்த்தாத் தன்மை இன்மையால் ஆகாமிய வினை சிறிதும் பற்றாமல் நீங்கும். மிஞ்சி நின்ற பிராரத்த வினை யானது அனுபவித்துத் தீரும்.

104. பொறுமையால் பிராரத் தத்தைப் புசிக்கும்நாள் செய்யும் கர்மம்
மறுமையில் தொடர்ந்தி டாமல் மாண்டுபோம் வழிஏது என்றால்
சிறியவர் இகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வார்
அறிவுளோர் அறிந்து பூசித்து அறம்எலாம் கைக்கொள் வாரே.

சீவன் முத்தர்கள் பொறுமையோடு பிராரத்த கன்மத்தின் பயனை அனுபவிக்கும் போது, நிகழ்காலத்தில் செய்கின்ற கன்மத்தின் பயன் மறுபிறவிக்கு ஏதுவாகாமல் ஒழிந்துபோகும் வழி யாது என்றால்? ஞானிகளை நிந்தித்து, அவர்கள் செய்த தீவினையை அறிவில்லாதோர் ஏற்றுக் கொள்வர். அறிவு உடையோர் ஞானி பிரம்ம சொரூபமே என்று அறிந்து பூசித்து அவர்கள் செய்த நல் வினையை எல்லாம் ஏற்றுக் கொள்வர்.

105. அரியமெய்ஞ் ஞானத் தீயால் அவித்தையாம் உடல்நீறு ஆகும்
பெரியதூ லமும்கா லத்தால் பிணமாகி விழும்அந் நேரம்
உரியசூக் குமசரீரம் உலைஇரும்பு உண்ட நீர்போல்
துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தில் இறந்து போமே.

அரிதான தத்தவ ஞானம் என்னும் தீயால் அவித்தை என்னும் காரண சரீரம் கெடுகின்றது. பருத்த தூல சரீரமும் பிராரத்தகன்ம அனுபவ முடிவில் பிணம் ஆகின்றது. அப்போது நெருப்பில் காய்ந்த இரும்புண்ட நீர்போல் சூட்சும சரீரம், துரியமாயும் வியாபகமாயும் உள்ள பிரம்மத்தில் லயமாகின்றது. இவ்வாறு மூன்றுசரீரமும் ஒழிதலால், சீவன் முத்தனுக்கு மீண்டும் பிறவி உண்டாவதில்லை.

106. கடன்எனும் உபாதி போனால் ககனம்ஒன்று ஆனால் போல
உடல்எனும் உபாதி போன உத்தரம் சீவன் முத்தர்
அடிமுடி நடுவும் இன்றி அகம்புறம் இன்றி நின்ற
படிதிகழ் விதேக முத்திப் பதம் அடைந்து இருப்பர் என்றும்.

கடம் என்னும் உபாதி நீங்கினால் கடாகாசம் மகா ஆகாசத்தோடு ஒன்றானால் போல மூன்று சரீரமாகிய உபாதி நீங்கிய பின்னர் சீவன் முத்தர் பிரம்மமாய் இருக்கின்றதால் ஆதியும் அந்தமும் மத்தியும் இல்லாமல் உள்ளும் புறம்பும் இல்லாமல் எப்போதும் தான் இருந்தபடியே விளங்கும் விதேகமுத்திப் பதத்தை அடைந்திருப்பர்.

**107. சொல்லிய மகனே எங்கும் சூழ்வெளி இருக்க மண்ணைக்**
**கெல்லிய பின்பு தோன்றும் கிணற்றின்ஆ காசம் போலே**
**ஒல்லையாம் பிரம நூலால் உற்றது போலே தோன்றும்**
**எல்லையில் நாம்எப் போதும் ஏகம்என்று இருந்து வாழ்வாய்.**

ஆத்ம அனுபவத்தை சொல்லிய மகனே, எங்கும் நிறைந்துள்ள ஆகாசம் தான் இருந்தபடியே இருக்க, பூமியைத் தோண்டிய பின்னர் அக்கிணற்றில் தோன்றுகின்ற ஆகாசத்தைப் போல, சுபாவ சித்தமாய் இருக்கின்ற பிரம்மம், சாத்திர விசாரத்தாலும் குரு உபதேசத்தாலும் அடையப்பட்டதைப் போலவே தோன்றும். அப்படித் தோன்றினாலும் அது உண்மை இல்லாமையால், அளவு கடந்து வியாபகமான பிரம்மமாகிய நாம் எப்போதும், ஒன்றே என்று பிறழாது இருந்து வாழ்வாய்.

**108. கானல்நீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க னாஊர்**
**வானமை கயிற்றில் பாம்பு மலடிசேய் முயலின் கோடு**
**பீனமாம் தறிபு மானில் பிரபஞ்சம் எல்லாம் பொய்யே**
**ஞானமெய் மகனே உன்னை நம்ஆணை மறந்தி டாதே.**

கானலில் தோன்றும் நீரைப் போலவும், கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி போலவும், கந்தர்வர்களின் நகரம் போலவும், கனாவில் கண்ட ஊரைப் போலவும், வானத்தில் தோன்றும் நீல நிறம் போலவும், கயிற்றில் காணும் பாம்பின் பொய்த்தோற்றம் போலவும், மலடி பெற்ற மகன் போலவும், முயலின் கொம்பு போலவும், தூணில் தோன்றும் ஆடவன் போலவும் தோன்றுகின்ற உலகம் எல்லாம் பொய்யே. இந்த பிரம்மமே சத்தியமானது. மகனே, நம் மேல் ஆணை இத்தன்மையான உன்னை மறந்திடாதே.

**முதலாவது, தத்துவ விளக்கப் படலம் நிறைவுற்றது**

உ

சிவமயம்

## 2. சந்தேகம் தெளிதற் படலம்

1. நரர்குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம்
உரம்உறக் குத்திக் குத்தி உறைப்பிக்கும் உபாயம் போலே
பரமசிற் சொரூபம் தன்னில் பற்றிய மனோவி ருத்தி
திரநிலை பெறச்சந் தேகம் தெளிதலை மொழிகின் றேனே.

மனிதர் குழி தோண்டி, மெள்ள அதில் நிறுத்திய நீண்ட கம்பம் வலிவாய் நிற்கும் பொருட்டுக் குத்திக் குத்திக் கெட்டித்துப் பலப்படுத்தும் தந்திரத்தைப் போல, நான் பிரம்ம வடிவம் என்ற மனோவிருத்தி அந்தக்கரணத்தில் சலனமற்று நிற்கும் பொருட்டுச் சந்தேகம் தெளிவிக்கின்ற பகுதியை இப்போது சொல்லுகின்றேன்.

2. நற்கருத்து உடையோன் ஆகி ஞானவான் ஆகி நின்றோன்
*மர்க்கட நியாயம் போலே மகாபூத விகாரம் தொட்டு
நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தம் சொன்ன
சற்குரு வினைவி டாமல் சந்ததம் அனுச ரித்தான்.

சத்துவகுணம் மிக்க அந்தக்கரணத்தை உடையவனாய், அதனால் நான் பிரம்மம் என்னும் ஞானம் உடையவனாய், நின்ற சீடன் மர்க்கட நியாயம் போல, ஐந்து பெரும் பூதங்களின் காரியமான தூலதேகம் முதிற்கொண்டு விதேக முத்தி அடையும் மார்க்கம் வரை உபதேசித்து அருளிய சற்குருவை விடாமல் எப்பொழுதும் அனுசரித்து இருந்து வந்தான்.

3. சந்ததம் புருடன் தன்னைச் சாயைபோல் விடாமல் அன்பாம்
மைந்தனை நோக்கிச் சாட்சி மாத்திர மாய்நின் றாயோ

---

** மர்க்கட நியாயம் = குரங்கின் குட்டி தன் தாய்க் குரங்கு எங்கே தாவினும் தான் அதனை விடாது பற்றி இருத்தல்.*

**சிந்தையில் ஐயம் எல்லாம் தீர்ந்தவோ தெளிவின் உள்ளே**
**அந்தரம் கலந்தது உண்டோ அனுபவம் உரைசெய் வாயே.**

புருடனை எப்பொழுதும் விட்டு விலகாத நிழல் போல, கணப்பொழுதும் நீங்காமல், தன்னிடத்து அன்புடன் இருக்கும் சீடனை நோக்கி, ஞாதா ஞானங்கள் ஒழிந்து ஞேய வடிவமான் சாட்சி மாத்திரமாக நிற்கின்றாயோ, சிந்தையில் உண்டாகும் சந்தேகங்கள் அனைத்தும் நீங்கினவோ, உனது புத்தியின் இடத்தே பேதப் பிராந்தி வந்து கலந்ததோ? உனது அனுபவம் பற்றிக் கூறுக, என்றார்.

4. **எனஉரைத்து அருளும் ஆசான் இருபதம் வணங்கி எந்தாய்**
**சநநவன் காட்டில் மோகத் தமத்துஎழு *பேதப் பேய்கள்**
**உனதுஅருள் உதய வெற்பில் உபதேச அருக்கன் தோன்றி**
**மனவிழி தெரிய ஞான வான்கதிர் பரந்தால் உண்டோ.**

என்று வினவிய குருவின் இரண்டு பாதங்களையும் வணங்கி, எனது தந்தையே, சம்சாரமாகிய வலிய காட்டில், அஞ்ஞான இருளில் இருந்து எழுந்து நிற்கும் பேதத்தை உணர்த்தும் பேய்கள், உம்முடைய அருளாகிய உதயகிரியில் இருந்து பிரம்ம உபதேசமாகிய சூரியன் உதயமாகி அகக்கண் விளங்கும்படி, ஞானம் என்னும் பெருமை மிக்க கதிர்களைப் பரவச் செய்தமையால் அவை இல்லாது ஒழிந்தன.

5. **மந்திர மூர்த்தி தன்னால் மாற்றிய பேய்போ னாலும்**
**எந்திரம் எழுதிக் கட்டி இனிவரா வகைசெய் வார்போல்**
**முந்திஉன் உபதே சத்தால் மோகம்போ னாலும் ஐயா**
**புந்திநின்று உரைக்க இன்னம் புகலும்விண் ணப்பம் உண்டே.**

உலகில் மந்திர மூர்த்தியால் பேயானது உடலை விட்டு நீங்கினாலும், மந்திரம் எழுதிய தகட்டினைப் பேய் நீங்கிய அவ்வுடலில் கட்டி மீண்டும் அப்பேய் தொடராதபடி செய்வார் அது போல, முன்னரே உம்முடைய உபதேசத்தால் அஞ்ஞானம் நீங்கினதேனும் குருவே, என் புத்தியானது ஆத்ம அனுபவத்தில் நின்று அமிழ்ந்தும்படி மேலும் நான் சொல்லும் ஒரு விண்ணப்பம் உண்டு.

---

* *பேதம் ஐந்துவகை: அவை 1. சீவ ஈசுவரம் பேதம் 2. சீவர்களின் பரஸ்பர பேதம் 3. சீவ சடங்களின் பேதம் 4. ஈசுவர சடங்களின் பேதம் 5. சடங்களின் ஒன்றற்கு ஒன்றுள்ள பேதம் என்பவைகளாம்.*

**6. ஆகமப் பிரமா ணத்தால் அறிஎன்றும் வாக்குக்கு எட்டாது**
**ஏகமாம் பிரமம் என்றும் இதயத்தால் உணர்வாய் என்றும்**
**சோகம்ஆம் மனத்திற்கு எட்டாச் சுயஞ்சோதி என்றும் சொன்னீர்**
**மோகம்ஆம் இரண்டு சங்கை முளைத்தன பறித்தி டீரே.**

நீயே பிரம்மம் என்பதைச் சுருதி பிரமாணத்தால் நீ அறிந்துகொள் என்றும், ஒன்றே ஆன பிரம்மம் சுருதி வாக்கியத்திற்கும் எட்டாதது என்றும், உன் மனத்தினால் உன்னை உணர்வாய் என்றும், துன்பம் கொண்ட மனத்திற்கு எட்டாத சுயம்பிரகாச வடிவம் என்றும் நீங்கள் உபதேசித்து அருளினீர். இதனால் மயக்கம் தருகின்ற இருவிதமான சந்தேகங்கள் உண்டாகி உள்ளன. அவற்றை நீர் அகற்றி அருள்வீராக.

**7. மற்றைமுப் பிரமா ணத்தால் வத்துநின் ணயம்கூ டாதே**
**உற்றதுஓர் விடயம் பூதம் உபயம்அன்று ஆத லாலே**
**குற்றம்ஆம் குணவி சேடம் கூடாமல் இருக்கை யாலே**
**இற்றது வாக்குக்கு எட்டாது என்பதும் அறிவாய் நீயே.**

பிரத்தியட்சம், அனுமானம், உவமானம் என்னும் மூன்று பிரமாணங்களாலும் பிரம்மம் அறியப்படுவது அன்றாம். ஏனெனில் பிரம்மமானது சுரோத்திராதி இந்திரியங்களால் பிரத்தியட்சமாய் அறியப்படுகின்ற சப்தாதி விஷயங்களுள் ஒன்றன்று. அனுமானத்தால் அறியப்படுகின்ற பஞ்ச பூதங்களுள் ஒன்றறன்று. இந்த இரண்டும் அல்லாததலால் உவமானத்தாலும் அறியப்படுவது இவ்வாறு குற்றமாகிய குண விசேடங்களோடு சம்பந்தப்படாமல் இருப்பதால், இந்தப் பிரம்மம் சப்தப்பிரமாணமான சுருதிக்கு விஷயமாகாது என்பதையும் நீ அறிவாய்.

**8. வாக்கியம் தனக்குஎட் டாது வத்துஎன்று உரைத்த வேதம்**
**வாக்கிய விருத்தி யால்அவ் வத்துவைக் காட்டிற்று அன்றோ**
**வாக்கியங் களிலே மானம் ஆவதுஏது என்றாய் ஆகில்**
**வாக்கியம் இரண்டும் மெய்யே மறைகள்பொய் யாது கேளாய்.**

பிரம்மமானது யாதொரு வாக்கியத்திற்கும் விஷயம் ஆகாதென்று கூறிய சுருதியானது தத்துவமசி மகாவாக்கியத்தின் தத்பதம் துவம் பதங்களின் பாகத்தியாக லட்சணையினால் அப்பிரம்மத்தை தெரிவித்தது அல்லவா? ஆதலால் பிரம்மமானது சுருதி வாக்கியத்திற்கு விஷயமாகும். பிரம்மம் வாக்கிற்கு எட்டும், வாக்கிற்கு எட்டாது என்னும் இருவகை வாக்கியங்களுள் எது பிரமாணம் என்று கேட்டால், அந்த இரண்டு

வாக்கியங்களும் உண்மையே. சுருதிகள் அசத்தியம் கூறாதாகலின், இதற்கு மேலும் சமாதானம் கூறுகிறேன், கேட்பாய்.

**9. தன்பதி அல்லாப் பேர்கள் தமைஅல்லன் அல்லன் என்றாள்**
**அன்பனைக் கேட்ட நேரம் அவள்வெட்கி மௌனம் ஆனாள்**
**என்பது போல நீக்கி இதுஅன்று இதுஅன்று எனச்சே டித்த**
**பின்பரப் பிரமம் தன்னைப் பேசாமல் காட்டும் வேதம்.**

சில ஆடவர்களுடன் கூடி நின்ற ஒருத்தியின் கணவனை அறியாத மற்றொருத்தி அவளைப் பார்த்து உன் கணவன் இவனா? இவனா? என்று அங்குள்ளோரை ஒவ்வொருவராகச் சுட்டிக் கேட்டு வர அதற்கு அம்மனைவி, தனது கணவன் அல்லாதவர்களை இவன் அல்லன் இவன் அல்லன் என்றாள். தன் கணவனைச் சுட்டிக் காட்டிக் கேட்ட பொழுது, அவள் வெட்கம் அடைந்து சும்மா இருந்தனள். அதைப் போலப் பிரம்மம் அல்லாதவை சடம் ஆதலால் அவைகளை இது பிரம்மம் அன்று, இது பிரம்மம் அன்று என்று ஒவ்வொன்றாக நீக்கி, பின் ஞான வடிவாகிய எஞ்சிய பிரம்மத்தை மவுனமாக வேதம் உணர்த்தும்.

**10. முந்திய சங்கை தீர மொழிந்ததை அறிந்து கொள்வாய்**
**பிந்திய சங்கை தீரப் பேசும்உத் தரம்நீ கேளாய்**
**இந்தியங் களுக்குஇ ராசன் இதயம்ஆம் அதின்எண் ணங்கள்**
**புந்தியும் மனமும் என்றே புறத்துஅகத்து உலாவி ஆடும்.**

பிரம்மம் சுருதி வாக்கியத்திற்கு எட்டுமா? எட்டாதா? என்ற உன்முதல் சந்தேகம் நீங்குமாறு யான் கூறியதை அறிந்து கொள்வாய். பிரம்மம் மனத்திற்கு எட்டுமா? எட்டாதா? என்னும் இரண்டாவது சந்தேகமும் நீங்கும்படி யான் கூறுவதைக் கேட்பாய். சுரோத்திராதி சகல இந்திரியங்களுக்கும் அந்தக்கரணம் அரசனாம். அந்த அந்தக்கரணத்தின் விருத்திகள் புத்தியும் மனமும் எனத் தேகத்திற்குப் புறத்திலும் அகத்திலும் சஞ்சரித்து உலாவும்.

**11. உன்முகம் போல்கண் ணாடிக்கு உள்ஒரு முகம்கண் டாற்போல்**
**சின்மய வடிவின் சாயை சித்துப்போல் புத்தி தோன்றும்**
**நின்மனோ விருத்தி அந்த நிழல்வழி யாய்உ லாவும்**
**தன்மநன் மகனே இத்தைத் தான்அன்றோ ஞானம் என்பார்.**

எதிரே உள்ள கண்ணாடியில் உன்முகம் போல மற்றொரு முகம் பிரதிபலித்தது போல, சித்து வடிவமான கூடத்தனின் பிரதிபிம்பமும் மற்றொரு சித்து வடிவம் போல புத்திவடிவ அந்தக்கரணத்தில் பிரதிபிம்பிக்கும். உனது மனோ விருத்தியானது அந்த ஆபாசத்துடன் பகிர்முகமாய் விடயங்களில் சஞ்சரிக்கும். தர்ம வடிவமான நல்ல மைந்தனே, இந்த விருத்தியே ஞானம் என்று சொல்லப்படும்.

**12. உருக்கிய தராநீர் நாநா உருவங்கள் ஆனால் போல**
**விருத்திகள் கடபடாதி விடயமாய்ப் பரிண மிக்கும்**
**அருப்பல விடயம் எல்லாம் ஆபாசன் தோற்று விக்கும்**
**இருட்டினில் விளக்கும் கண்ணும் இல்லாமல் பொருள்கா ணாதே.**

உலையில் வைத்து உருக்கிய செம்பு ஆனது அச்சுக் கருவிகளில் ஊற்றப்பட்ட மாத்திரத்தில் பல உருவங்கள் ஆவதைப் போல, அந்தக்கரண விருத்திகள் இந்திரியங்களின் வாயிலாக வெளிச் சென்றபோது தமது விடயங்களுக்கு சமானமாய் கடபாதிகளின் வடிவமம் ஆகின்றன. அந்த விடயங்களை எல்லாம் அருவமான ஆபாசன் இது குடம் இது படம் என்று விளக்கும். இருட்டில் உள்ள ஒரு பொருளைக் காணத் தீபமும் கண்ணும் ஆகிய இரண்டும் வேண்டும். அதைப்போல் உலகில் உள்ள விடயங்களைக் காண மனோ விருத்தியும் ஆபாசனும் வேண்டும்.

**13. எரிகின்ற விளக்கால் கண்ணால் இருட்பொருள் காணல் வேண்டும்**
**தெரிகின்ற பரிதி காணச் சென்றிடில் கண்ணே போதும்**
**விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்**
**புரிகின்ற விருத்தி ஒன்றே போதும்மெய்ப் பொருள்காண் போர்க்கே.**

எரிகின்ற விளக்கைக் கொண்டு கண்ணால் இருளிலுள்ள பொருளைக் காண வேண்டும். நன்கு விளக்கமாத் தெரிகின்ற சூரியனைக் காண வேண்டும் எனில் கண் மட்டுமே போதும். எங்கும் பரவியுள்ள உலகத்தைக் காண வேண்டும் எனில் மனோ விருத்தியும் ஆபாசனும் வேண்டும். நான் அகண்ட சச்சிதானந்த பிரம்மம் என்ற மனோவிருத்தி ஒன்று மட்டும் மெய்ப்பொருள் காண்போருக்குப் போதுமானது. ஆபாசன் வேண்டியது இல்லை.

**14. விருத்தியும் பலமும் கூடும் விகாரமே மனம்என் பார்கள்**
**கருத்துஎழு விருத்தி வேண்டும் கணக்கினால் மனத்திற்கு எட்டும்**

**வருத்திய பலமாம் இந்த மனத்திற்குஎட் டாது கண்டாய்**
**அருத்தம்இப் படிஎன்று ஐயம் அகன்றுநீ தெளிந்தி டாயே.**

அந்தக்கரண விருத்தியும் ஆபாசனும் சேரும் பரிணாமமே மனம் என்று சொல்லுவார்கள். அந்தக் கரணத்தில் எழுகின்ற "நான் பிரம்மம்" என்னும் விருத்திக்கு பிரம்மம் விஷயமாவதால், மனத்திற்கு பிரம்மம் எட்டும் எனவும், ஆபாசனோடு கூடி துன்பத்தைத் தருகின்ற இம்மனத்திற்கு பிரம்மம் எட்டாது எனவும் அறிவாய். பிரம்மமானது மனத்திற்கு எட்டும், மனத்திற்கு எட்டாது என்று கூறியதற்குப் பொருள் இது என்று அறிந்து சந்தேகம் நீங்கி நீ தெளிவாயாக.

**15.** **வஞ்சகம்இல் பரமார்த்த குருவே சொன்ன**
**வழிகள்அறிந் தேன்இனிஓர் வசனம் கேளீர்**
**சஞ்சலம்அற்று அகண்டபூ ரணமாய்ச் சித்தம்**
**ததாகாரம் ஆவதுஅன்றோ சமாதி யோகம்**
**உஞ்சலைஒத்து அலைவதுதன் சுபாவம் ஆகி**
**ஒருகணத்தில் பலஉலகாய் உதிக்கும் இந்த**
**நெஞ்சகம்வத் துவில்அசையா நிவாத தீப**
**நிலைஅடைவது எப்படியோ நீர்சொல் வீரே.**

வஞ்சகக் குணம் இல்லாத சற்குருவே, வாக்குக்கும் மனத்துக்கும் பிரம்மம் எட்டும் எட்டாது என்பதற்குத் தாங்கள் அருளிய காரணங்களை நன்கு உணர்ந்து கொண்டேன். இப்பொழுது யான் சொல்லும் விண்ணப்பம் ஒன்றைக் கேட்டு அருளுவீர். சித்தமானது சஞ்சலம் இன்றி அகண்ட பரிபூரணமான பிரம்ம வடிவமாய் ஆதல் அல்லவா சமாதி யோகம் என சொல்லப்படுவது? அப்படி ஆகாமல் ஊஞ்சலைப் போல அலைவதே தனது இயல்பாய், ஒரு கணத்தில் பலவிதமான உலகங்களாய்த் தோன்றும் இச்சித்தமானது பிரம்மத்தில் காற்றில் அசையாத விளக்கின் தீபம் போல், சலனம் இன்றி நிலைபெறுவது எவ்வாறு என்பதை எனக்கு உரைத்து அருள வேண்டும்.

**16.** **கருதுமனோ குணம்மூன்றுஆம் மூன்றில் ஒன்று**
**கதித்துஎழுந்தால் மற்றுஇரண்டும் கரந்து நிற்கும்**
**தருமம்மிகும் சத்துவம்மேல் ஆன போது**
**சன்மார்க்கம் ஆனதெய்வ சம்பத்து உண்டாம்**
**மருவுரசோ குணம்ஆகில் உலக தேக**
**வாதனையாம் சாத்திரவா தனையும் ஆகும்**

அருமகனே தமோகுணம்மேல் ஆன போதில்
அசுரசம்பத்து உண்டாகும் அறிந்து கொள்ளே.

விடயங்களையேக் கருதுகின்ற மனத்தின் குணங்கள், சத்துவம், இராசதம், தாமசம் என மூவகையாகும். இம்மூன்றில் ஒரு குணம் மேலோங்கினல், மற்ற இரு குணங்கள் கீழடங்கி இருக்கும். சத்துவ குணம் மேலானபோது சற்கருமம், நன்மார்க்கம் போன்ற தெய்வ சம்பத்து சித்திக்கும். இராசத குணம் மேலிடும் போது உலகவாசனை, தேக வாசனை, சாத்திரவாசனை என்னும் மூவகை வாசனைகள் சித்திக்கும். தமோகுணம் மேலிட்டால், தத்துவ ஞானத்திற்கு எதிர்மறையான துர்க்குணங்களான அசுர சம்பத்துக் கிடைக்கும் என்பதை எனது அருமை மகனே, நீ அறிவாயாக.

17. மனதுசத் துவசொரூபம் மற்றுஇ ரண்டும்
வந்துகலந் தனஅவற்றை மாற்றி னால்போம்
தனதுநன்மார்க் கத்தைவிடாது இருந்த போது
தமோகுணமும் ரசோகுணமும் சமிக்கும் பின்னைக்
கனபரிணா மம்சலனம் போம்போ னக்கால்
களங்கம்அற்று நின்றஆ காசம் போலும்
நினதுஉளம் அப்படிஆம்அப் பிரமத்து ஒன்றாய்
நிருவிகற்ப சமாதியிலே நிற்கும் தானே.

மனத்தின் சுபாவம் சத்துவ குணம். ஏனைய இரசோ, தமோ குணங்கள் இடையே வந்து சேர்ந்தவை. அவற்றைத் தள்ளினால் நீங்கி விடும். அவை எவ்வாறு நீங்கும் எனில், மனதின் இயற்கையான சத்துவ குணத்தைப் பற்றியிருந்தால் அவை நீங்கிவிடும். பின்பு, இரசோ தமோ குணங்கள் நாசமாகும். அதனால் விஷய ரூபமாகப் பரிணமிக்கும் சலனம் ஒழியும். அவை போனபின், மேகங்களற்ற ஆகாசம் போல மனமானது தெளிந்து விளங்கும். அப்போது, உன் சத்துவ மனம் பிரம்ம சொரூபத்தில் ஒன்றி நிருவிகற்ப சமாதியில் நிற்கும்.

18. களங்கம்அற்ற கண்ணாடி தன்முன் வேறுஓர்
களங்கம்அற்ற கண்ணாடி காட்டும் போது
விளங்கியதன் மயம்ஆகி அபேதம் ஆகி
விகற்பம்இன்றி நிருவிகற்பம் ஆனாற் போல
அளந்துஅறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்துஆய்
ஆநந்தம் ஆம்பிரமத்து ஐக்கியம் ஆன

உளம்தெளிந்த படிஇருந்தால் உலகம் எங்கே
உலைவுஎங்கே என்றுசங்கை ஒழித்தி டாயே.

அழுக்கற்ற தூய கண்ணுடியின் முன், அதே போன்ற மற்றொரு தூய கண்ணுடியை வைத்தால், அப்போது களங்கம் ஏதுமற்று அக்கண்ணாடி மயமாய் அபேதமாய் வேறுபாடு இல்லாமல் நிருவிகற்பம் ஆனால் போல, பிரமாணங்களால் அறியப்படாத வியாபகமாய் சத்து சித்து ஆனந்தமாய் விளங்கும் பிரம்மத்தில் ஒன்றிய மனமானது, பிரம்மத்தில் ஐக்கியமாகி, பிரம்மமாகவே தெளிவுற்று இருத்தலால், உலக வடிவமாக பரிணாமித்தலும், அதனால் சலனங்களும் இல்லாது போகும் என சந்தேகத்தை நீக்குவாயாக.

19. ஏகம்ஆய் மனம்இறந்தால் சீவன் முத்தர்
இருக்கும்மட்டும் பிராரத்தம் எதினால் உண்பார்
போகம்ஆ னதுபுசித்துத் தொலைப்பது அன்றோ
புசிப்பதுஎன்றால் மனந்தானும் போனது அன்றே
சோகம்ஆம் மனம்இறந்தால் போகம் இல்லை
தோன்றும்எனில் முத்தர்என்று சொலக்கூ டாதே
மோகமாம் இதுதெளியக் குருவே நன்றா
மொழிந்துஅருள்வாய் தெளிந்ததுஅன்றோ முத்தி தானே.

பிரம்மத்துடன் ஐக்கியம் ஆனதால் மனம் நசித்து விடுமாயின், சீவன் முத்தர்கள் சரீரம் உள்ள மட்டும் பிராரத்த வினையின் பயனாகிய போகங்களை எவ்வாறு அனுபவிப்பார்கள்? போகங்கள் அனுபவிப்பதினால் தானே நீங்கும்? போகங்களை அனுபவிக்க வேண்டும் என்றால், மனமானது நாசமாக வில்லையே? துன்பத்திற்கு ஏதுவான மனம் நசித்து விடுமாயின், போக அனுபவமே இல்லையென்று ஆகிவிடுமே? மனம் நசிக்கவில்லை என்றால், அத்தகையவரைச் சீவன் முத்தர் என்று எவ்வாறு கூறுவது? முத்தி என்பது மனம் தெளிந்த நிலையல்லவா? மயக்கம் தரும் இச்சந்தேகம் அகலும்படி உபதேசித்து அருளவேண்டும்.

20. மனநாசம் சொரூபம்என்றும் அரூபம் என்றும்
வகுத்துஉரைப்பார் இருவகையா வரும்இ வற்றில்
வினவாத சீவன்முத்தர் இடத்தில் ஒன்றும்
விதேகமுத்தர் இடத்தில்ஒன்றும் மேவும் கண்டாய்
தனதுஆன சத்துவமாய் மனம்சே ஷித்துத்
தமசுரச சுகள் நசித்தல் சொரூப நாசம்

**அனகாசத் துவம்தானும் இலிங்க தேகம்**
**அடங்கும்போது அடங்குதலே அரூப நாசம்.**

மன நாசத்தை உருவநாசம், அருவநாசம் என இருவகையாகக் கூறுவர். இவற்றில், ஐயம் திரிபு அறத் தெளிந்த சீவன் முத்தரிடத்து உருவ மனம் மட்டும் நாசமடைந்து இருக்கும். அருவமனம், அவரது விதேக முத்தியில்தான் நாசமடையும். சீவன் முத்தர் இருக்கும் போதே இரசோ தமோ குணங்கள் நசித்துப் போய், மனமானது தன் இயற்கை சுபாவமான சத்துவ குணமாய் நிற்பதே மனத்தின் உருவ நாசமாகும். விதேக முத்தரிடத்து, சூட்சும சரீரம் உலை இரும்பு உண்ட நீர்போல நசித்துவிடுவதால், அந்த சத்துவகுண மனமும் அடங்குதலே மனத்தின் அருவ நாசமாகும்.

**21. சுத்தமாம் சத்துவமே உண்மை ஆகும்**
**துகள்இருள்போ னால்மனம்என் சொல்லும் போம்போம்**
**வர்த்தமா னத்தில்வந்த உணவை உண்பார்**
**வருவதும்போ வதும்நினைந்து மகிழார் வாடார்**
**கர்த்தராம் அகந்தையைவிட்டு அகர்த்தர் ஆகிக்**
**கரணவிருத் திகள்அவத்தை காண்பார் ஆகி**
**முத்தராய் இருக்கலும்ஆம் புசிப்பும் கூடும்**
**முட்டுஇலைஎன்று அறிந்துசங்கை மோசிப் பாயே.**

தூய சத்துவ குணமே மனத்தின் உண்மை வடிவமாகும். இராசத, தமோ குணங்கள் நீங்கிய அந்நிலையில் உருவ மனம் என்பது ஒழிந்து போகும். இத்தன்மை உடைய சீவன் முத்தர்கள், நிகழ்காலத்தில் எந்த உணவு கிடைத்ததோ அதனை உண்ணுவர். வருவது போவதை நினைத்து மகிழ்ச்சியோ வாட்டமோ அடைய மாட்டார்கள். ஒரு செயலைச் செய்தவன் (கர்த்தா) என்னும் அகம் பாவத்தை நீக்கி, யாவும் கருவி கரணாதிகளின் செயல் ஆதலால், யான் ஒன்றும் செய்யவில்லை என்ற அகர்த்தா தன்மையுடன், அந்தக் கரணத்தின் சாந்த, கோர, மூட விருத்திகளையும், சாக்கிர, சொப்பன, சுழுத்தி முதலிய அவத்தைகளையும் சாட்சியாக இருந்து காண்பார்கள், ஆதலால் அவர்கள் விதிப் பயனான போகத்தை அனுபவிக்கும்போதே சீவன் முத்தராய் இருத்தலும் கூடும். இதற்குத் தடை ஏதும் இல்லை என அறிந்து சந்தேகம் தீர்வாயாக.

**22. விவகார வேளைஎலாம் சமாதி என்றால்**
**விகற்பம்அன்றோ மனம்அலைந்து விடாதோ விட்டால்**

அவதானம் நழுவும்அன்றோ என்றாய் ஆகில்
அதற்குஒருதிட் டாந்தம்கேள் ஆசை கொண்டு
நவம்ஆகப் பரபுருடன் தன்னைக் கூடி
நயந்தசுகம் அனுபவித்த நாரி நெஞ்சம்
தவம்ஆக மனைத்தொழில்கள் செய்யும் போதும்
தழுவிஅனு பவித்தசுகம் தனைவி டாதே.

சீவன் முத்தன் விவகாரங்களைச் செய்து கொண்டே, சமாதி நிலையில் இருப்பது என்பது கூடாத காரியம் அல்லவா? உலக விவகாரங்களைச் செய்தால், மனமானது பிரம்ம பாவனையை விட்டுக் கலைந்துவிடும் அல்லவா? என்று வினவினால், சீவன் முத்தன் உலக விவகாரங்களைச் செய்து கொண்டு இருந்தாலும், மனம் பிரம்ம பாவனையை விடாமலே இருக்கக் கூடும். எதுபோல என்றால், ஒரு அன்னிய புருடன் மேல் காதல் கொண்டு, அவனைச் சேர்ந்து இன்பம் அனுபவித்த பெண்ணின் மனமானது, முறையாகத் தன் இல்லறக் கடமைகளைச் செய்யும் நேரங்களிலும், முன்னர் அன்னிய புருடனிடத்து அனுபவித்த சுகத்தை மறவாது சிந்தித்துக்கொண்டே இருக்கும். அதுபோல, சீவன் முத்தரது மனமும் விவகாரம் செய்யும் போது, சீவ பிரம்ம ஐக்கிய பாவனையை மறவாது இருக்கும்.

23. தேகத்தன் அலன்ஆகி அகர்த்தன் ஆகிச்
சீவன்இன்றிப் பிரமம்ஆய்த் தெளிந்த முத்தன்
போகத்தை உண்பன்என்றால் கருத்தா ஆமே
பூரணம்ஆம் அகர்த்தனுக்குப் போகம் உண்டோ
சோகத்தை அறுத்துஅருளும் குருவே இந்தத்
துகள்அறுக்க வேண்டும்என்று சொன்னாய் ஆகில்
மாகர்த்தன் மாபோகி மாத்தி யாதி
வகைமூன்றாய் அவர்இருக்கும் மகிமை கேளாய்.

தேக சம்பந்தமான உணர்வுகளும் அபிமானங்களுமின்றி, 'நான் ஒரு செயலைச் செய்கிறேன்' என்ற அபிமானமும் அற்றுப்போய், 'தான் சீவன்' என்னும் பாவனை இல்லாது தன்னைப் பிரம்மம் என்று தெளிந்து உணர்ந்த சீவன் முத்தன், விஷய போகங்களை அனுபவிப்பான் என்று கூறினால், அவன் கர்த்தா ஆகிவிடுவான் அல்லவா? பிரம்மமே தானாக இருத்தலால், பரிபூரணமாக இருக்கும் அகர்த்தாவாகிய சீவன் முத்தனுக்குப் பிராரத்த போகம் எப்படிச் சம்பவிக்கும்? துன்பத்தைக் கெடுத்தருளும் குருவே,

இச்சந்தேகத்தை நீக்கி அருள வேண்டும் என நீ கேட்பாயாகில், சீவன் முத்தர்கள் மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி என மூவகையாய் இருக்கின்றனர். அவரது பெருமையைக் கூறுகின்றேன். நீ கேட்பாயாக.

**24.** **செய்கையும்செய் விக்கையும்அற்று இருக்கும் காந்தச்**
**சிலைமலைமுன் இரும்புகள்சேட் டிக்கு மாபோல்**
**செய்கையும்செய் விக்கையும்அற்று இருக்கும் என்முன்**
**செடமான உலகம்எலாம் சேட்டை செய்யும்**
**மெய்கலந்த இந்திரிய விகார ரூப**
**விவகார விருத்திக்கும் விருத்தி தானா**
**மெய்கலந்த சமாதிக்கும் சாட்சி யேநான்**
**வெயில்போல்என்று உறைத்தவனே விபுமா கர்த்தன்.**

ஒன்றைச் செய்தலும், பிரிதொன்றைச் செய்வித்தலும் இன்றியுள்ள காந்த மலையின் முன்னே, இரும்புத் துண்டுகள் சலித்தல் போல, ஒன்றைச் செய்தலோ செய்விக்கையோ இன்றி சத்து சித்தாய் உள்ள எமக்கு முன்னே சடமான பிரபஞ்சம் யாவும் தத்தம் விவகாரங்களைச் செய்கின்றன. உலக விவகாரத்திற்கு சூரியன் சாட்சியாக இருப்பதுபோல, சரீரத்தோடு கூடிய இந்திரியங்கள் அடங்கி, மனம் தன்மயமாகி பிரம்மத்தினிடத்துப் பொருந்திய சமாதிக்கும் நான் சாட்சி மாத்திரமாக உள்ளேன் என்ற நிச்சயம் உள்ளவனே, வியாபகமாய் உள்ள மாகர்த்தன் ஆவான்.

**25.** **அறுசுவையின் குணம்குற்றம் அசுத்தம் சுத்தம்**
**அபத்தியம்பத் தியம்எனஊன் ஆய்ந்தி டாமல்**
**பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போல்**
**போகங்கள் புசிப்பவன்மா போகி ஆகும்**
**சிறிதுபெரி துகள்தனதுஅந் நியங்கள் நன்மை**
**தீமைகள்சே ரினும்படிகச் செயல்போல் சித்தம்**
**வெறிதுஇருக்கும் அவனேமாத் தியாகி ஆவன்**
**விரதம்இம்மூன் றும்உடையவரே வீடு உளோரே.**

அறுசுவை உணவில் நன்மை, தீமை, சுத்தம், அசுத்தம், பத்தியம், அபத்தியம் எனப் பகுத்துப் பாராமல், வினைப்பயனால் கிடைத்ததைப் பொறுமையுடன், காட்டுத்தீபோல் அனுபவிப்பவன் மாபோகியாவான். எளிய சிறிய பொருள், அரிய பெரிய பொருள், தன்னுடையது, அன்னியருடையது, நல்வினை, தீவினை என்னும் இவற்றுள் ஒன்று

தன்னை வந்து அடையினும், அதனால் ஒரு சிறிது மாறுபாடும் அடையாது, தன்னை அடுத்த பதார்த்தங்களின் நிறத்தை அடையாத படிகம் போல பற்றற்ற சித்தம் உடையவனே மாத்தியாகி ஆவான். இம்மூன்று விரதம் உடையவர்களே சீவன் முத்தர்களாம்.

**26. மெய்யும் கொண்டுபி ராரத் தம்தரு விதிவழி நின்றிடவும்**
**உய்யும் கர்மிக ளுக்குஅனு குணமா உறுதொழில் செய்திடவும்**
**செய்யும் செய்கைமு டிந்தவன் என்றுஉரை செப்புவது எப்படியோ**
**நையும் துன்பம் அகற்றிய குருவே நலமா அருள்வீரே.**

சரீரத்தோடு கூடி நின்று, விதி வழிகிடைத்த பிராரத்த கர்மங்களைச் செய்துகொண்டு, மோட்சம் அடைய விரும்பும் கர்ம காண்டிகளுக்குத் தேவையான உபதேசம் போன்ற காரியங்களைச் செய்து கொண்டும் உள்ள சீவன் முத்தனை, 'செய்ய வேண்டியன யாவும் செய்து முடித்தவன்' என எவ்வாறு கூறலாம்? வருந்துவதற்கு ஏதுவான பிறவித் துன்பத்தை நீக்கியருளிய குருவே, இந்த ஐயத்திற்கு நன்றாக விடை கூறி அருளல் வேண்டும்.

**27. ஆடவர் செய்தொழில் மூவகை ஆகும் அவித்தைவ சத்துஉறுநாள்**
**ஏடணை மமதைஅ கந்தைஉ ளார்க்கே இகபர விவகாரம்**
**வீடுஅனு குவம்எனும் இச்சைஉ ளார்க்கே வித்தைப டிப்பதுஎலாம்**
**பாடல்மி கும்தொழி லால்பலன் உண்டோ பரிபூ ரணம்ஆனால்.**

தத்துவ ஞானம் அடைவதற்கு முன்னே, அஞ்ஞானத்தின் வசமாய் ஒழுகும் காலத்தில், உலகோர் செய்யும் தொழில்கள் உழவாதி, யக்ஞாதி, சிரவணாதி என மூவகைப்படும். இவற்றில் போகத்தில் இச்சையும், தேகத்தில் நான் என்னும் அபிமானமும் உடையவர்களுக்கே இகலோக விவகாரமாம். சொர்க்காதி போகத்தில் இச்சை உடையவர்களுக்கு யக்ஞாதி விவகாரமாம். மோட்ச இச்சை உடையவர்களுக்கு, சிரவண, மனனாதிகள் செய்யத்தக்கனவாம். தத்துவ ஞானத்தினால் பிரம்ம வடிவமாய்ப் பரிபூரணமாய் விளங்குவாராயின் அத்தகையோருக்கு இகலோக பரலோக சாதனங்களால் அடையத்தக்க யாதொரு பயனும் இல்லை. (ஆதலால் சீவன் முத்தன் செய்ய வேண்டியன யாவும் செய்து முடித்தவன் ஆவான்.)

**28. குரவர்சி காமணி யேகே ளீர்நீர் கூறின வழிஒக்கும்**
**பரமுடன் இகமும் இழந்தவர் அன்றோ பழகுவர் மெய்ஞ்ஞானம்**

**விரவுமு யற்சியின் மீண்டவர் அதைஇனி வேண்டுவ ரோவேண்டார்**
**சிரவண மனனா திகள்வேண் டாவோ சித்தம்உ றைத்திடவே.**

பரமாச்சாரியரே, எனது விண்ணப்பத்தைக் கேட்டருளல் வேண்டும். ஞானிகளுக்கு உழவாதி, யாகாதி, சிரவணாதிகளால் பயன் ஏதும் இல்லை எனத் தாங்கள் கூறியது பொறுத்தமானதே ஆகும். இகலோகம், பரலோகங்களில் ஆசை விட்டவர்கள் தானே தத்துவ ஞானம் பழக முயல்வார்கள். இப்படி ஞான நெறிக்குத் திரும்பியவர்கள் மறுபடி பழைய செயல்களில் ஈடுபடமாட்டார்கள். ஆயினும் சித்தமானது, தன் சொரூபமான பிரம்மத்தில் திடம் பெறும் பொருட்டு, சிரவண, மனன, நிதித்தியாசனச் சாதனங்களைச் செய்ய வேண்டியதில்லையா?

**29. கிளர்மக னேகேள் தத்துவம் அறியார் கேட்டல் செயக்கடனே**
**தளர்வுஅறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்கள்உளார்**
**தெளிதலின் நிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனையோர்**
**வெளிஉரு வாய்அறி வாய்நிறை வாயினர் வேண்டுவது ஒன்றுஉண்டோ.**

பிரம்ம சொரூபமாய் விளங்கும் மைந்தா, கேட்பாயாக. தனது நிச வடிவத்தை உணராதவர்கள் சிரவணம் செய்தல் வேண்டும். சந்தேகம் உள்ளவர்கள், அதன் நிவர்த்தியின் பொருட்டு மனனம் செய்தல் வேண்டும். விபரீத புத்தியுடையோர் நிதித்தியாசனம் என்னும் தெளிதலில் முயல வேண்டும். ஆனால் சிதாகாசமாய், அறிவு மயமாய், பரிபூரண வடிவமாய் விளங்குவோர் இவற்றில் செய்யவேண்டியது ஏதுமில்லை.

**30. ஐயா கேளீர் தத்துவ ஞானியும் அஞ்ஞா னிகள்போலே**
**செய்யா நின்றேன் கண்டேன் உண்டேன் சென்றேன் எனலாமோ**
**பொய்ஆம் விபரீ தங்கள் அவற்குப் போயின என்றீரே**
**மெய்ஆம் பிரமவி சாரம்இது அன்றே வெளியா உரையீரே.**

குருவே, கேட்டருளல் வேண்டும். சீவன் முத்தர்கள், அஞ்ஞானிகளைப் போல, 'நான் செய்தேன், நான் பார்த்தேன், நான் உணவு உண்டேன், நான் சென்றேன்' எனக் கூறலாமா? அவர்களுக்கு பொய்யான சீவ ஈசுவர பிரபஞ்சத் தோற்றம் போய்விட்டதாகக் கூறினீர்களே. இவர்கள் இப்படிக் கூறுவது உண்மையான பிரம்ம விசாரம் அல்லவே. ஆதலால் உண்மையான பிரம்ம விசாரத்தைத் தெளிவாய் அறியும்படி விளக்க வேண்டுகிறேன்.

**31. ஓய்ந்தக னாவில் கண்டப முங்கதை ஓதுவன் வாதனையால்**
**ஆய்ந்துஅறிவு உற்றவன் அப்படி செப்புவன் ஆபா சனும்ஆகான்**
**மாய்ந்ததன் உடல்வேம் அளவும் விண்ணவன் மனுடன் எனப்படுவான்**
**வீய்ந்தசி தாபா சன்போம் அளவும் விவகா ரம்தொடரும்.**

ஒருவன் தான் முன்னம் கனவில் கண்ட பல விவகாரங்களை, விழித்தபின்னர் வாசனையால் கூறுவான். அதுபோலவே தன் உண்மை வடிவை உணர்ந்த ஞானியும் வாசனையால், நான் கண்டேன், உண்டேன், சென்றேன் என்கிறான். அப்படிக் கூறினாலும் அவன் சீவ பாவம் உடையவன் அல்லன். ஒருவன் தேவனாக வேண்டி புண்ணிய நதியில் சரீரத்தை விட்டாலும் மாய்ந்த அவன் உடல் வெந்து நீறாகும் வரை மனிதன் என்றே கூறப்படுவான். அதுபோலவே சீவன் முத்தன் விதேக முத்தி பெறும் மட்டும், இந்த விவகாரங்களும், பிறரால் சீவன் என்று கூறப்படுதலும் தொடரும்.

**32. ஆனால் ஐயா குருவே காண்பது அசத்தியம் என்றாலும்**
**நானா விவகா ரம்துயர் அலவோ ஞானசு கம்தருமோ**
**போனால் அன்றோ நன்றுஆம் நிட்டை பொருந்திடல் வேண்டாவோ**
**தானா நிட்டை புரிந்தால் செய்கை தவிர்ந்தவன் எப்படியோ.**

ஐயா குருவே! காணப்படுபவை எல்லாம் மித்தை என்றாலும், பற்பல விவகாரங்கள் செய்தல் ஞானிக்குத் துன்பம் தருமல்லவா? பிரம்மானந்தம் அப்போது உண்டாகுமா? விவகாரங்கள் ஒழிந்தால் அல்லவா பிரம்மானந்தம் உண்டாகும்? அதற்கு சமாதி பழக வேண்டுமே? சமாதி பழகுவனைச் செய்ய வேண்டியன யாவும் செய்து முடித்தவன் (கிருத கிருத்தியன்) என எவ்வாறு கூறுவது?

**33. தெரிதரு மகனே ஆரம் பத்தொடு தீரும் விவகாரம்**
**உரியதி யானமும் விவகா ரங்களும் உள்ளத் தொழில்அன்றோ**
**துரியப ரம்பொருள் ஆனவர் வேறுஒரு தொழில்செய் வதும்உண்டோ**
**அரியச மாதிகள் பழகுவ னேல்அவன் ஆரூ டனும்அன்றே.**

உண்மையை வினாவி அறியும் மைந்தா, ஞானியின் செயல்கள் பிராரத்த கர்மத்தோடு ஒழிந்து விடும். சமாதிக்கான அப்பியாசங்களும், நான் கண்டேன், செய்தேன் என்னும் விவகாரங்களும் அந்தக்கரணத்தின் செயல்களல்லவா. துரிய நிலையில் பரம்பொருளாகவே இருக்கும் சீவன் முத்தர்கள் (பிரம்ம சொருபமாகவே இருப்பதன்றி) வேறொரு செயல் செய்வது உண்டா (இல்லை அல்லவா). ஒருவன் சமாதி நிலயை

அப்பியாசம் செய்வான் ஆனால், அவன் உண்மையை உணர்ந்த ஞானியன்று, அப்பியாசி எனப்படுவான்.

**34. உத்தம குருவே ஆரூ டருமாய் ஒருதொழில் அற்றவருள்**
**சித்தம் அடங்குதி யானா திகள்சிலர் செய்குவது என்என்றால்**
**இத்தலம் மருவும் பிராரத் தப்பிறிவு எப்படி அப்படியே**
**முத்தரும் வெகுவிதம் ஆகுவர் என்பது முன்னே சொன்னேனே.**

உத்தம குருவே, ஆத்ம ஞானத்தால் முத்தியடைந்து, ஒரு செயலுமற்று உள்ளோரில் சிலர் மனம் அடங்குதற்கு ஏதுவான தியானம் முதலியவற்றைச் செய்வது ஏன் என நீ வினாவினால், இவ்வுலகத்தில் அவரவர்களுடைய பிராரத்த கர்மம் எப்படியோ அதன்படியே சீவன் முத்தர்களும் அநேக விதமாய் இருப்பார்கள் என்பதை முன்னமே (தத்துவ விளக்கம், பாடல் 97–ல்) கூறினேனே. (அதை இப்போது சிந்தித்து உணர்வாயாக).

**35. நல்லவ னேகேள் உலகுஉப காரம் ஞானிகள் விவகாரம்**
**அல்லது வேறுஒரு பெறுபே றும்இலை அதனால் பிணியும்இலை**
**வல்லசி ருட்டிமு தல்பல தொழிலால் வருபுண் ணியபாவம்**
**எல்லவ ருக்கும்அ னுக்கிர கம்செயும் ஈசன் அடைந்திலனே.**

உத்தமனே, கேட்பாயாக, தன்னலம் கருதா ஞானிகளின் செயல்கள் எல்லாம் உலக நன்மைக்கே அன்றி, அவற்றால் ஞானிகள் பயனடைவது ஒன்றுமில்லை. அதனால் அவர்களுக்கு குறைபாடுகளும் இல்லை. எங்ஙனம் எனின், சிருட்டி முதலான ஐந்து தொழில்களால் எல்லா சீவர்களுக்கும் அவரவர் நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப இன்ப துன்பங்களை அருளும் ஈசவரன், புண்ணிய பாவங்களை அடையாதது போலவாம்.

**36. ஈசனும் ஆய்அரு வாய்உருவு ஆகி எழுந்துஅரு ளும்குருவே**
**ஈசனும் ஞானியும் ஒப்புஎன் றீரே எப்படி ஒப்புஎன்றால்**
**ஈசனும் ஞானியும் மமதைஅ கந்தைஇ கந்ததி னால்ஒப்பாம்**
**ஈசனும் ஆம்பல சீவரும் ஆம்உலகு எல்லாம் இவன்ஆமே.**

அருவமான அறிவு வடிவமாய் இருந்து, (உலகைப் படைத்தல் காத்தல் முதலிய செய்தற் பொருட்டு) ஈசுவரன் ஆகியும், (சீடருக்கு உபதேசிப்பதற்காக) மானுட உருவில் எழுந்தருளி உள்ள குருவே, ஈசுவரனும் ஞானியும் சமானம் ஆவர் என்றீர்களே அது

எவ்வாறு என்றால், ஈசனும், ஞானியும் 'யான் எனது' எனும் அபிமானம் விட்டு இருத்தலால், தம்முள் ஒப்பாவர். ஞானியானவர் பிரம்ம வடிவாய் இருத்தலால், பிரம்மத்தில் கற்பிதமாய்த் தோன்றியுள்ள, ஈசனாயும், சீவராயும், உலகாயும் ஆவார்.

**37. எல்லாச் சீவரும் இவன்ஆம் என்றீர் இவன்தான் முத்திஅடைந்து**
**எல்லாச் சீவரும் முத்திபெ றாமல் இருப்பா னேன்ஐயா**
**எல்லாச் சீவரும் வெவ்வேறு ஆனால் இவன்எல் லாம்அலனே**
**எல்லாச் பொருளும் உரைத்துஅருள் குருவே இதைநீர் மொழியீரே.**

ஞானியானவன், எல்லாச் சீவர்களுமாக இருப்பதாகக் கூறினீர்கள். ஆனால் ஞானி முத்தியடைந்த பின்னரும் எல்லா சீவர்களும் முத்தியடையாது இருப்பதன் காரணம் யாது? சீவர்கள் ஞானியினும் வேறாய், தனித்தனியாய் இருப்பாராயின், ஞானி அனைத்தும் ஆகானே? எல்லாச் சந்தேகங்களையும் நீக்கி, விளக்கம் அருளும் குருவே, இதற்கும் தாங்கள் விளக்கம் தர வேண்டும்.

**38. அகம்எனும் ஆன்மா பூரணம் ஏகம்அ நேகவி தம்சீவர்**
**அகம்எனும் அந்தக் கரணஉ பாதிகள் அளவுஇலை ஆதலினால்**
**சகம்முழு தும்குளிர் சந்திரன் ஏகம் சலசந் திரர்பலர்ஆம்**
**சகம்அதில் ஏரிகு ளம்சிறு குழிசால் சட்டிகு டம்பலவால்.**

நான் என்று எல்லோராலும் சொல்லப்படுகிற ஆன்மா பரிபூரணமும் ஒன்றாயும் இருப்பதாம். நான் என்னும் அந்தக்கரண உபாதிகள் அளவு இல்லாது, அநேக விதமாய் விளங்குவதால், சீவர்கள் அனேக விதமாக உள்ளார்கள். (இது எவ்வாறு என்றால்) உலகம் முழுவதற்கும் குளிர்ச்சியைத் தரும் சந்திரன் ஒன்றே ஆகும். ஆனால் உலகிலுள்ள ஏரி, குளம், குழி, சால், சட்டி, குடம் ஆகியவற்றில் உள்ள சலத்தில் பிரதிபலித்து அநேக சந்திரன்களாக விளங்குவது போலவாம்.

**39. சட்டிகு டங்களில் ஒன்றுந சித்திடின் அதினுள் சலசந்திரன்**
**ஒட்டுமு தல்சந் திரனொடு கூடும்ஒ ழிந்தவை கூடாவே**
**கட்டும்உ பாதிந சித்திடு சீவன் காரண ஆன்மாவில்**
**கிட்டும்அ யிக்கியம்உ பாதிகெ டாதவர் கேவலம் ஆகாரே**

எங்ஙனம் சட்டி, குடம் முதலியவற்றில் ஒன்று நாசமானால் அதில் பிரதிபலித்த சந்திரன், வானத்திலுள்ள பிம்ப சந்திரனோடு ஐக்கியமாகும். ஏனைய ஏரி குளம்

குட்டையில் தோன்றிய சந்திரர்கள் ஐக்கியம் ஆவதில்லை. அதேபோல, பந்தத்திற்குக் காரணமான (அஞ்ஞானம் என்னும்) உபாதி, தத்துவ ஞானத்தால் நசிக்கும்போது, உபாதியில் பிரதிபலித்த சீவன், தனது காரணமான பிம்ப வடிவத்தில் (ஆத்மாவில்) ஐக்கியம் ஆவான். ஆனால் அஞ்ஞானமாகிய உபாதி கெடாத ஏனைய சீவர்கள் ஐக்கியம் ஆகார்கள்.

**40. இவன்அயன் மால்சிவன் ஆகிய ஈசரொடு எப்படி ஒப்புஆவன்**
**சிவன்முதல் மூவரும் அகிலசி ருட்டி திதிநா சங்கள்செய்வார்**
**அவர்பிறர் மதிகளும் முக்காலங்களும் அறிவார் விபுஆவார்**
**தவம்மிகு குருவே இவனுக்கு அவையில்ஓர் சற்றும் காணேனே.**

ஞானி ஆனவர், பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் போன்ற மும்மூர்த்திகளுக்கு எவ்வாறு ஒப்பாவார்? அம்மூவரும் உலகினைப் படைத்தல், காத்தல், அழித்தல் செய்பவர்கள். அவர்கள், எல்லோருடைய எண்ணங்களை அறிபவராகவும், முக்காலமும் உணர்பவராகவும் உள்ளதால் எங்கும் நிறைந்தவர்கள் ஆவார்கள். தவம் மிகுந்துள்ள குருவே! மேற்கூறிய மகிமைகளில் ஒரு சிறிதும் ஞானியினிடத்துக் கண்டிலேன். (ஆகையால் ஞானி எவ்வாறு ஈசுவரரோடு ஒப்பாவார்?)

**41. தடத்து நீர்நிலாத் திரிஒளி உபயமும் தழுவும்ஊர் தனைக்காக்கும்**
**குடத்து நீர்விளக் கினில்ஒளி இரண்டும்ஓர் குடும்பமாத் திரம்காக்கும்**
**அடுத்த மைந்தனே ஞானியும் ஈசனும் அறிவினால் பிறிவுஇல்லை**
**கெடுத்த மாயையின் குணங்களால் மேல்என்றும் கீழ்என்றும் பிரிவுஆம்.**

ஏரி நீரும் தீவட்டி ஒளியும் ஓர் ஊர் முழுதும் காக்கும் தன்மையுடையன. ஆனால் குடத்து நீரும் அகல் விளக்கும் ஓர் குடும்பத்தை மட்டும் காக்கும் (அளவில் வேறுபட்டாலும் காக்கும் தன்மையில் பேதமில்லை). அதேபோல், தத்துவ ஞானியும் ஈசுவரனும் (நான் பிரம்ம சொரூபன் என்னும்) ஞானத்தால் பேதமில்லை. (சத்துவ குண மாயையில் தோன்றியவன் ஈசுவரன். இரஜோ குண மாயையில் தோன்றியவன் சீவன்) இப்படி மாயையின் குணங்களால் மட்டுமே பேதமாம். இதனால் ஈசுவரன் மேல், ஞானி கீழ் என்னும் பேதமாம்.

**42. நரரின் மன்னனைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான**
**சுரர்கள் மாயைவல் லவர்அணி மாதிகள் ஒக்கமா தவம்மிக்கோர்**
**தரணி மானுடர்க்கு அவைகள்இல் லாமையால் தாழ்வுஉளர் ஆனாலும்**
**பிரம பாவனை யால்இவர் அவர்எனும் பேதம்ஒன்று இலைபாராய்.**

அரசர்கள், சித்தர்கள் என்போர் எவ்வாறு மனிதர்களுள் மேன்மையானவர்களோ, அதுபோலவே திருமால் முதலிய தேவர்கள் மாயா வல்லமை மிகுந்தவர், மற்றும் அணிமா முதலான எண்வகைச் சித்திகள் கைவந்த பெருந்தவம் மிக்கோர் உள்ளனர். ஆனால் பூமியிலுள்ள மனிதரான ஞானிகளுக்கு அத்தகைய வல்லமைகள் இல்லாததால், அவர்கள் திருமாலினும் தாழ்ந்தவரே ஆனாலும், "நான் சச்சிதானந்தன், நித்தியன், பூரணன்" என்னும் பிரம்ம பாவனையினால் திருமால் உயர்ந்தவர், ஞானி தாழ்ந்தவர் என்ற பேதம் இல்லை. இதனை யூகித்துப் பார்ப்பாயாக.

**43.** **முத்தி நல்கிய சற்குரு வேபல முனிகளுக்கு அணிமாதி**
**சித்தி பூமியில் கண்டிருக் கவும்அந்தச் செல்வம்ஈ சனதுஎன்றீர்**
**புத்தி ஒத்திட உரைத்துஅருள் என்றிடில் புகழும்ஈ சனைநோக்கிப்**
**பத்தி செய்திடும் தவத்தினால் யோகத்தால் பலித்ததுஎன்று அறிவாயே.**

மோட்சத்தைத் தந்தருளிய குருவே, பல ஞானிகளுக்கு, (வசிட்டர், வியாசர்) அணிமா முதலிய எண்வகைச் சித்திகள் உண்டு என்பது பூமியில் காணப்பட்டது. ஆனால் அத்தகைய செல்வம் ஈசுவரனுக்கே உரியது என்றீர்கள். (இம் முனிவர்களுக்கு எவ்வாறு இவை உண்டாயின என்பதை) அடியவன் புத்தி சம்மதிக்கும்படி உரைத்தருளல் வேண்டும் (எனக் கேட்ட சீடனுக்கு, குருவானவர் கூறி அருளியது). முனிவர்கள் மும்மூர்த்தியான ஈசவரனை நோக்கிச் செய்த பக்தி, தவம் மற்றும் யோகத்தினால் அணிமாதிச் செல்வம் முனிவர்களுக்கு வாய்த்தது என அறிவாயாக.

**44.** **சிவசொ ரூபம்ஆம் தேசிக மூர்த்தியே சித்திமுத் திஇரண்டும்**
**தவம்உ ளோர்அடை குவர்எனில் அவர்கள்போல் சகலரும் அடைவாரே**
**அவர்கள் பூருவம் சித்தியும் ஞானமும் அடைந்ததும் கண்டோமே**
**இவர்கள் ஞானிகள் என்றிடில் சித்திகள் இவர்க்குஇலா வகைஏதோ.**

சிவசொரூபமாய் விளங்கும் குருவே, தவம் செய்பவர்கள் முத்தி மட்டும் இன்றி சித்திகளும் அடைவார்கள் என்றால், அத்தவம் செய்பவர்களைப் போன்று இக்காலத்திலுள்ள தவமுடையோரும் முத்தி சித்திகளை அடையவேண்டும் அல்லவா? முற்காலத்தில், தவமுடையோர், சித்திகள் முத்தி இரண்டுமே பெற்றதை சாத்திரவாயிலாக அறிகிறோமே. இக்காலத்துள்ள ஞானிகளிடத்து அணிமாதி சித்திகள் இல்லாததின் காரணம் யாது?

**45. காமி யத்தவம் காமியம் ஒன்றையும் கருதிடாத் தவம்என்றும்**
**பூமி யில்தவம் இருவகை சித்தியும் போதமும் தரும்மைந்தா**
**ஆம்இ வற்றில்ஒன்று இயற்றினால் ஒன்றையே அடைகுவர் இதுதீர்வை**
**யாம்உ ரைத்தஅவ் விரண்டையும் இயற்றினார் அன்றுஉள பெரியோரே.**

உலகில் செய்யப்படும் தவமானது, காமியத்தவம் (பலனை எதிர் பார்த்துச் செய்யும் புண்ணிய காரியங்கள்) மற்றும் நிஷ்காமியத்தவம் (பலன் எதிர்பாராது ஈசுவரார்ப்பணமாகச் செய்யப்படுவன) என இருவகைப்படும். இவ்விரண்டு தவங்களுள், காமியத்தவம் அணிமாதி சித்திகளைத் தருவதாம். நிஷ்காமியத்தவம் ஞானத்தைத் தருவதாம். மைந்தனே, இவ்விரண்டில் எந்த ஒரு தவத்தை இயற்றினரோ அதற்கான பலனை மட்டுமே அடைவர் என்பது நிச்சயம். அக்காலத்து இருந்த முனிவர்கள் (வசிட்டர் வியாசர் போன்றோர்) இந்த இரண்டு தவங்களையும் செய்தனர். அதனால் சித்திகள் முத்தி என்னும் இருவகைப் பயனையும் அடைந்தார்கள்.

**46. அனக மைந்தனே முத்திஞானத்தையே அடைந்தனர் அல்லாமல்**
**செனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரோ**
**இனிய சித்தியே விரும்பினார் சிலர்சிலர் இரண்டையும் முயன்றார்அம்**
**முனிவர் சித்திகள் விநோதம்மாத் திரம்தரும் முத்தியைத் தாராவே.**

களங்கமற்ற மைந்தனே! ஜனகன், மாபலி, பகீரதன் போன்ற, அன்றிருந்த முனிவர்கள், மோட்சத்திற்கு நேர் சாதனமான தத்துவ ஞானத்தை அடைந்தார்களே அல்லாமல் சித்திகளை அப்பியாசிக்கவில்லையே? சில முனிவர்கள் இருவகைத் தவங்களையும் மேற்கொண்டனர். மற்றும் சிலரோ சித்திகளை மட்டுமே விரும்பினர். அவர்கள் பெற்ற சித்திகள் விளையாட்டு விநோதம் மட்டுமே தருபவையே அன்றி குறிக்கோளான மோட்சத்தைத் தருவன அல்ல (அதனால்தான் தற்காலத்தவர் சித்தியைப் பெற முயலுவதில்லை).

**47. யோக ஞானமே முத்தியைத் தரும்எனில் ஒழிந்தசித் திகள்வேண்டி**
**மோகம் ஆய்உடல் வருந்தினார் சிலசில முத்தர்கள் ஏன் என்றால்**
**போகம் ஆய்வரும் பிராரத்த கர்மங்கள் புசித்தன்றோ நசித்துஏகும்**
**ஆகை யால்அந்தச் சித்திகள் பிராரத்தம் ஆகும்என்று அறிவாயே.**

சீவ பிரம்ம ஐக்கிய ஞானமே முத்தியைத் தருமென்று கூறினால், முத்தியைத் தராத சித்திகளை வேண்டி, மோகங்கொண்டு, சில சீவன் முத்தர்கள் உடல் வருந்தியது ஏன்

என நீ வினவினால், சுகதுக்க அனுபவமாக வரும் பிராரத்த கர்மங்கள், அனுபவிப்பதால் மட்டுமே கெடும். ஆதலால், அவர்கள் அடைந்த அச்சித்திகள் அவர்களது பிராரத்த வினையின் பயனாகும் என அறிவாயாக.

**48.** **இலக்கம் ஆயிரம் சுருதியால் ஊகத்தால்**
**என்மனம் அசையாமல்**
**பெலக்க வேண்டும்என்று அருள்குரு வேஅகப்**
**பிராந்திபோய்த் தெளிவு ஆனேன்**
**துலக்கம் ஆனகண் ணாடியை அடிக்கடி**
**துலக்கினால் பழுதுஅன்றே**
**அலக்கண் மாற்றிய தேவரீர் எனக்குஉரை**
**அமிர்தங்கள் தெவிட்டாவே.**

அளவற்ற சுருதி வாக்கியங்கள் மற்றும் யுத்திகளால், என்னுடைய மனம் சொரூபத்தை விட்டு நழுவாமல் திடமாய் அதில் அழுந்த வேண்டுமென எனக்கு அருளிய குருவே, எனது மனக் கலக்கங்கள் நீங்கித் தெளிவடைந்தேன். சுத்தமான கண்ணாடியை அடிக்கடி துடைப்பதில் தீங்கில்லை அல்லவா. எனது பிறவித் துன்பங்களை நீக்கி அருளிய சுவாமிகள் உபதேசித்தருளிய அமிர்தமானது தெவிட்டவில்லை.

**49.** **கைதவங்களைச் சாத்திரம் சொல்லுமோ கருணையால் எனைஆளும்**
**ஐய னேகுரு வேஎவர் ஆகிலும் அனுபவித் தால்அன்றிச்**
**செய்த கர்மங்கள் விடாஎன்ற வசனமும் சென்மசஞ் சிதம்வேவத்**
**துய்ய ஞானத்தீச் சுடும்என்ற வசனமும் துணிவது எப்படிநானே.**

சாத்திரங்கள் பொய்யான வார்த்தைகளைக் கூறாதல்லவா? கருணையால் அடியேனை ஆளும் ஆசானே, சற்குருவே! (கர்மகாண்ட வேத வாக்கியம்) எவரானாலும் அவர் முன்செய்த கர்மங்களின் பயனை அனுபவித்தால் அன்றி நாசம் ஆகாது என்பதும், (ஞானகாண்ட வேத வாக்கியம்) அளவிறந்த பிறவிகளுக்குக் காரணமான சஞ்சித வினை வெந்து சாம்பலாகுமாறு, ஞானாக்கினி எரித்துவிடும் என்பதும் ஆகிய இந்த இரண்டில், இதுதான் உண்மை என நான் எவ்வாறு நிச்சயிப்பது?

**50.** **சீவ பேதங்கள் அளவிலை மைந்தனே செய்கையும் அளவில்லை**
**ஆவ ஆம்அவர் அவர்அதி காரங்கள் அறிந்துபக் குவம்நோக்கிப்**

**பூஅ லர்ந்துபின் பலங்கள்காட் டுவனபோல் பூருவம் சித்தாந்தம்**
**காவல் வேதங்கள் இரண்டையும் வசனிக்கும் காண்டம்மூ வகையாலே.**

'நான், நான்' எனக் கருதும் அந்தக்கரண உபாதிகள் அளவற்றன. ஆதலால் சீவர்களுடைய பேதங்களும் அளவற்றன. அவர்களது செயல்களும் அளவற்றவை. அவர்களது அதிகாரிபேதம், பக்குவம் ஆகியவற்றிற்கு ஏற்ப கர்மம், பக்தி, ஞானம் என்னும் மூவகைச் சாதனங்களைக் கொடுத்து நம்மைக் காக்கும் வேதமானது, முன்னே பூ மலர்ந்து பின்னே பழம் கொடுக்கும் மரங்கள் போல, இரு விதமாக கர்ம நாசத்தை கூறியுள்ளது.

51. **ஆன பாவிகள் அடைவன நரகங்கள் அவசியம் ஆனாலும்**
**தான மந்திர விரதஓ மங்களால் தவிரும்என் பதுபொய்யோ**
**ஈனம் ஆம்பல சன்மசஞ் சிதவினை எத்தனை ஆனாலும்**
**ஞானம் ஆம்கனல் சுடும்என்ற மறைமொழி நம்பினால் வீடுஉண்டே.**

தீய கர்மங்களைச் செய்பவர்கள் நிச்சயமாக நரகமடைவார்கள் என்பது உண்மையாயினும், தானங்கள், மந்திரஜபம், விரதங்கள், யாகம் செய்தல் போன்ற பிரயாச்சித்தங்களால், பாவ நிவர்த்தி கிட்டும் என்பதும் பொய்யல்லவே? அதுபோலவே, இழிவான அளவிறந்த பிறவிகளுக்கு காரணமான சஞ்சித கர்மங்கள் எவ்வளவு இருப்பினும் அவற்றை ஞானாக்கினி எரித்துவிடும் என்னும் வேத வாக்கியத்தை நம்பினால் சஞ்சித கர்மங்கள் நீங்கி மோட்சம் பெறுவதும் நிச்சயமாம்.

52. **என்ம னம்திருக் கோயிலாத் தினம்குடி இருந்துஅருள் குருமூர்த்தி**
**சென்ம சஞ்சித வினைகள்வேர் அறுத்திடும் தேவரீர் மெய்ஞ்ஞானம்**
**தன்ம யம்தரும் மகிமையை விபுதராம் சமர்த்தரும் அறியாமல்**
**கன்மம் ஆம்குழி யினில்விழுந்து அழிகின்ற காரணம் உரையீரே.**

எனது மனத்தையே திருக்கோவிலாகக் கொண்டு எப்போதும் எழுந்தருளியுள்ள குரு மூர்த்தியே, தாங்கள் உபதேசித்துள்ள தத்துவ ஞானமானது, பல பிறவிகளைக் கொடுக்கக் காரணமான சஞ்சித கர்மங்ளை அடியோடு அறுத்து முத்தி தரும். மிகவும் கற்றறிந்தவரும் இவ்வுண்மையை உணராது, கர்மங்களைச் செய்வதால்தான் முத்தி கிடைக்குமெனக் கருதி குழியில் வீழ்வது எதனால் என விளக்கி அருள வேண்டும்.

53. **அழிவுஇ லாததற் பதம்தனை மைந்தனே அகமுகத் தவர்சேர்வர்**
**வழிந டப்பவர் பராமுகம் ஆயினால் மலர்ந்தகண் இருந்தாலும்**

**குழியில் வீழ்வர்காண் அப்படி வெளிமுகம் கொண்டுகா மிகள்ஆனோர்**
**பழித ரும்பிற விக்கடல் அழுந்துவர் பரகதி அடையாரே.**

மைந்தனே, தான் பிரம்ம சொரூபமே என காண்போர் மட்டுமே நித்தியமான பிரம்மத்தை அறிவார். மற்றவர்கள் அறிய மாட்டார்கள். தாங்கள் செல்லும் பாதையைச் சரியாகப் பாராது, அசட்டையாக நடப்பவர்கள், கண் விழித்திருந்தாலும், குழியில் வீழ்வர். அதுபோல பகிர்முகப்பட்டு சொர்க்காதி போகங்களை விரும்பி கர்மம் செய்பவர்கள், பழிக்கத் தக்க பிறவிக்கடலில் உழல்வரேயன்றி, மோட்சம் அடையமாட்டார்கள்.

**54. சிறந்த நன்மையும் தீமையும் ஈசனார் செய்விக்கும் செயல்அன்றோ**
**பிறந்த சீவர்கள் என்செய்வார் அவர்கள்மேல் பிழைசொலும் வழிஏதோ**
**துறந்த தேசிக மூர்த்தியே என்றிடில் சுருதிநூல் பொருள்மார்க்கம்**
**மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனே அதுகேளாய்.**

சீவர்கள் செய்கின்ற நல்வினைகள் மற்றும் தீவினைகள் எல்லாம் சூத்திரதாரியான ஈசுவரன் செய்விப்பது அல்லவா? ஈசுவரன் பிறப்பித்தவாறு பிறந்த சீவர்கள் அவற்றிற்கு யாது செய்வார்கள்? அச்சீவர்கள் மீது குறை சொல்லக் காரணம் யாதோ? முற்றும் துறந்த குருமூர்த்தியே என நீ வினவினால், இத்தகைய வசனங்கள், வேத சாத்திரம் பொருள் கூறும் நெறியை மறந்த மூடர்கள் மயக்கத்தில் கூறும் மொழிகள் என அறிவாய். சரியான பொருளைக் கூறக் கேட்பாயாக.

**55. திகழ்ந்த ஈசனார் சிருட்டியும் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே**
**சகம்த னில்பொது ஈசனார் சிருட்டிகள் சராசரப் பொருள்எல்லாம்**
**அகந்தை யாம்அபி மானங்கள் கோபங்கள் ஆசைகள் இவைஎல்லாம்**
**இகழ்ந்த சீவனார் சிருட்டிகள் ஆகுங்காண் ஈசனார் செயலன்றே.**

சுத்தப் பிரம்மமாக விளங்கும் ஈசுவரனது சிருட்டியும், சீவனது சிருட்டியும் வெவ்வேறு ஆகும். உலகத்தில் நடப்பன, நிற்பனவாகிய பொருள்கள் அனைத்தும் ஈசுவரனால் பொதுவாக சிருட்டிக்கப்பட்டன. அவைகளில் யான் எனது என்னும் அபிமானங்களும், கோபம், ஆசை, அனைத்தும் ஈசுவரன் செயலல்ல. அவை யாவும் இழிவான சீவனது சிருட்டிகள் ஆகும். (மாயாமயமான சர அசரப் பிரபஞ்சம் ஈசுவர சிருட்டி, அந்தக் கரணத்தின் பரிணாமம் ஆகிய அபிமானம் முதலியவை சீவ சிருட்டி என்பதாம்.)

**56. மூவர் ஆம்பரன் சிருட்டிகள் உயிர்க்குஎலாம் முத்திசா தனம்ஆகும்**
**சீவ னார்செயும் சிருட்டிகள் தங்களைச் சிருட்டிக்கும் பிணிஆகும்**

**தாவ ராதிகள் நசித்திடில் ஒருவர்க்கும் சனனங்கள் நசியாவாம்**
**கோபம் ஆதிகள் நசித்திடில் பந்தம்ஆம் கொடும்பிற விகள்போமே.**

மும்மூர்த்தி வடிவாயுள்ள ஈசுவரனது சிருட்டிகள் சீவர்களுக்கு எல்லா மோட்ச சாதனமாக இருப்பன. சீவனுடைய சிருட்டிகள் தங்களை மீண்டும் பிறக்கச் செய்யும் பந்தங்களாக இருக்கின்றன. தாவரம் முதலிய ஈசுவர சிருட்டிகள் நாசமாகும்போது ஒருவருக்கும் பிறவி நாசமாவதில்லை. ஆனால் கோபம் முதலிய குணங்கள் நசித்தால் கொடிய பிறவிகள் நாசமாகும்.

**57. ஈசர் காரியம் பிரளயத்து ஒழியவும் எவர்பவம் ஒழிந்தார்கள்**
**தேச காலதே காதிகள் இருக்கவும் சீவகா ரியமோகம்**
**நாசம் ஆக்கிய விவேகத்தின் உயிரொடு ஞானமுத் தர்கள்ஆனார்**
**பாச மோகங்கள் பசுக்களின் செயல்அன்றிப் பசுபதி செயல்அன்றே.**

ஈசுவர சிருட்டியான பிரபஞ்சம், அவர் சங்கற்பப்படியே மகாப்பிரளயத்தில் நாசமாகையில் ஒருவரும் பிறவித்துன்பம் நீங்கி முத்தி அடைவதில்லை. ஆனால் தேசம், காலம், தேகம் முதலிய ஈசுவர சிருட்டிகள் அழியாது இருக்கும் போதே, குரு மற்றும் சாத்திரங்களின் உதவியால் சீவ சிருட்டியான மோகம் அகங்காரம் முதலியவற்றை விவேகத்தால் நாசம் செய்து சீவன் முத்தரானவர்கள் உண்டு. இதனால் பந்தத்திற்கு ஏதுவான அகங்காராதிகள் சீவ சிருட்டியே அன்றி ஈசுவர சிருட்டியன்று.

**58. அச்சு வத்தம்என்று ஒருமரம் அதில்இரண்டு அரும்பற வைகள்வாழும்**
**நச்சும் அங்குஒரு பறவைஅம் மரக்கனி நன்றுநன்று எனத்தின்னும்**
**மெச்சும் அங்குஒரு பறவைதின் னாதுஎன வியங்கிஅப் பொருள்ஆக**
**வைச்சு மாமறை சீவனை ஈசனை வகுத்தவாறு அறிவாயே.**

ஒரு அரச மரத்தில் இரண்டு அரிய பறவைகள் வாழ்கின்றன. அவற்றுள் ஒரு பறவை, அம்மரக் கனிகளை விரும்பி உண்ணும். அங்கு துதிக்கப்படும் மற்றொரு பறவை, அக்கனிகளைத் தின்னாது என்று சிறப்புடைய முண்டக உபநிடதமானது, சீவ ஈசுவர பேதத்தை குறிப்பால் பொருள் உணர்த்தி உள்ளதை அறிவாயாக. (சரீரமாகிய மரத்தில் சீவன், ஈசுவரன் எனும், இரு பறவைகள் வாழ்கின்றன. இவற்றில் சீவன், அஞ்ஞானத்தால், போகமென்னும் பழத்தைப் புசிக்க, சர்வஞ்ஞனும் சத்துவ குண உபாதியுமுடைய ஈசுவரன், சுக துக்க வடிவமான போகத்தைப் புசிப்பதில்லை.)

**59. இந்தச் சீவனால் வரும்அறு பகைஎலாம் இவன்செயல் என்னாமல்
அந்தத் தேவனால் வரும்என்ற மூடர்கள் அதோகதி அடைவார்கள்
இந்தச் சீவனால் வரும்அறு பகைஎலாம் இவன்செயல் அல்லாமல்
அந்தத் தேவனால் அன்றுஎனும் விவேகிகள் அமலவீடு அடைவாரே.**

சீவனால் உண்டாகும் அறுவகைப் பகைகளை எல்லாம் (காமம் குரோதம் உலோபம் மோகம், மதம், மாற்சரியம்) இந்தச் சீவனது செயலாகக் கருதாது, அவை ஈசுவரனால் உண்டாகிறது என எண்ணும் அறிவிலிகள் நரகமடைவார்கள். இப்பகைகள் சீவன் செயல்களே, ஈசுவரனால் உண்டாக்கப்படவில்லை என அறிந்த விவேகிகள் மோட்சத்தை அடைவார்கள். (காமாதிகளை ஈசுவர சிருட்டி என விபரீதமாக உணர்ந்து, அவற்றை நீக்காதிருப்பவர் நரகமடைவர்.)

**60. நலமெய் ஐயனே எல்லவர்க் கும்தெய்வ நாயகன் பொதுஆனால்
சிலரை வாழ்வித்தல் சிலரொடு கோபித்தல் செய்வதுஏன் என்றாயேல்
குலவு மக்களைத் தந்தைபோல் சிட்டரைக் குளிர்ந்துதுட் டரைக்காய்வன்
கலைகள் நல்வழி வரச்செயும் தண்டமும் கருணை என்று அறிவாயே.**

ஞானமே திருமேனியாகக் கொண்டுள்ள குருவே, நல்லவர் கெட்டவர் யாவரிடத்தும் பாரபட்சமின்றி, பரமேசுவரன் பொதுவாக இருப்பானாகில், சிலரை மகிழ்ச்சியோடு வாழச் செய்தலுக்கும், மற்றோரைக் கோபித்துத் துன்புறுத்தலுக்கும் யாது காரணம் என வினாவிடில், புத்திரரது நற்குணத்தால் மகிழ்ந்து பாராட்டுதலையும், அவர்தம் குற்றத்தால் கோபித்தலையும் செய்யும் தகப்பனைப்போல ஈசுவரனும், தான் விதித்தவாறு செய்தும், விதியாததை நீக்கியும் இருப்போருக்கு இன்பம் அளிக்கிறான். விலக்கிய நெறியில் செல்வோரைத் தண்டிக்கிறான் (இது பாரபட்சமாகாது, ஏனெனில்) சாத்திரம் கூறும் நல்வழிப்படுதற் பொருட்டு, ஈசுவரன், தீயோரைத் தண்டிப்பது அவர்களுக்கு நன்மை பயக்கும் கருணையே ஆகும் என்று அறிவாய்.

**61. மனைவி லங்குஅறு மைந்தனே கற்பக
மரம்கனல் புனல்மூன்றும்
தனைஅ டைந்தவர் வறுமையும் சீதமும்
தாகமும் தவிர்த்துஆளும்
அனைய ஈசனும் அடைந்தவர்க்குஅருள் செய்வன்
அகன்றவர்க்கு அருள்செய்யான்**

**இனைய குற்றங்கள் எவர்குற்றம் ஆகும்என்று**
**எண்ணிநீ அறிவாயே.**

குடும்ப பாரம் என்னும் விலங்கு நீங்கிய மைந்தனே, கற்பக மரம், அக்கினி, நீர் என்னும் இம் மூன்றும், முறையே தம்மை அடைந்தோரது வறுமை, குளிர், தாகம் நீக்கிக் காக்கும். (தம்மை அடையாதோரைக் காப்பதில்லை). அதுபோல ஈசுவரனும் தன்னை வழிபட்டவருக்கு அருள் செய்வான். வழிபடாதோருக்கு அருள் செய்யான். இக்குற்றங்கள் எவருடையன என நீ ஆராய்ந்து அறிவாயாக. (இவை சீவனது குற்றங்களே ஆகும்.)

**62. ஒன்று கேள்மக னேபுமான் முயற்சியால் உறைத்துமா னுடர்க்குஈசன்**
**நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே**
**சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச் செனித்தமா யையைத்தள்ளி**
**நின்று ஞானத்தை அடைந்தவர் பவங்கள்போம் நிச்சயம் இதுதானே.**

மகனே! ஒன்று கேட்பாயாக. மோட்சம் அடைவதற்காக, வைராக்கியத்தோடு முயன்று, மக்களுக்கு நன்மை செய்தற் பொருட்டு ஈசுவரன் அருளிச் செய்த சாத்திர நெறியில் ஒழுகி, பெரியோர்களைப் பின்பற்றி நடந்து, மலின வாசனைகளை ஒழித்து, ஆன்ம அநான்ம விவேகம் உடையவராய், அவிவேகத்தால் உண்டான மாயை என்னும் பேத புத்தியை நீக்கி, தமது நிச வடிவில் பிறழாது நின்று, சீவ பிரம்ம ஐக்கிய ஞானத்தை அடைந்தவர்களுக்குப் பிறவிகள் நீங்கும். இதுவே சாத்திரங்களின் நிச்சயமாம்.

**63. இந்த ஞானந்தான் வருவதுஎப் படிஎனில் இடைவிடா விசாரத்தால்**
**வந்து அடைந்திடும் விசாரந்தான் ஏதுஎனின் மனஆதியாம் சரீரத்தில்**
**இந்த நான்எவன் சித்துஎது சடம்எது இரண்டும்ஒன் றாக்கூடும்**
**பந்தம் ஏதுவீடு ஏதுஎன உசாவுதல் பகர்விசா ரம்அதுஆகும்.**

மேற்கூறிய, சீவ பிரம்ம ஐக்கிய ஞானம் உண்டாவது எப்படி என்றால், அது இடைவிடாத, விசுவாசத்தோடு செய்யும் விசாரத்தால் சித்திக்கும். விசாரம் ஆவது யாது என்றால், மனம் முதலாகிய காரண, சூட்சும, தூல சரீரங்களில், 'நான், நான்'' என்று சொல்வது எவன்? சித்தாக இருப்பது எது, சடமாக இருப்பது எது? சித்து, சடம் இரண்டும் ஒன்றாகப் பொருந்துகின்ற பந்தமாவது யாது? மோட்சம் யாது? இவ்வாறு எப்போதும் ஆராய்தலே விசாரமாகும்.

**64. போன சன்மங்கள் தம்மில் அனுட்டித்தநல் புண்ணிய பரிபாகம்**
**ஞானம் ஆக்குமே விசாரம்ஏன் என்றிடில் நாம்உரைத் திடக்கேளாய்**

**ஆன புண்ணியம் ஈசுரார்ப் பணம்செயின் அசுசிபோம் சுசிஆகும்**
**மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவும்என்று அறிவாயே.**

சென்ற பல பிறவிகளில் ஒருவன் செய்துவந்த புண்ணிய கருமங்களின் பலன் ஞானத்தைக் கொடுக்காதா? விசாரம் ஏன் செய்யவேண்டும்? என நீ கேட்பாயாகில், அதற்கான விளக்கத்தைக் கேட்பாயாக. தத்தம் வருண ஆசிரமத்திற்குரிய புண்ணியச் செயல்களை ஈசுவர அர்ப்பணமாகச் செய்தால் (மட்டுமே) மனதின் காமக் குரோதாதிகளான அசுத்தம் நீங்கி, மனம் கண்ணாடிபோலத் தூய்மையாக ஆகும். அத்தகைய மனமே ஆத்ம அநாத்ம விசாரத்தைச் செய்து ஞானம் பெறும் என அறிவாயாக. (புண்ணிய கருமங்கள் மனத் தூய்மை மட்டும் தரும், அன்றி நேரே ஞானத்தைத் தராது.)

**65. பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமும் அணிமாதி**
**சித்தி யும்தவ நிட்டையும் யோகமும் தியானமும் சாரூப**
**முத்தி யும்தரும் விசித்திர கருமங்கள் மோகமாத் திரம்தள்ளும்**
**புத்தி தந்திடல் அருமையோ விசாரம்ஏன் புண்ணிய குருமூர்த்தி.**

ஈசுவர பக்தி, வைராக்கியம், சொர்க்க லோக பிராப்தி, அணிமா முதலிய எண்வகைச் சித்திகளும், தவம், யோகம், தியானம், சாரூப மோட்சம் ஆகிய இவற்றை விசித்திரமான சற்கருமங்கள் கொடுக்கின்றனவே. இந்த கருமங்கள் அஞ்ஞானமாகிய மோகத்தை மட்டும் கெடுக்கும் ஞானத்தை கொடுப்பது அருமையாகுமா? அப்படியிருக்க, விசாரம் செய்வது எதற்கு? தர்ம வடிவமான குருவே இதற்கு விளக்கம் அருளுங்கள்.

**66. வேடம் மாறிய பேர்களை அறியவே வேண்டினால் மகனேகேள்**
**கூடம் ஆம்அவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகள்ஆய்ந்து அறியாமல்**
**ஓடி யும்குதித் தும்தலை கீழ்நின்றும் உயர்ந்தகம் பத்துஏறி**
**ஆடி யும்பல கருமங்கள் செய்யினும் அவர்உண்மை தெரியாதே.**

மகனே கேட்பாயாக, தம் வடிவத்தினை மறைப்பதற்காக, மாறு வேடம் போட்டுள்ளவர்களின் உண்மை அறிவதற்கு, அவர்தம் குணம், ஒழுக்கம், அடையாளம் ஆகியவற்றை விசாரித்து ஆராய வேண்டும். அவ்வாறு அறியாமல், ஓடுதல், குதித்தல், தலைகீழாக நிற்றல், உயர்ந்த கம்பத்தில் ஏறி ஆடுதல் போன்ற இன்னும் பல கடினமான தேவையற்ற செயல்களைச் செய்தாலும் ஒருவனால் அவரது உண்மை வடிவத்தை அறிய முடியாது.

**67.** **இன்ன வாறுஅந்தப் பிரமத்தை அறிவிக்கும் *இலக்கணத் தால்வேதம்**
**சொன்ன ஞானமும் விசாரத்தால் வரும்அன்றிச் சுருதிநூல் படித்தாலும்**
**அன்ன தானங்கள் தவங்கள்மந் திரங்கள்ஆ சாரங்கள் யாகங்கள்**
**என்ன செய்யினும் தன்னைத்தான் அறிகின்றது இவைகளால் வாராதே.**

இதே முறையில் அந்தப் பிரம்மத்தின் உண்மையை, வேதத்தில் கூறப்பட்டுள்ள சொரூபம், தடத்தம், அதத் வியாவிருத்தி என்னும் இலக்கணங்களை விசாரணை செய்து அறியலாகுமே அன்றி, பல சாத்திர நூல்களைப் படித்தல், அன்னதானம், தவம், மந்திர ஜபம், தத்தம் வருணத்திற்குரிய சற்கருமங்களைச் செய்தல், யாங்களைச் செய்தல் என்னும் இவற்றால் தன் உண்மை வடிவத்தை அறியும் ஆத்ம ஞானம் வராது.

**68.** **துளங்கு தர்ப்பண அழுக்குஅறக் கைக்கொண்டு**
**துலக்கினால் போம்அன்றி**
**விளங்கு புத்தியால் உலகில்ஆர் துலக்கினார்**
**விமலதே சிகமூர்த்தி**
**களங்கம் ஆகும்அஞ் ஞானமும் அப்படிக்**
**கருமத்தால் கழுவாமல்**
**உளம்கு றித்தஞா னத்தினால் எப்படி**
**ஒழியும்ஈது அருள்வீரே.**

ஒளிர்கின்ற கண்ணாடியில் உள்ள அழுக்கினை நீக்க கையினால் நன்கு துடைத்தல் என்னும் கர்மத்தால் அது நீங்கும் அவ்வாறன்றி புத்தியால் செய்யும் விசாரத்தால் அதனை நீக்கினவர் உலகில் யார் உள்ளார்கள்? (ஒருவருமில்லை). நின்மலமான குருமூர்த்தியே, அதுபோல் ஆன்மாவை மறைக்கும் அஞ்ஞானமும் புண்ணிய கருமத்தால் நீக்கப்படாது, மனதால் மித்தை என நிச்சயிக்கப்படும் ஞானத்தால் எவ்வாறு நீங்கும்? இதனை விளக்கி அருள் செய்ய வேண்டும்.

**69.** **தர்ப்ப ணத்தினில் களிம்புவாஸ் தவமலம் சகசம்ஆ தலின்மைந்தா**
**கற்ப ளிங்கினில் கருநிறம் சகசமாக் கறுத்தது அன்று ஆரோபம்**

---

* *இலக்கணம் : சொரூபம், தடத்தம், அதத்வியாவிருத்தி என மூன்றாகும். மிகுந்த உஷ்ணப் பிரகாச வடிவமே சூரியன் என்று கூறுவதுபோல, சச்சிதானந்த வடிவமே ஆத்மா என்று விளக்குவதே சொரூப இலக்கணமாம். மரக்கிளையின் நுனியில் இருப்பதாகச் சந்திரனைக் காட்டுவதுபோல, பூதாதி பிரபஞ்ச காரணமாய் இருப்பதாக ஆத்மாவை விளக்குவதே தடத்தி இலக்கணமாம். தேகாதி இந்திரியங்களை யுத்தியில் இது ஆத்மவல்ல, இது ஆத்மாவல்ல என நீக்கி, எஞ்சிநின்ற ஆத்மாவை அறிவிப்பதே அதத்வியாவிருத்தி இலக்கணமாம்.*

**தர்ப்ப ணத்தினில் அழுக்குஅற வேண்டினால் சாதனத்**
**தொழில்வேண்டும்**
**கற்ப ளிங்கில்ஆ ரோபமே கறுப்புஎன்று கண்டிட மனம்போதும்.**

செம்பு கண்ணாடியில் களிம்பு உண்மையாக படிந்து சுபாவமாகவே இருப்பதாம். அதனால் களிம்பை நீக்குவதற்கு சாதனமாகிய செயல் வேண்டியுள்ளது. ஆனால் மகனே, பளிங்கினில் தெரியும் கறு நிறம், உண்மையாகக் கறுத்து இருப்பது அன்று. அதில் மித்தையாகத் தோன்றுவதாம். அதனால் பளிங்கினில் கறு நிறம் பொய்த் தோற்றமே என்று அறிய மனதினால் விசாரணை செய்தால் மட்டுமே போதும். (வேறு ஒரு செயலும் வேண்டுவதில்லை.)

**70. இங்கும் அப்படிச் சச்சிதா னந்தத்தில் இடர்சடம் பொய்மூன்றும்**
**தங்கும் மாயையின் கற்பிதம் அன்றியே சகசவாஸ் தவம்அன்றே**
**பங்கம் ஆகும்அஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெயாது உறவுஆக்கும்**
**துங்க ஞானமே கருமஅஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப்புஆமே.**

முன் கூறிய உபமானத்தைப் போல, சச்சிதானந்த வடிவ ஆன்மாவில் தோன்றும் அசத்து சடம் துக்கம் எல்லாம் மாயா கற்பிதமே யன்றி சுபாவமும் அன்று சத்தியமும் அன்று. புண்ணிய கருமங்கள் ஈனமான அஞ்ஞானத்தைப் பகைத்துக் கெடுக்காது உறவாகச் செய்யும். மேலான சீவ பிரம்ம ஐக்கிய ஞானமே சஞ்சித கருமத்தையும் அஞ்ஞானத்தையும் எரித்துக் கெடுக்கவல்ல தீயாகும். (ஆத்மாவிடத்து தேகாதிப் பிரபஞ்சம் கற்பிதமாகத் தோன்றுகிறது. இதனை நீக்காது. புண்ணிய கர்மங்கள் மேலான ஞானமே நீக்கும்.)

**71. மனைக்குள் வைத்த பண்டங்களை மறந்தவன் வருடம்நூறு அழுதாலும்**
**நினைத்து உணர்ந்தபின் கிட்டும்அப் படிஇந்த நின்மல ஆன்மாவும்**
**அனர்த்தம் ஆனதன் மறதியைக் கெடுத்துத்தன் அறிவினால் காணாமல்**
**கனத்த கர்மங்கள் நூறுஉகம் செய்யினும் காணுமோ காணாதே.**

தன் வீட்டிற்குள் மறைத்து வைத்த பொருளை மறந்து போனவன், நூறாண்டு காலம் அழுவதால் மட்டும் அவை கிடைக்காது. ஆனால் அவற்றை வைத்த இடத்தைப் பற்றிச் சிந்தித்து அறிவதால் கிடைக்கும். அதுபோலவே, மறதியை விசாரத்தால் நீக்கி, தன் அறிவினால் தான் சச்சிதானந்தன் என்று நிச்சயம் செய்ய வேண்டும். அவ்வாறின்றி

பெரும் புண்ணிய கருமங்களை நெடுங்காலம் செய்தாலும் ஆத்மா காணப்படாது.

**72. நன்மை ஆம்குரு வேசுகம் தருவது ஞானமே எனும்வேதம்**
**தன்ம பாவம்மிச் சிரங்களால் தேவர்கள் தருவிலங் குகள்மாந்தர்**
**சென்மம் ஆகுவ சாதிஆ சாரமே செய்தவம் சுகம்என்று**
**கன்ம காண்டத்தில் விதித்ததுஎன் விதித்துஉள காரணம் உரையீரே.**

குருவே! பரமானந்த சுகத்தைத் தருவது சீவ பிரம்ம ஐக்கிய ஞானமே எனக் கூறும் அதே வேதம், புண்ணிய பாவ, மிசிர கர்மங்களால் முறையே தேவர், விலங்கு, தாவரங்கள் மற்றும் மனிதப் பிறவிகள் உண்டாகுமென்றும், தத்தம் சாதிக்குரிய ஒழுக்கமே தவமாகும் என்றும், அத்தகைய கர்மத்தால் சுகம் உண்டாகும் என்றும் கர்ம காண்டத்தில் விதித்து இருப்பதன் காரணத்தைக் கூறியருள வேண்டும்.

**73. தினமும் மண்நுகர் பிள்ளைநோய்க்கு இரங்கியே**
**தீம்பண்டம் எதிர்காட்டிக்**
**கனம் ருந்துகள் ஒளித்துதவைத்து அழைக்கின்ற**
**கருணைநற் றாய்போலே**
**மனைஅ றங்கள்செய் மகங்கள்செய் நன்றுஎன்று**
**மலர்ந்தவா கம்சொல்லும்**
**நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகள்அந்த**
**நிண்ணயம் தெரியாரே.**

தினமும் மண் உண்டதால் நோய்வாய்ப்பட்ட தன் குழந்தைக்கு, மனமிரங்கி, இனிப்புத் தின்பண்டங்களை எதிரே காட்டி நல்ல மருந்துகள் மறைத்து வைத்து உண்ண அழைக்கும் தாயின் கருணைபோல, இல்வாழ்க்கைக்கு உரிய தருமங்கள், யாகங்கள் போன்ற நற் கருமங்களைச் செய்வதால் சுகம் உண்டாகுமென வேதம் கூறுவதன் கருத்து வேறு ஆகும். சுவர்க்க போகங்களில் விருப்பம் உடையவர்கள் அக்கருத்தை அறிய மாட்டார்கள்.

**74. போகம் ஆர்உயிர் கண்டதை உண்பதும் புணர்வதும் இயல்பேகாண்**
**ஆக மங்களும் சுபாவத்தை விதிக்குமோ அத்தனை தெரியாதோ**
**காக மேகறுத் திடுநெருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ**
**வேக வாயுவே அசைஎன ஒருவரும் விதித்திடல் வேண்டாவே.**

போகத்தை அனுபவிக்கும் சீவர்கள் கண்டதை உண்பதும், எதிர்ப்பட்ட பெண்ணைப்

புணர விரும்புவதும் இயல்புதான். சீவருக்கு இயல்பானதை, அவர்களுக்கு விதிக்க வேண்டியதில்லை என்பது வேதத்திற்குத் தெரியாதா? (அது எதுபோல எனில்) காக்கையை நீ கருப்பாகு என்றும், நெருப்பைச் சுடு என்றும், வேம்பினைக் கசப்பாய் என்றும், காற்றினை அசைவாயாக என்றும் யாரேனும் அவற்றிற்கு (இயல்பான குணத்தை) விதிக்க வேண்டியதில்லையே.

**75.** **கள்ளும் ஊனும்நீ விரும்பினால் மகங்கள்செய்**
**காமத்தின் மனதுஆனால்**
**கொள்ளும் பெண்டொடு கலவிசெய் எனில்இவன்**
**குறைஎலாம் தொடான்என்றே**
**தள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும்**
**தவிர்வதே கருத்துஆகும்**
**விள்ளும் இவ்விதி என்எனில் பூருவ**
**நியமம்ஆம் விதிஅன்றே.**

மது மாமிசங்களை நீ விரும்பினால், யாகங்கள் செய்து உண்பாயாக. காமத்தில் மனம் சென்றால், மணம் செய்துகொண்டு மனைவியிடம் கலவி செய். இவ்வாறு விதித்தால் இவன் மனம் போனபடியெல்லாம் நடவாது தவிர்ப்பான் என்பது கருத்தாம். இது வேத முன் பகுதியான கர்ம காண்ட நியமம் மட்டுமே. இது இறுதியான ஞான காண்ட முடிவு அல்ல. சகலமும் விட்டு ஒழிப்பதே வேத சம்மதமாம்.

**76.** **மதுஇ றைச்சிகள் உண்என்ற சுருதிபின் மணந்துபார் எனல்பாராய்**
**மிதுன இச்சையும் புத்திரஉற் பத்தியால் விரும்புஎன்ற விதிபாராய்**
**இதையும் விட்டுஒழி அதிநயிட் டிகவந்நிக்கு இகழ்ச்சிஅற் றதும்பாராய்**
**அதைஅ றிந்துகன் மங்கள்ஆ சைகள்ஒழிந்து ஆனந்தம் அடைவாயே.**

மது மாமிசங்களை யாகம் செய்து உண்பது தகும் என்ற வேதம், பின்னர் அவற்றைப் புசிக்காது மோந்து மட்டும் பார் என்பதையும், மனைவியுடன் மட்டும் புணர்ச்சி பற்றிக் கூறிவிட்டு, பின்னர் அதனைச் சற்புத்திரருக்காக மட்டும் விரும்பு எனவும் கூறியுள்ளதைக் காண்பாய். இதனையும் கூட விட்டுவிட்ட சந்நியாசி, நயிஷ்டிகப் பிரம்மச்சாரி போன்றோருக்கு உலகில் பழியேதும் இல்லாததையும் பாராய். இவ்வாறு கூறிய வேதத்தின் உட்கருத்தைப் புரிந்து கொண்டு கர்மங்கள், ஆசைகள் எல்லாம் ஒழித்து விட்டு (தத்துவ ஞானத்தால்) உண்மையான ஆனந்தம் பெறுவாய்.

**77.** **உலகம் ஆனஅஞ் ஞானமும் கருமமும் உறவுஎன்ற வழிகூடும்**
**பலவும் ஆனஅஞ் ஞானமும் ஞானமும் பகைஎன்பது உளதுஆனால்**
**நிலவி லேமறுப் போலஅஞ் ஞானமும் நிமலஞா னத்தோடே**
**குலவி நின்றுஇந்தச் சிருட்டிகள் செய்யவும் கூடுமோ குருமூர்த்தி.**

உலக வடிவமாகப் பரிணாமத்தை அடைந்த அஞ்ஞானமும், யாகாதி கர்மங்களும் தம்முள் விரோதமின்ற இருக்கின்றன என்பது பொருத்தமே. பலவாறான நாமரூபங்களுடைய அஞ்ஞானமும் விகாரமே இல்லாத பிரம்மமும் தம்முள் வேறுபட்டிருப்பதும் உண்மை ஆனால், சந்திரனிடத்துக் களங்கம் போல அஞ்ஞானமானது பிரம்மத்துடன் கூடி நின்று இவ்வுலகத்தை படைப்பது எவ்வாறு கூடும்?

**78.** **சொரூப ஞானமும் விருத்திஞா னமும்என்று**
**சோதிஞா னமும்இரண்டாம்**
**சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த்**
**தோன்றும்வேறு இலைமைந்தா**
**சொரூப ஞானஅஞ் ஞானசத் துருஅன்று**
**சுழுத்தியில் கண்டாயே**
**சொரூப ஞானத்தின் மருவும்அஞ் ஞானத்தைச்**
**சுடும்விருத் தியின்ஞானம்.**

மைந்தனே! பிரகாசமான ஞானமானது, சொரூப (சாமான்ய) ஞானம், விருத்தி (விசேஷ) ஞானம் என இருவகைப்படும். சொரூப ஞானமே விருத்தி ஞானமாக மாறுகின்றது. அங்ஙனம் மாறித் தோன்றினாலும் அவை வெவ்வேறு அல்ல. சுழுத்தி நிலையில் ஆத்மாவினிடத்து அஞ்ஞானம் விளங்குவதை நீ கண்டிருக்கிறாயே. அதலால் சொரூப ஞானம் அஞ்ஞானத்திற்குப் பகையானது அல்ல. ஆனால் சொரூப ஞானத்தின் கண் கற்பிதமாக உள்ள அஞ்ஞானத்தை விருத்தி ஞானம் கெடுக்கும். ஆதலால் விருத்தி ஞானமே அஞ்ஞானத்திற்கு விரோதி என்று அறிவாயாக.

**79.** **துருத்தி மாயையைச் சுழுத்தியில் சுடாததற் சொரூபஞா னந்தானே**
**விருத்தி ஞானமாய்ச் சுட்டதுஎப் படிஎனில் வெய்யிலால் உலகுஎங்கும்**
**பரித்த சூரியன் சூரிய காந்தத்தில் பற்றிஅக் கினிஆகி**
**எரித்த வாறுபோல் சமாதியில் விருத்தியால் எரிக்கும்என்று அறிவாயே.**

துருத்தியைப் போன்று குவிந்து விரியும் இயல்புடைய அஞ்ஞானத்தை நித்திரையில்

கெடுக்காத சொரூப ஞானமானது, விருத்தி ஞானமாய் மாறியபோது கெடுக்கிறது. இது எப்படி எனில், தனது கிரணங்களால் உலகு எங்கும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் சூரியன் எப்பொருளையும் எரிக்காது. ஆனால் சூரியகாந்தக் கல்லில் பொருத்திய சூரிய கிரணங்கள் அக்கினியாகத் தோன்றிப் பொருள்களை எரிக்கிறது. அதுபோல, சமாதி நிலையில் விருத்தி ஞானம், அக்கினி போன்று அஞ்ஞானத்தை எரிக்கும். (இருத்தல், விளங்குதல் வடிவமாய் எங்கும் வியாபித்துள்ள சொரூப ஞானமும் எதனையும் கெடுக்காது. சமாதியில் அகம் பிரம்மம் என்னும் விருத்தி ஞானமாகத் தோன்றி, அதனால் அஞ்ஞானத்தை கெடுக்கும் என்று அறிவாய்.)

**80. அருளும் ஐயனே திரிவித கரணத்தால் ஆகிய தொழில்எல்லாம்**
**கருமம் அல்லவோ விருத்திஞா னமும்அந்தக் கரணகா ரியம்அன்றோ**
**உரிய கர்மம்அஞ் ஞானத்தைக் கெடுக்கும்என்று ஓதினால் ஆகாதோ**
**பெரிய ஞானம்என்று அதற்குஒரு பெயர்இட்ட பெருமையை உரையீரே.**

என் வினாக்களுக்கு எல்லாம் தகுந்த விடையருளும் குருவே! மனம், வாக்கு, காயம் என்னும் மூவித கரணங்களால் செய்யப்படுவன எல்லாம் கர்மங்கள் அல்லவா? நான் பிரம்மம் என்னும் விருத்தி ஞானமும் மனதின் கர்மம் அல்லவா? ஆதலால் மோட்ச சாதனமான விருத்தி ஞானம் மனதின் கர்மம் என்றும், இக்கர்மமே அஞ்ஞானத்தைக் கெடுத்தது என்று ஏன் சொல்லக்கூடாது? கர்மம் என்று கூறாது, விருத்தி ஞானம் என்னும் தனிப் பெயரிட்ட பெருமைக்குக் காரணம் யாதோ?

**81. விருத்தி ஞானம்அந் தக்கர ணத்தோடு விருத்திஆ கிலும்மைந்தா**
**ஒருத்தி மக்களே தங்களில் பகைக்கின்றது உலகுஎங்கும் கண்டோமே**
**கருத்தன் ஆகிய புருடதந் திரங்களாம் கருமங்கள் அவைபோல**
**வருத்த ஞானமோ புருடதந் திரம்அன்று வஸ்துதந் திரம்ஆமே.**

மைந்தனே! அகம்பிரம்மம் என்னும் விருத்தி ஞானமும் அந்தக் கரணத்தின் காரியமே ஆகும். ஒரே தாயின் புத்திரர்கள் தம்முள் பகைத்திருப்பதை உலகில் காண்கிறோம். அதுபோல, அந்தக்கரண காரியங்களான தியான முதலிய கருமங்களும், விருத்தி ஞானமும், தம்முள் பகையாக இருக்கின்றன. கருமம் என்பது, சீவன் தன் விருப்பப்படி, கருமத்தைச் செய்வோ, செய்யாதிருக்கவோ இயலும். இது புருடனைச் சார்ந்ததாம். ஆனால் விருத்தி ஞானத்தைப் புருட தந்திரம் எனப்படுவதில்லை, வஸ்துவைச் சார்ந்தது எனப்படும். (விருத்தி ஞானம் பொருளைச் சார்ந்தது ஆகும். ஒரு பொருளைக் கண்டதும்

ஞானம் அவசியம் உண்டாகும்.)

**82. வகுத்த கர்மங்கள் செய்யவும் தவிரவும் மற்றுஒன்றுஆக் கவும்கூடும்
மிகுத்த ஞானம்அப் படிஅன்று தியானமும் விவேகஞா னமும்வேறே
செகத்தில் ஒன்றைஒன் றாஇவன் பாவிக்கும் தியானம்கற் பிதயோகம்
முகத்த மாக்கண்ட ஞானமே வாஸ்தவ மோகமாய் மயங்காதே.**

சாத்திரங்களில் விதித்த கர்மங்களைச் செய்யவோ, செய்யாதிருக்கவோ, மற்றொரு விதமாகச் செய்யவும் கூடும். மேலான ஞானமானது அவ்வாறல்ல (சீவன், தன் பிரியம் போலச் செய்யவும் தவிரவும் இடம் கொடாது). ஆதலால், தியானம் என்னும் கர்மமும் விவேகம் எனும் ஞானமும், அந்தக் கரண காரியமேயானாலும், தம்முள் வேறுபட்டன. உலகில் ஒன்றை மற்றொன்றாக சீவன் பாவிக்கும் (வேல் பூசையை முருக பூசையாக பாவிப்பது போல) தியானம் கற்பிதமாகும். பிரத்தியட்சமாக அறிந்த ஞானமே உண்மையாகும். ஆதலால் இவை இரண்டிற்கும் உள்ள பேதத்தை அறிந்து மயக்கத்தை நீக்குவாயாக.

**83. கண்டு அறிந்தது ஞானம்கேட் டதுதனைக் கருதுபா வனையோகம்
கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோம் கண்டது மறவாதே
கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்பொய் கறுவிஅஞ் ஞானத்தைக்
கண்ட அக்கணம் கொல்வது ஞானமே கருமம்அன்று அறிவாயே.**

ஞானம் அனுபவ அறிவு ஆகும். பிறர் சொலக்கேட்டு, அதனை அவ்வாறே பாவிப்பது தியானத்தின் இயல்பு ஆகும். மற்றவர் அறிந்ததை, அவர் சொல்லி கேட்பதை நாம் மறந்து விடக்கூடும். ஆனால் நாம் அனுபவத்தில் அறிந்ததை மறப்பதில்லை. ஆதலால் அனுபவித்து அறிந்ததே உண்மையாகும், தியானிக்கப்படுவன பொய்யாகும். அஞ்ஞானத்தைச் சினந்து, அதனைக் கண்ட அப்போதே கெடுப்பது விருத்தி கர்மங்கள் அல்ல என அறிவாயாக.

**84. சருவ முத்தியைத் தருகின்ற தியானமும்
சத்தியம் அன்றுஎன்றால்
சருவ முத்தியும் சத்தியம் அன்றுஎன்று
சங்கியா தேநீகேள்
உருவம் கேட்டவன் தியானிக்கும் பொழுதில்அவ்
உருவம்வாஸ் தவம்அன்றே**

**உருவம் ஆகும்அப் பொழுதுகண் ணால்கண்ட**
**உருவம்வாஸ் தவம்ஆமே.**

முத்தியைத்தரக்கூடிய 'சர்வமும் பிரம்மம்' என்னும் தியானத்தையே உண்மை அன்று எனக் கூறியதால், எல்லா துக்கத்திற்கும் நிவர்த்தியான முத்தியும் உண்மையன்று என நீ சந்தேகிக்காதே. அதற்கான சமாதானத்தைக் கேட்பாயாக. பிரம்ம வடிவத்தைப் பெரியோர்கள் உபதேசிக்கக் கேட்டவன், அதனை தியானம் செய்யும்போது அது பாவனை மாத்திரமாய் இருத்தலால் உண்மை அல்லவாம். அத்தியானத்தின் முதிர்ச்சியால் பிரத்தியட்சமாக அப்போது அறிந்த பிரம்ம வடிவம் சத்தியமாகும்.

**85 சடமது ஆகிய தியானம்மெய் ஆகிய சர்வமுத் தியைநல்கும்**
**திடமது ஆனதுஎப் படிஎனில் அவர்அவர் தியானமே பிறப்புஆகும்**
**உடலம் ஆசையால் தியானிக்கில் தியானித்த உடல்கள்ஆ குவர்மைந்தா**
**தொடர்ப வம்கெடச் சொரூபமே தியானிக்கில் சொரூபம்ஆ குவர்மெய்யே.**

பொய்யான நிர்க்குண தியானமானது உண்மையான முத்தியைத் தரக்கூடிய சாமர்த்தியம் உடைத்தாய் இருப்பது எப்படி என்றால், மரணகாலத்து, ஒவ்வொருவரும் தியானிக்கும் பாவனையை ஒத்தே மறுபிறவி அமையும். மறுபடி உடலை வேண்டித் தியானித்தால், விரும்பிய உடலைப் பெறுவர். தொன்று தொட்டு வரும் பிறவி மீண்டும் வராதவாறு பிரம்ம சொரூபத்தைத் தியானித்தால், பிரம்ம சொரூபமே ஆவார்கள். இது சத்தியமாம்.

**86. பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமம்ஆ குவர்என்றால்**
**நரச ரீரம்ஆம் குரவனே விசாரம்ஏன் ஞானம்ஏன் என்னாதே**
**பரம பாவனை பரோட்சம்ஆம் பின்புஅந்தப் பரோட்சமே அபரோட்சம்**
**திரவி சாரம்ஆம் ஞானம்ஆம் முத்திஆம் தீர்வைஈது அறிவாயே.**

மனித வடிவில் எழுந்தருளியுள்ள குருவே! பிரம்ம சொரூபத்தைத் தியானித்தவர் எல்லாம் பிரம்மம் ஆகுவர் என்றால், விசாரம் எதற்கு? அதன் பயனான ஞானம் எதற்கு என்று நீ கேட்பாயாகில், பிரம்மத் தியானம் முதலில் பரோட்ச ஞானம் ஆகும். பின்னர், அந்தப் பரோட்ச ஞானமே, தியானம் திடப்படத்திடப்பட, பிரத்தியட்ச ஞானம் (அபரோட்சம்) ஆகிறது. அபரோட்சம், விசாரத் தெளிவினால் உண்டாவதால் (அஞ்ஞானத்தைக் கெடுக்கும்) உண்மை ஞானமும், மோட்சமும் ஆகும் என முடிந்த முடிவை அறிவாயாக.

**87.** **வீடுஅது ஆம்பரி பூரண சொரூபத்தில் விருத்திஞா னமும்கூடிச்**
**சேடம் ஆகினால் அகண்டம்ஆம் அனுபவ சித்திஎப் படிஎன்றால்**
**சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றாம்பொடி தானும்மண் ணொடுமாயும்**
**ஊடி ஞானமும் அறிவுஇலா மையைக்கெடுத்து ஒக்கவே கெடும்தானே.**

பரிபூரணமான முத்தி நிலை என்னும் பிரம்ம சொரூபத்தில் அந்தக்கரண வடிவான விருத்தி ஞானம் கூடினால், அகண்ட பிரம்ம சொரூபன் என்னும் அனுபவம் சித்திப்பது எவ்வாறு எனில், குடத்து நீரிலுள்ள கலங்கலை நீக்குதற்குப் பயன்படுத்தப்பட்ட தேத்தாங்கொட்டைப் பொடியானது, சேற்றோடு தானும் சேர்ந்து கெடுவதுபோல, அஞ்ஞானத்தைப் பகைத்துக் கெடுத்த விருத்தி ஞானமும், அந்த அஞ்ஞானத்துடனேயே நாசமாகிவிடும். (ஆதலால் அகண்டானுபவம் சித்திப்பதற்கு யாதொரு தடையும் இல்லையாம்.)

**88.** **இந்த நிச்சய முத்தருள் அனுபவம்**
**இருப்பதுஎப் படிஎன்றால்**
**சிந்தை அற்றபூ மண்டலஇ ராசனும்**
**சிசுவும்போல் சுகம்ஆவர்**
**பந்த முத்திகள் மறந்துபோம் உண்டுஎன்று**
**பலர்சொலின் நகைஆவர்**
**அந்த ரத்தைஉண்டு உமிழ்ந்ததுஓர் கொசுஎனும்**
**அவர்களை நகையாரோ.**

திடமான இந்த அகண்ட அனுபவம் சீவன் முத்தரிடத்து எத்தகையதாக இருக்கும் எனில், தன் நாட்டிற்குக் குறையேதும் இல்லை என்பதால் கவலையற்ற சக்கரவர்த்தி போலவும் மற்றும் சிறு குழந்தை போலவும், ஆனந்த வடிவமாயிருப்பர். தமக்கு அஞ்ஞானத்தால் பந்தம் உண்டாகி இருந்தது, ஞானம் பெற்றதால் மோட்சம் கிடைத்தது என்பனபோன்ற நினைவுகள் கூட இன்றி இருப்பார்கள். பந்தம் மோட்சம் உண்டு என்னும் உண்மையைக்கூட மறந்து மற்றவர் அதைக் கூறினால் நம்பாது 'ஆகாயத்தை ஒரு கொசு உண்டு உமிழ்ந்தது'' எனக் கூறுவாரை நோக்கி நாம் நகைப்பது போல, நகைப்பார்கள்.

**89.** **மலடி மைந்தனும் தாணுவில் புருடனும் வான்மலர் முடிசூடி**
**இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை இரசதம் விலைபேசிக்**
**கலகம் ஆய்முயல் கொம்பினால் குத்தியே களைத்துஇரு வரும்மாண்டார்**
**அலகை ஆயினார் எனும்விவ காரத்தை அறிந்தவன் மயங்கானே.**

மலடி ஈன்ற மகனும், மரக்கட்டையில் தோன்றிய கள்வனும், ஆகாயத் தாமரைப் பூவைத் தலையில் சூடிக்கொண்டு கந்தர்வ நகரம் சென்று, அங்கு ஒரு கடையில் கிளிஞ்சல் வெள்ளியை வாங்குவதற்கு விலைபேசி, அதனால் தமக்குள் பிணக்கு உண்டாகி முயல் கொம்பினால் ஒருவரை ஒருவர் குத்திக் கொண்டு களைத்து, பின் இருவரும் மாண்டு போய், (அகாலத்து இறந்தமையால்) பேயாக மாறி அலைகிறார்கள் என்னும் வழக்கினைக் கற்பனை என அறிந்து தெளிந்தவன் மயங்க மாட்டான். (அதுபோல, பிரம்மம் சத்தியம், பிரபஞ்சம் மித்தை என்பதை அறிந்து தெளிந்தவன், பொய்யான உலகத்தில் மயங்க மாட்டான்.)

**90. மாயை என்பது பொய்எனில் அதுபெற்ற வகைஎலாம் பொய்ஆமே**
**தாயை அன்றிமக் களுக்குஒரு பிறவியும் சாதியும் வேறுஉண்டோ**
**சேய சொர்க்கமும் நரகமும் நன்மையும் தீமையும் பாராமல்**
**தூய சத்துச் சித்து ஆனந்த பூரண சொரூபமாய் இருப்பாயே.**

தாயின் பிறப்பு மற்றும் சாதிக்கு வேறாக, அவள் குழந்தைகளுக்குப் பிறப்பு, சாதி என்பன இல்லாதது போல, மாயை என்பது பொய்யானால், மாயையில் பிறந்த பிரபஞ்சம் ஈசுவரன், சீவன் யாவும் பொய்யே. ஆதலால் சேய்மையான சொர்க்கம், நரகம், நன்மை, தீமை, புண்ணியம், பாவம் எல்லாம் பாராமல், அவற்றைப் பொய்யாக உணர்ந்து, நீ தூய பரிபூரண சச்சிதானந்த வடிவினனாய் இருப்பாயாக.

**91. பங்க யாசனன் முதல்பல தேவரும் பார்உள பெரியோரும்**
**கங்கை ஆதியாம் தீர்த்தமும் தேசமும் காலமும் மறைநாலும்**
**அங்கம் ஆறுமந் திரங்களும் தவங்களும் அசத்தியம் எனச்சொன்னால்**
**எங்கள் நாயக னேஅத னால்குற்றம் இல்லையோ மொழியீரே.**

பிரம்மன் முதலான பற்பல தேவர்களும், உலகிலுள்ள பெரியோர்களும், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்கள் மற்றும் புண்ணிய க்ஷேத்திரங்கள், விரத காலங்கள், நான்கு மறைகள், ஆறு வேத அங்கங்கள், மந்திரங்கள், தவங்கள் எல்லாம் பொய் எனக் கூறுவது குற்றம் இல்லையா? எங்கள் குருவே விளக்கியருளல் வேண்டும். (மேற்கண்ட உபாசனைகள் பதமுத்தி தருவன என்று பக்திகாண்டம் கூறுகிறது. சுருதி கூறுவது பொய்யாகுமா என சீடன் வினவுகிறான்.)

**92. சொற்ப னம்தனில் கண்டதைப் பொய்என்று சொல்வது பிழையானால்**
**அற்ப மாயையில் தோன்றிய சகங்களை அசத்துஎனல் பிழைஆமே**

**சொற்ப னந்தனில் கண்டதைப் பொய்என்று சொல்லலாம் எனில்மைந்தா**
**அற்ப மாயையில் தோன்றிய சகம்எலாம் அசத்தியம் எனல்ஆமே.**

சொப்பனத்தில் காணப்பட்ட பிரபஞ்சத்தை, விழித்தவன் பொய் என்று கூறுவது குற்றமானால், அற்பமான மாயையில் உண்டான பிரபஞ்சத்தைப் பொய் என்று கூறுவது குற்றமாகும். சொப்பனத்தில் கண்டதைப் பொய் என்று ஒருவன் விழித்தபின் கூறுவது எவ்வாறு குற்றமாகாதோ, அதுபோலவே, அற்பமான மாயையில் உண்டான பிரபஞ்சம் எல்லாம் பொய் எனக் கூறலாம். (அஞ்ஞானிக்கு மட்டுமே பிரபஞ்சம் உண்மையாகத் தோன்றும்.)

93. **பொய்யை மெய்என்ற மூடர்புண் ணியர்என்று புராணம்கூப் பிடும்ஆனால்**
**மெய்யை மெய்என்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்தசாத் திரம்உண்டோ**
**பொய்யது ஏதுஎனில் நாமரூ பங்களாம் பூதம்ஆ கியமாயை**
**மெய்யது ஏதுஎனில் சச்சிதா னந்தமாய் வியாபிக்கும் ஆன்மாவே.**

ஞான காண்டத்தில் பொய் என்று விலக்கப்பட்ட சொரூபாதிகளை உண்மை என வழிபடுவோரைப் புண்ணியவான்கள் என புராணங்கள் கூறுகின்றன. ஆனால் பிரம்மம் மட்டுமே சத்தியம் என்னும் உண்மையைச் சாதிக்கும் ஞானியைக் குற்றம் கூறுக்கூடிய சாத்திரம் ஏதேனும் உண்டா? (இல்லை). பொய்யானது ஏதெனில், பஞ்சபூதங்கள் மற்றும் நாம ரூபங்கள் ஆன பிரபஞ்ச வடிவமான மாயை ஆகும். உண்மை ஏதெனில் சச்சிதானந்த வடிவாய் எங்கும் வியாபித்திருக்கும் ஆன்மாவே ஆகும். (அஞ்ஞானம் ஒழிந்த ஞானிக்கு யாவும் பிரம்ம சொரூபமாகவே விளங்கும்).

94. **மாயை என்பதுஏது உடையர்ஆர் எப்படி வந்தது வருவானேன்**
**மாயை என்பது பிரமத்தின் வேறுஎனின் வஸ்துவும் இரண்டுஆமே**
**மாயை என்பதும் பிரமமும் ஒன்றுஎனின் வஸ்துவும் பொய்ஆமே**
**மாயை என்றமே கங்களுக்கு ஒரு*சண்ட மாருத குருமூர்த்தி.**

மாயை எனச் சொல்லப்படுவது எத்தகையது? அதனை உடையவர் யார்? அதன் உற்பத்தி எப்படி? அது எக்காரணத்தால் வந்தது? மாயை, பிரம்மத்தினினும் வேறானது எனில் (பிரம்மம் ஏகம் என்பதன்றி) இரண்டு பொருள்கள் ஆகுமே? (அத்வைதம் சித்திக்காதே), அல்லது மாயையும் பிரம்மமும் ஒன்றே எனில், பிரம்மமும் மாயையைப் போல பொய் ஆகுமே? மாயை என்னும் மேகங்களை அகற்ற வந்த சண்ட மாருதமான

---

** சண்ட மாருதம் = பெருங்காற்று*

குருமூர்த்தியே. (இவற்றை விளக்கி அருளுங்கள்.)

**95.** **அதனை இன்னதுஎன்று உரைத்திடப் படாமையால்**
**அவாச்சிய வடிவுஆகும்**
**இதுத னக்குஉளது உடல்யான் உலகுமெய்**
**எனும்அவர் உடையோர்கள்**
**கதைஇ லாதபொய் வந்ததுஇப் படிஎன்று**
**கண்டபேர் இலைமைந்தா**
**விதன மாயைஏன் வந்ததுஎன் றால்புத்தி**
**விசாரம்அற் றதனாலே.**

அந்த மாயையின் சொரூபம் எத்தகையது என்று கூறமுடியாது. ஆதலால் அது அவாச்சியம் ஆகும் (வார்த்தைகளால் விளக்க முடியாதது). இந்தப் பொருள்கள் என்னுடையன, சரீரமே நான் என்னும் அபிமானமும், உலகம் சத்தியம் என்னும் மயக்கமும் உடையோர்களே மாயை உடையவர்கள். வார்த்தைகளால் சொல்ல இயலாத மாயையைக் கண்டவர் யாரும் இல்லை. மைந்தனே, துன்பம் தரும் இம்மாயை எக்காரணத்தால் வந்தது என்றால், புத்தியானது விசாரணை செய்யாததினால் எனலாம்.

**96.** **அருவம் ஆகும்மா யாவிவித் தைகள்விளை யாடுமுன் தெரியாவே**
**உருவம் ஆம்பல கந்தர்ப்ப சேனையாய் உதித்தபின் வெளிஆகும்**
**பிரம சத்திகள் அநந்தம்ஆம் அதைக்கண்டு பிடித்திடல் கூடாதே**
**பரவு பூதங்கள் கண்டுஅநு மானத்தால் பலருக்கும் வெளியாமே.**

இந்திர ஜாலக்காரனது உருவமற்ற வித்தைகள், அவன் விளையாடுவதற்கு முன்னதாக தெரியமாட்டா. ஆனால் பற்பல விசித்திர உருவங்களாலான கந்தர்வ சேனைகளாகத் தோன்றும் போது அவற்றை எல்லோரும் காணலாம். அதுபோல, பிரம்மத்தின் மாயா சக்திகள் அளவற்றன. அவற்றைக் காண இயலாது. ஆனால் எங்கும் பரவியுள்ள பஞ்ச பூதங்களைக் காண்பதால், பிரம்மத்திற்குச் சக்திகள் உண்டு என அனுமானிக்கலாம்.

**97.** **காரி யங்களும் சத்தி ஆதாரமும் காணும்மற்று அதுமாயம்**
**பாரில் நின்றமா யாவியும் சேனையும் பார்ப்பவர் கண்காணும்**
**வீரி யம்திகழ் வித்தைஆ யினசத்தி வெளிப்படா ததுபோலே**
**பேர்இ யல்பிர மத்துக்கும் உலகுக்கும் பிறிதுசத் திகள்உண்டே.**

உலகிலுள்ள இந்திர ஜாலக்காரனும் அவன் தோற்றுவித்த கந்தர்வ சேனைகளும், காண்போர்க்குப் பிரத்தியட்சமாகத் தோன்றும். ஆனால் அதனைச் செய்வித்த சக்தியானது கண்களுக்குப் புலப்படாது. அதுபோல, மாயா சக்தியின் காரியமாகிய நாமரூப உலகமும், ஆதாரமான பிரம்மமும் காண்போர்க்குப் பிரத்தியட்சமாகும். ஆனால் மாயா சக்தியானது புலப்படாது. ஆதலால் ஆதாரமாகிய பிரம்மத்திற்கும் அதன் காரியமாகிய பிரபஞ்சத்திற்கும் வேறாக அளவிறந்த சக்திகள் உண்டு.

**98. சத்தி சத்தனைத் தவிரவேறு அன்றுகாண் சத்தனாம் மாயாவி**
**வித்தை காட்டிய இந்திர சாலம்பொய் வித்துவான் மெய்போலப்**
**புத்தி மைந்தனே சத்திமான் ஆகிய பூரண ஆன்மாவின்**
**வத்து நிர்ணயம் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே.**

இந்திரஜால சக்தியானது அதனை உடைய இந்திரஜாலக்காரனிலும் வேறு அன்று. அவன் காட்டிய வித்தையான இந்திரஜாலம் என்பது பொய். ஆனால் இந்திரஜாலக்காரன் மெய். அதுபோல, அறிவுள்ள மைந்தனே, சொல்லிய உதாரணத்தின் வாயிலாக, சர்வ சக்தியுடைய பரிபூரணமான ஆன்மா மெய்யென்றும், அதன் காரியமான பிரபஞ்சம் பொய் என்றும், பிரம்மத்தை நிச்சயம் செய்து தெளிவாக அறிவாயாக.

**99. இல்லை ஆகிய சத்தியை உண்டுஎன்பது எப்படி எனக்கேட்கில்**
**புல்லை ஆதியாம் அசேதனப் பொருள்எலாம் பூத்துக்காய்ப் பனபாராய்**
**நல்லை யாமக னேஅதில் சிற்சித்தி நடந்திடாது இருந்தக்கால்**
**தொல்லை யாய்வரும் சராசர உயிர்க்குஎலாம் சுபாவங்கள் வேறுஆமே.**

பிரம்மத்திற்கு வேறாக ஏதுமில்லை என்று கூறிவிட்டு சக்தி உண்டு எனக் கூறுவது எவ்வாறு என வினவினால், நற்குணங்களை உடைய மகனே, புல் முதலிய அசேதன (அறிவற்ற) பொருள்களெல்லாம் (குறிப்பிட்ட காலத்தில்) பூத்துக் காய்க்கின்றன. அடிப்பொருள்களில் பரம்பொருளின் சக்தி இல்லாவிடில், அசையும், அசையா உயிர்கள் அனைத்திற்கும் தொன்று தொட்ட இயற்கை சுபாவம் மாறிவிடும்.

**100. கருப்பை முட்டையுள் பறவைகள் பலநிறம் கலந்தசித் திரம்பாராய்**
**அருப்பம் ஆம்சத்தி நியமம்இல் லாவிடில் அரசுஇலா நகர்போலாம்**
**நெருப்பு நீரதுஆம் கசப்புமே மதுரம்ஆம் நீசனும் மறைஓதும்**
**பொருப்பு மேகம்ஆம் கடல்எலாம் மண்களாம் புவனம்இப் படிப்போமே.**

ஒரே நிறமுடைய முட்டைகளில் இருந்து, பல நிறங்களோடு கூடிய குஞ்சுகள் தோன்றிய அதிசயத்தைப் பார். உருவமற்றதான அச்சக்திக்கு நியமம் இல்லாவிடில் உலகானது அரசனற்ற நகரம் போல ஆகும். வெம்மை சுபாவமுடைய நெருப்பு குளிர்ந்த நீர்போல மாறும், கசப்பான வேம்பு, இனிய சுபாவ முடையதாகும், தகுதியற்றவனும் வேதம் ஓதுவான், சலனமற்ற மலைகள், மேகங்களைப் போல சலனமுறும், கடல்களெல்லாம் மண்திடல்களாகும். நியமசத்தி இல்லாவிடின் இப்படி உலக சுபாவம் மாறுபடும்.

**101. ஆர்க்கும் காணவும் அறியவும் படாதுஎன்றும் அவாச்சிய வடிவுஎன்றும்
சேர்க்கும் நாமரூ பப்பயிர் வித்துஎன்றும் செப்பிய சிற்சத்தி
பேர்க்கும் ஆறுஎங்ஙன் பிறித்திடப் படாதுஎனில் பிரமபா வனைஒன்றாப்
பார்க்கும் ஆறுஎங்ஙன் முத்திஆ குவதுஎங்ஙன் பரமசற் குருமூர்த்தி.**

தாங்கள் கூறிய பிரம்ம சக்தியானது புறத்தே காணஇயலாதது, அகத்தே அறிய இயலாதது, இன்னதென்று சொற்களால் விவரிக்க முடியாதது, ஆனால் நாமரூபப் பிரபஞ்சமென்னும் பயிருக்கு விதை போன்றது என்றால், அதனை நீக்கும் விதம் யாது? நீக்க இயலாதது என்றால் ஏகம் பிரம்மம் என விசாரம் செய்வது எப்படி? மோட்சம் கிட்டுவது எப்படி? மேலான குருமூர்த்தியே! இவற்றிற்கு விடையருளல் வேண்டும்.

**102. வாயுத் தம்பனம் சலத்தம்ப னம்மணி மந்திர மருந்தாலே
தேயுத் தம்பனம் செய்திடில் அதில்அதில் சிறந்தசத் திகள்எங்கே
நீஅச் சச்சிதா னந்தமாய் வேறுஒன்று நினைந்திடாது இருப்பாயேல்
மாயச் சத்திபோம் ஈதுஅன்றி மந்திர மறைகளில் காணோமே.**

ஒரு மந்திரவாதியானவன், மணி, மந்திர மருந்துகளால், வாயு, சலம், அக்கினி என்னும் பூதங்களின் முறையே அசைவு, நெகிழ்ச்சி, உஷ்ணம் என்னும் சக்திகளைத் தம்பனம் (நீங்குதல்) செய்தால், அச்சக்திகள் குறைதல் போல, நீயும் நாமரூபப் பிரபஞ்சத்தை நினையாது, மாயைக்கு அதிட்டானமாகிய சச்சிதானந்தப் பிரம்மாய் இருப்பாயாயின், மாயைச் சக்தி உன்னிடத்தில் இருந்து, தானே ஒழியும். நான் பிரம்ம சொரூபன் என்னும் இந்த சிந்தனையைத் தவிர வேறு உபாயங்கள் வேதங்களில் காணவில்லை.

**103. மேவு மண்ணில் அவ்வியத்தமே வியத்தம்ஆம் விவகரித்திட வேண்டில்
நாவி னால்மண்ணைக் குடம்என்பர் அக்குடம் நசிப்பது நாவாலே
பாவும் நாமரூ பங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தம்
சீவ பேதகற் பிதங்களை மறந்துநீ சின்மயம் ஆவாயே.**

மண்ணில் வெளித் தெரியாத கடசக்தி என்னும் அவ்வியத்தமே, குடம் என்னும் வியத்த காரியமாக வெளிப்படுகிறது. (மண்ணைத்தவிரக் குடம் இல்லையாயினும்) உலகத்தோர் அதனை மண் என்று கூறாது குடம் என்பர். அக்குடம் நாசமடைந்தால் மறுபடி மண் என்கிறோம். (மண் அழியாததால்) கடம் நசித்தது என்பது சொல் மாத்திரமே ஆகும். (ஏனெனில் குடம் மண் என இரு வெவ்வேறு பொருள் இல்லவே இல்லை.) இவ்வாறு குடம் உண்டு என்பதும், குடம் நசித்தது என்பதும் சொல் மட்டுமேஆகும். குடத்தின் நாமரூபம் பொய், குடத்தை மண்ணாகக் காணுதல் மட்டும் மெய் என அறிவது போல சீவன், ஈசுவரன், உலகம் என்னும் நாம ரூப கற்பனைகளைப் பொய்யென அறிந்து நீக்கி, நீயும் அறிவே வடிவமான பிரம்மம் மாத்திரமாகவே இருப்பாய்.

**104. பூரிக் கும்கன சச்சிதா னந்தத்தில் பொய்சடம் துயர்மூன்றும்**
**தூரத்தது ஆயினும் தோன்றுபாழ் விபரிதம் துடைப்பதுஎப் படிஎன்றால்**
**நீரில் தோன்றும்தன் நிழல்தலை கீழதாய் நின்றுஅலை யினும்நேராய்ப்**
**பாரில் தோன்றிய தன்னைநோக் கிடில்அந்தப் பாழ்நிழல் பொய்ஆமே.**

பிரபஞ்சம் முழுவதும் பரிபூரணமாய் இருக்கும், சச்சிதானந்த வடிவப் பிரம்மத்தினிடம் அசத்து, சடம், துக்கம் என்னும் மூன்றும் சிறிதும் இல்லை. ஆயினும் அவ்வாறு தோன்றுகிற விபரீதங்களைத் தோன்றாவண்ணம் நீக்குவது எப்படி என்றால், தனது நிழலானது நீரில் தலை கீழாகத் தோன்றி சலிக்கிறது. ஆனால் கரையில் தான் நேராக நிற்பதை அவனே நோக்கும் போது, தலைகீழாகத் தெரியும் நிழல் பொய்யாகிறது. (அதுபோல நாம ரூபமாக உலகம் தோன்றினாலும், அதன் அதிட்டானமான சச்சிதானந்தமே மெய்யென நிச்சயிப்பதால், நாமரூபங்கள் பொய்யாக நீங்கும்.)

**105. ஞானம் காரணம் அறிபொருள் காரிய நாமரூபப் பேய்கள்**
**ஆனது எப்படி அழிந்ததுஎப் படிஎன ஆய்குதல் பலன்அன்றே**
**மான மைந்தனே தீர்க்கசொப் பனசகம் வந்ததும் பாராமல்**
**போன தும்நினை யாமல்உன் போதம்ஆய்ப் பூர்ணமாய் இருப்பாயே.**

அறிவாகிய பொருள் காரணம் எனப்படும். அறியப்படும் பொருள்கள் காரியம் ஆகும். காரியமான நாமரூபப் பேய்களின் தோற்றத்தையும், அழிவையும் விசாரித்ததலால் பயனில்லை. பெருமையுள்ள மைந்தா! பிரபஞ்சம் ஒரு நீண்ட கனவிற்குச் சமம். அதன் தோற்ற ஒடுக்கங்களை விசாரியாமல் உனது உண்மை வடிவாகிய ஆன்மாவாய், பரிபூரண பிரம்மமாய் இருப்பாயாக.

**106.** **அசத்தில் எம்மட்டுஉண்டு அம்மட்டும் பராமுகம் ஆகினால் அம்மட்டும்**
**நிசத்தில் உள்விழிப் பார்வையாம் இப்படி நிரந்தரப் பழக்கத்தால்**
**வசத்தில் உன்மனம் நின்றுசின் மாத்திர வடிவம்ஆ யிடின்மைந்தா**
**கசத்த தேகத்தில் இருக்கினும் ஆனந்தக் கடல்வடிவு ஆவாயே.**

மித்தையான நாமரூபப் பிரபஞ்சத்தில் இருந்த அபிமானம் எந்த அளவு விடப்படுமோ, அதே அளவு சத்தியப் பிரம்மத்தில் விழிப்புணர்வு உண்டாகும். இவ்வாறு இடைவிடாது நெடுங்காலம் செய்யும் அப்பியாசத்தால், உன் மனம் கட்டுப்பட்டு நிலைபிறழாது இருந்தால் நீ சித்து வடிவாகி விடுவாய். மைந்தா! வெறுக்கத்தக்க இச்சரீரத்தில் நீ இருந்தாலும், ஆனந்தக் கடல் வடிவமாகிவிடுவாய்.

**107.** **தான்அன்றி வேறுஒன்றும் இல்லாத பூரணச்**
**சச்சிதா னந்தகுணம்ஆய்**
**ஊன்நின்ற உயிர்தோறும் ஒன்றுஆகும் என்றால்அஃது**
**ஒக்கின்ற படிகண்டிலேன்**
**நான்என்ற சீவன்கள் சத்துஆன வகைஒக்கும்**
**ஞானங்கள் வெளிகண்டதால்**
**ஆனந்தம் இதுபோல வெளிஆக உதியாத**
**அடைவுஏது குருநாதனே.**

குருநாதனே! தான் அல்லாமல் மற்று ஒன்றும் உண்மையாக தன்னிடத்து இல்லாத ஆன்மா, பரிபூரண சச்சிதானந்த சுபாவமாய் ஒவ்வொரு சரீரத்திலும் 'நான், நான்' என்று நிற்கும் சீவர்கள் தோறும் ஒன்றே இருக்கின்றது என்பதை ஒப்ப இயலவில்லை. (ஏனெனில்) நான் என்னும் சீவர்கள் இருத்தலால் அவர்கள் சத்து என்பதும், கண்டேன், கேட்டேன் என அறிவதால் அவர்கள் சித்து என்பதும் வெளிப்படை எனக் கூறல் தகும். ஆனால் அவைபோல, ஆனந்தமும் வெளிப்படையாகத் தோன்றாத காரணம் யாது?

**108.** **உருவங்கள் இரதங்கள் பரிசங்கள் ஒருபூவில் ஒன்றுஆகும் என்றாலுமே**
**கரணங்கள் ஓர்ஒன்றில் ஓர்ஒன்று தெரியுங்க ணக்குஅன்றிவாராதுகாண்**
**அருமந்த சச்சிதா நந்தச் சுபாவங்கள் ஆன்மாவின் வடிவுஆகிலும்**
**பிரபஞ்ச மயம்ஆம் விருத்திபே தத்தினால் பேதங்கள் ஆம்மைந்தனே.**

ஒரே மலரில் மாறுபட்ட குணங்களான உருவம், சுவை, பரிசம் ஆகியன ஒன்று சேர்ந்திருந்தாலும், அவற்றுள் ஒவ்வொரு குணமும் (சட்சு, சிங்நுவை, துவக்கு போன்ற)

வெவ்வேறு இந்திரியங்களால் அறியப்படுகின்றனவே அன்றி, ஒரே இந்திரியத்தால் மட்டுமே அறியப்படுவதில்லை. அதுபோல, அருமருந்து போன்ற, சச்சிதானந்தத்தின் சுபாவங்கள் ஆன்மாவின் சொரூபம் ஆயினும், பிரபஞ்ச மயம் ஆகிய விருத்திகளின் பேதத்தால், அவை மாறுபட்டுத் தோன்றுகின்றன.

**109. தாமதம்இ ராசதம் சாத்துவிதம் முக்குணத் தால்வரும்வி
ருத்திமூன்றுஆம்
ஆம்அவைகண் மூடமும் கோரமும் சாந்தமும் அபிதானம் ஆகும்மகனே
ஏமுறஇ ருக்கின்ற சச்சிதா னந்தங்கள் என்றுஎன்றும் ஒன்றுஆகிலும்
நாம்உரைக் கும்விருத் திப்பிரிவி னால்சொரூப ஞானாதி பிரிவுஆகுமே.**

மைந்தனே! தாமசம், இராசதம், சாத்துவிதம் என்னும் முக்குணங்களால் உண்டாகும் விருத்திகள் மூடம், கோரம், சாந்தம் என மூவகையாகும். பெருமைக்கு ஏதுவான சச்சிதானந்தம் எப்போதுமே ஒன்றுதான். ஆயினும் நாம் கூறிய மூவகை விருத்தி பேதத்தால் ஒரே ஆன்ம வடிவமான சச்சிதானந்தம் வெவ்வேறாகத் தோன்றுகிறது.

**110. சடம்ஆன மூடத்த ருக்கல்லு மண்களில் சத்துஒன்று மேதோன்றுமால்
விடம்ஆன காமாதி கோரத்தில் ஆனந்தம் விளையாது மற்றவைகளாம்
திடம்ஆன ஒழிவுஆதி சாந்தத்தி லேசச்சி தானந்தம் மூன்றும்வெளியாம்
மடம்ஆன மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மனம்ஆகில் ஆனந்தமே.**

(ஆன்ம சுபாவம் சச்சிதானந்தம் ஆயினும்) சடமான கல், மண் மற்றும் மூடமான மரம் போன்றவற்றில் சத்து மட்டுமே வெளிப்படும். ஏனைய சித்து, ஆனந்தம் வெளிப்படாது. நஞ்சு போன்ற காமம் முதலிய கோர விருத்திகளில் ஆனந்தம் வெளிப்படாது சத்து, சித்து மட்டும் வெளிப்படும். சத்துவ குணத்தால் திடமான வைராக்கியம், சாந்தம் முதலிய விருத்திகளில் சச்சிதானந்தம் என்னும் மூன்றும் வெளிப்படும். காம மயமான கோர விருத்தியையும், அஞ்ஞான மயமாகிய மூடவிருத்தியையும் விட்டு, சாந்த விருத்தி உண்டானால், அப்போது ஆனந்தம் தடையில்லாது வெளியாகும்.

**111. இகம்ஆன குருநாத னேசச்சி தானந்தம் எனும்இலக் கணம்அறிகிலேன்
அகலாத சத்துஆவது ஏதுசித்து ஆவதுஏது ஆனந்தம் ஏதுஎன்றிடில்
மிகுகாலம் மூன்றும்கெ டாதுஇருப் பதுசத்து வேறுபாடு அறிதல்சித்துஆம்**

**மகிழ்காமம் நுகர்போது சுகம்ஆகும் அநுபூதி வாழ்வுஎன்பது ஆனந்தமே.**

இவ்வுலகில் எழுந்தருளியுள்ள குருநாதனே! சத்து, சித்து, ஆனந்தம் ஆகியவற்றின் இயல்புகள் அறிகிலேன். அவை ஒவ்வொன்றின் இலக்கணம் யாது என வினாவிடில், எக்காலமும் கெடாதிருப்பது சத்து லட்சணம் ஆகும். சடமான பொருள்களின் வேறுபாடுகளைப் பிரித்து அறிவது சித்து லட்சணம் ஆகும். விரும்பிய பொருள் கிடைக்கப் பெற்று, அதனை அனுபவிக்கும்போது உண்டாகும் அனுபவ சுகம் (ஆத்மாவின்) ஆனந்த லட்சணம் ஆகும்.

112. **நாசச்ச ரீரத்து இருக்கும் சரீரிதனை நால்வேத மாவாக்கியம்**
**நீசச்சி தாநந்தம் என்றிடினும் ஆசிரியர் நீபிரமம் ஆவைஎனினும்**
**மாசுஅற்ற சச்சிதா நந்தம்நான் என்னஇவன் மன்னும்அநு பவம்எங்ஙனே**
**கோசப்பு ரங்களைஇ டித்துத்த கர்க்கும்மத குஞ்சரக் குருநாதனே.**

பஞ்ச கோசங்களாகிய நகரங்களை இடித்துப் பொடியாக்கும் மத யானை ஆகிய ஞான சற்குருவே! நாசமடையக்கூடிய சரீரத்தை பெற்று அதில் அபிமானம் வைத்து உள்ளவனிடம், நான்கு வேதங்களிலும் உள்ள மகா வாக்கியங்கள் "நீயே சச்சிதானந்தம்" எனக் கூறினாலும், "நீ பிரம்மமே ஆவாய்" என ஆசிரியர் உபதேசித்தாலும், என் சீவன் குற்றமற்ற சச்சிதானந்தம் நானே என பிரம்மானுபவம் அடைவது எப்படி?

113. **சென்மாந்த ரம்செய்த வினைகள்உடல் தரும்எனில்**
**செல்காலம் இவன்உண்டலோ**
**கன்மாநு பவநரக சொர்க்கம்எனில் வருகின்ற**
**காலத்தும் இவன்உண்டலோ**
**உன்மாத யாதனா உடல்கடவுள் உடல்மநுட**
**உடல்மாறி மாறிஅழியும்**
**தன்மாய உடல்கெடினும் இவன்இருப் பதுகொண்டு**
**சத்துஎன்பது ஒக்கும்மகனே.**

போன சன்மத்தில் செய்த வினைப்பயனால் இந்த சரீரம் வந்துள்ளது என்பதால், சென்ற காலத்திலும் இச்சீவன் இருந்துள்ளான் அல்லவா? நிகழ் காலத்தில் இவன் செய்யும் பாவ புண்ணியங்களின் பயனாக இவன் நரக சொர்க்கம் அனுபவிப்பான் என்றால், எதிர்கலத்தும் இவன் இருப்பான் அல்லவா? நரகத்தில் துக்கத்தை அனுபவிக்க

யாதனா சரீரமும், சொர்க்கத்தில் சுகத்தை அனுபவிக்க தேவ சரீரமும், இவை இரண்டையும் கலந்து அனுபவிக்க மனித சரீரமும், மாறி மாறி உண்டாகி நாசமாகும். மித்தையாகிய இச்சரீரங்கள் நாசமான பின்னும், சரீரியான இவன் முக்காலத்தும் கெடாது இருத்தலால், மைந்தனே, இவனைச் சத்து என்று கூறுதல் பொருந்தும்.

**114.** **இருள்ஆக மூடும்சு ழுத்தியில் இராத்திரியில்**
**இரவிசுடர் அற்றபொழுது**
**மருளாமல் இருளையும் பொருளையும் தெரிகின்ற**
**வகைகொண்டு சித்துஆகுமே**
**பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினில்**
**பேராத பிரியம்அதனால்**
**அருகாத பிரியம்சு கத்தில்வரும் ஆதலால்**
**ஆனந்தம்ஆம் மைந்தனே.**

மைந்ததேன, இருள்போல, யாதும் தோன்றாதவாறு மறைக்கும், சூழுத்தி நிலையில் அஞ்ஞானமாகிய இருளையும் சூரிய சந்திர ஒளியற்ற இரவுக்காலத்தில் பொருளையும் மயங்காமல் அறிவதாலும், நாம் சித்து என்பது அனுபவமாம். பேரானந்தம் மிகுந்த தானே, தன்னிடத்தில் நீங்காத பிரியம் வைத்திருப்பதாலும், யாவர்க்கும் குறைவற்ற பிரியம் சுகத்தினிடத்துப் உண்டாவது பிரசித்தி ஆதலாலும் ஆன்மா ஆனந்தம் என்பது அனுபவமாம்.

**115.** **அன்னபா னாதிசுக சாதனம்அது ஆகையால்**
**ஆர்க்கும்வெகு பிரியம்ஆகும்**
**இன்னவாறு ஆன்மாவும் ஆனந்த சாதனம்**
**எனக்கருதல் பொருள்அல்லவே**
**சொன்னஆன் மாவைஒரு சுகசாத னங்களொடு**
**சொல்லுவாய் ஆகில்மகனே**
**உன்னதுஆ னந்தம்வேறு ஏதுஅனுப விப்பதுஆர்**
**உபயஆன் மாவும்உளவோ.**

அன்னம், பானம் முதுலியன சுகத்திற்கு சாதனங்கள் ஆகும். ஆதலால் யாவருக்கும் இவற்றில் மிகவும் பிரியமுண்டு. இதைப்போன்றே, ஆன்மாவும் சுகம் அடைவதற்கான சாதனம் எனக் கருதுவது ஏற்புடையதன்று. உயர்வாகச் சொல்லப்பட்ட ஒரே ஆன்மாவை,

சுகம் தரும் சாதனங்களைப் போலக் கூறுவாயானால், மைந்தா, உன்னுடைய ஆனந்தம் உன்னையன்றி வேறு ஏது? அந்த ஆனந்தத்தை அனுபவிப்பது உன்னைத்தவிர வேறு யார்? ஆனந்தமயமான ஆன்மா ஒன்று, அதனை அனுபவிக்கும் ஆன்மா மற்றொன்று என இருவேறு ஆன்மாக்கள் உண்டோ? (அங்ஙனம் இல்லாததால், ஆன்மா ஆனந்த வடிவமேயன்றி, அதற்குச் சாதனமாகாது.)

**116.** **விடயசுகம் அதில்வருதல் பிரியம்மாத் திரம்ஆகும்**
**வெகுபிரிய ஆன்மாவில்ஆம்**
**விடயசுகம் வருபிரியம் மாறிவரும் ஆனமாவில்**
**வெகுபிரியம் மாறாதுகாண்**
**விடயசுகம் விடலும்ஆம் கொளலும்ஆம் ஆன்மாவை**
**விடுவதுஎவர் கொள்வதுஎவர்பார்**
**விடயசுக போகங்கள் விடும்அவனை அவனால்**
**விடப்படாது ஒருநாளுமே.**

விடயங்களை அனுபவிக்கும் சுகத்தினால் உண்டாகும் பிரியமானது அற்பமாகும். ஆன்மாவில் உண்டாகும் பிரியம் மேலானதாகும். விடய சுகத்தாலான பிரியம் மாறி மாறி வருவதால், நிரந்தரமானதல்ல. ஆனால் ஆன்மாவில் உண்டாகும் பிரியம் எக்காரணத்தாலும் மாறுவதில்லை. ஒரு விடய சுகத்தை விடுதலோ, மற்றொன்றைப் பற்றுதலோ கூடும். ஆனால் ஆன்ம சுகத்தை விடுபவர், கொள்பவர் யாருமிலர். விடய ஆனந்த அனுபவங்களை நீக்கிவிடும் அவனால் ஆன்மாவாகிய தன்னை ஒரு காலத்தும் நீக்கி விட இயலாது.

**117.** **வேகின்ற கோபங்க ளால்என்னை நான்கொன்று**
**விடுகிறேன் என்றுசிலபேர்**
**சாகின்ற படியினால் தன்னையே தான்கொன்று**
**சாவன்எனல் சங்கைஅலவே**
**தேகம்த னைக்கொல்லும் அவனால் விடப்பட்ட**
**தேகம்அவன் அன்றுமகனே**
**ஆகம்த னில்கோபம் அலதுதனை ஒருநாளும்**
**ஆன்மாவெ றுப்பதுஇலையே.**

கொதிக்கும் கோபத்தில் தற்கொலை செய்து கொண்டு சிலர் சாகின்றனர். (தன்மீது வெறுப்பினால்) தன்னையே தான் கொலை செய்தான் என்று சந்தேகம் கொள்வது

சரியல்ல. சரீரத்தைக் கொல்கின்ற அவனால் நீக்கப்பட்ட சரீரம் அவன் அல்ல. மைந்தா, தனக்கு வேறான சரீரம் மீதுதான் கோபம் வந்துள்ளது. தன்னிடத்தில் வெறுப்பு வரவில்லை. ஆதலால், ஆத்மா ஒருபோதும் தன்னை வெறுப்பதில்லை என்று அறிவாயாக.

118. தாகப்ப டும்பொருளி லும்மகன் பிரியமாம்
தனயனிலும் உடல்பிரியமாம்
ஆகத்தி லும்பிரியம் இந்திரியம் ஆம்கரணம்
அதனிலும் பிரியம்உயிர்ஆம்
ஏகப்பி ராணனிலும் வெகுபிரியம் ஆன்மாவில்
இந்தஆன் மாமுக்கியம்
ஊகத்தி னால்கௌணம் மித்தைகர்த் தாமூன்றும்
ஓர்ஒன்றில் அதிகம்மகனே.

பிரியப்படும் செல்வத்தைவிட யாவருக்கும் மகனிடம் பிரியம் மிகுதியாம். மகனைவிடத் தன் சரீரத்தின் மீது பிரியம் அதிகமாம். சரீரத்தை விட இந்திரியங்களும், அவற்றைவிட கரணத்திலும், கரணத்தைவிடப் பிராணனிலும், பிராணனைவிட ஆன்மாவிலும் பிரியம் மிகுதியாம். இதனால் இந்த ஆன்மாவே முக்கியமாம். ஆராய்ந்து பார்த்தால் (மகனான) கௌண ஆன்மா, (சரீரம் ஆன) மித்தை ஆன்மா, (கர்த்தாத் தன்மை உடைய) சீவான்மா என ஆன்மா இவை மூன்றாம். மைந்தனே, அவற்றில் ஒன்றில் ஒன்று அதிகப் பிரியமாம்.

119. கெடல்ஆன பொழுதுஇவன் காணிக்கு மகன்ஆன
கௌணஆன் மாமுக்கியம்
விடலாத உடலம்ப ரிக்கும்நாள் உடல்ஆன
மித்தைஆன் மாமுக்கியம்
திடம்ஆன நன்மைகதி வேண்டினால் கர்த்தன்ஆம்
சீவஆன் மாமுக்கியம்
சடம்மாயும் முத்தியினில் ஞானஆன் மாஆன
தானேமு காமுக்கியம்.

மரண காலத்தில் இவனது சகல தனங்களையும் மகனுக்கு உரிமையாக்குவதால், மகன் ஆன கௌண ஆன்மா முக்கியமாகிறது. தன்னை நீங்காத தூல சரீரத்திற்கு உணவு கொடுத்துக் காப்பாற்றுவதால் சரீரம் ஆன மித்தை ஆன்மா முக்கியமாம். மேலான

நற்கதியை விரும்பித் தவம் புரிகையில், கர்த்தாத் தன்மை உடைய சீவான்மா முக்கியமாம். தத்துவ விசாரம் செய்து அஞ்ஞானம் கெட்ட மோட்ச தசையில், ஞான ஆன்மாவான 'தான்'' மகா முக்கியமாம்.

120. புலியும்அநு கூலம்எனில் இட்டமாம் பகைசெயில்
புதல்வன்எனி னும்வெறுப்புஆம்
உலகில்இரு வகையும்அல் லாதபுல் ஆதியில்
உதாசீனம் ஆம்ஆதலால்
மலினம்அறு சின்மயன் பலவகையும் இப்படி
மகிழ்ச்சியில் விருப்பம்இகழான்
அலகில் ஆனந்தவடிவு ஆகும்உன் சொரூபத்தை
ஆராய்ந்து பார்மைந்தனே.

இவனுக்கு உதவியான காரியத்தைச் செய்யுமாயின் புலி போன்ற மிருகத்திடமும் பிரியமுண்டாகும். இவனுக்குப் பகையான காரியத்தைச் செய்தவன் இவனது புதல்வனே ஆயினும், இவனுக்கு வெறுப்பாகிறது. இந்த இருவகையிலும் சேராத உலகிலுள்ள புல் போன்றவற்றில் இவனுக்கு உதாசீனம் உண்டாகிறது. சின்மயமான ஆத்மா, இவ்வாறு பலவகையாய் மாறுதல் அடையாது இருப்பதால், தனது ஆனந்தத்தில் உள்ள விருப்பத்தை இகழாமல் இருக்கிறான். ஆகையால் மைந்தனே, அளவற்ற ஆனந்தமாய் உள்ள உனது நிச வடிவத்தை ஆராய்ந்து அறிவாயாக.

121. மானம்சி றந்தகுரு நாதனே ஆனந்த
வகைகள்எத் தனைஎன்னிலோ
ஞானம்தி கழ்ந்தபிர மானந்தம் வாசனா
னந்தம்விட யானந்தம்என்று
ஆனந்தம் மூன்றுவிதம் எட்டுவகை என்பர்சிலர்
அவ்வைந்தும் இதில்அடக்கம்
ஆனந்த வகைசொலக் கேள்மைந் தனேஎட்டும்
இஃதுஇன்னது இன்னது எனவே.

பெருமை மிகுந்த சற்குருவே! ஆனந்தம் எத்தனை வகைப்படும் என வினவிடில், ஞானத்தால் விளங்குவதான பிரம்மானந்தம், வாசனானந்தம், விடயானந்தம் என மூவகையாம். சில பெரியோர்கள் எட்டு வகை என்பார்கள். மிகுதியான ஐந்தும் இம்

மூவகையில் அடக்கமாகும். எட்டுவகை ஆனந்தங்களில் இயல்புகளைக் கேட்பாயாக.

**122. போகத்தில் வருசுகம் விடயசுகம் நித்திரைப் போதுஉளது பிரமசுகமாம்**
**மோகத்து அனந்தலில் சுகம்வா சனைச்சுகம் முழுப்பிரியம் ஆன்மசுகமாம்**
**யோகத்தில் உளதுமுக் கியசுகமும் உதாசீனம் உற்றசுக நிசசுகம்அதாம்**
**ஏகத்தை நோக்கல்அத் துவிதசுகம் வாக்கியம் எழுந்தசுகம் ஞானசுகமே.**

விரும்பிய பொருளை அடைந்து, அதனை அனுபவிக்கும்போது வரும் சுகம் விடயானந்தமாம். நித்திரையில் சுயம் பிரகாசமாய் விளங்கும் சுகம் பிரம்மானந்தமாம். நித்திரை மயக்கம் தீர்ந்து விழித்த உடனே, சுழுத்தியில் அனுபவித்த சுகத்தின் வாசனை, சிறிது நேரம் தொடர்ந்து இருப்பது வாசனானந்தமாம். தானே தனக்கு மிகப் பிரியமானவன் என அறியும்போது தோன்றுவது ஆத்மானந்தமாம். சமாதியில் தோன்றுவது முக்கியானந்தமாம். விருப்பு வெறுப்பற்ற காலத்துத் தோன்றும் சுகம் நிசானந்தமாம். நாம ரூபங்கள் மித்தை என உணர்ந்து, அதிட்டானமான தன்னை நோக்கும் போது உண்டாவது அத்வைத ஆனந்தமாம். மகாவாக்கிய விசாரத்தால் தோன்றுவது வித்யானந்தமாம்.

**123. இவ்வாறு உரைசெயும் சுகபே தங்களின்**
**இயல்பாம் அவைசொல மகனேகேள்**
**ஒவ்வா நனவினில் உழல்வான் இடர்கெட**
**உறங்கும் சயனம்அது உறுநேரம்**
**செவ்வா மனம்அக முகம்ஆம் அதில்ஒளிர் சித்தின்**
**சுகநிழல் சேருங்காண்**
**அவ்வாறு இவன்உள மகிழ்வுஆம் அனுபவம்**
**அதுதான் விஷய சுகானந்தம்.**

மகனே, இவ்வாறு கூறிய பலவகை ஆனந்தங்களின் இயல்புகளைக் கூறக் கேட்பாய். விழிப்பு நிலையில் அலைந்து திரிந்து முயற்சித்தலால் உண்டான துன்பம் நீங்குதற் பொருட்டு படுக்கையில் உறங்கும்போது அவனது மனோவிருத்தி அந்தர் முகமாகும். அகமுகமான விருத்தியில் சுயம் பிரகாரமான அறிவான ஆத்மா பிரதிபிம்பிக்கும். அப்போது விளங்கும் ஆனந்த அனுபவமே விடயானந்தமாம். (அதுபோல விரும்பிய பொருளை அனுபவிக்கும் போது மனோவிருத்தி அகமுகமாகும்.)

**124. ஈனம் தருசுக விடயம் திரிபுடி இடர்ஆம் எனமனம் அசையாமல்**
**சேனம் தனதுகு லாயம் தனில்விழு செயல்போல் நித்திரை செறிசீவன்**
**தான்அந் தம்இல்பர னுடன்ஒன் றுவன்ஒரு தனைஅல் லதுபிற நினையாமல்**
**ஆனந் தமயனும் ஆவன் சுகம்மிகும் அதுதான் உயர்பிர மானந்தம்.**

விடயானந்தம் இழிவானது. இதில் போகத்தை அனுபவிப்பவன், போகம், போக சுகம் எனத் திரிபுடி உள்ளது. திரிபுடித் துக்கம் நீங்கும் பொருட்டு, மனம் ஒடுங்கி அச்சீவன் உறங்குகையில், அழிவற்ற பிரம்மத்தோடு ஐக்கியமாவான். அத்துவிதமான தன்னையன்றி வேறு ஒரு நினைவும் இல்லாது ஆனந்த வடிவம் ஆவான். இந்தச் சுழுத்தியில் அனுபவிப்பது உயர்வான பிரம்மானந்தம் எனப்படும். இது எத்தகையது என்றால், ஆகாயத்தில் பறந்து களைத்த பருந்து, இளைப்பாறிச் சுகம் அனுபவிக்கத் தனது கூட்டில் போய் வீழ்வதற்கு ஒப்பானதாம்.

**125. தூங்கும் சுகம்அது பிரமச் சுகம்எனல்**
**சுருதிப் பொருள்வழி துயில்வோர்கள்**
**தாங்கும் மலர்அணை நன்றுஆ கச்சிலர்**
**சம்பா திப்பது தான்ஊகம்**
**தீங்கும் நன்மையும் ஆண்பெண் முறைமையும்**
**தெரியாது அமளிசெய் பொழுதேபோல்**
**ஆங்குஉள் வெளிகளும் அறியா அனுபவம்**
**அதனால் அதுபிர மானந்தம்.**

நித்திரையில் அடைகின்ற சுகம் பிரம்மாநந்தம் என்பது வேத முடிவாகும். நித்திரைக்கு ஊறு வரக்கூடாதென்று சிலர் மிருதுவான படுக்கை போன்ற ஏற்பாடுகளைச் செய்து கொள்வதே சுழுத்தியில் ஆனந்தம் உண்டு என்பதற்கான உத்தியாகும். ஒருவன் தனக்குப் பிரியமான பெண்ணை ஆலிங்கனம் செய்யும் பொழுது, நன்மை தீமைகளைளோ தான் ஆண் அல்லது பெண் என்றோ சிறிதும் அறியாது சுகமாய் இருப்பான். அதுபோல, அகம் புறமற்ற சுழுத்தி நிலையில் ஆனந்தம் அனுபவிப்பதால் அது பிரம்மானந்தமாம்.

**126. உதவும் புவியினில் ஒருவன் அனுபவம்**
**ஒருவன் மனதினில் உதியாதே**
**மதியும் கெடுகிற துயில்கொண்டு ஆனந்த**
**மயன்அன் றோசுகம் உறுகின்றான்**
**இதுவிஞ் ஞான மயன்ஆம் சிந்தையில்**

**நினைவாய் வந்திடல் அழகுஅன்றே**
**சுதைவிண் ணோர்புகழ் குருவே நீர்இது**
**சொல்லீர் சகலமும் வல்லீரே.**

பூமியின் கண் ஒருவன் தான் விரும்பிய பொருளை அனுபவித்து பெற்ற அனுபவம் மற்றொருவன் மனதில் உதிக்காதே. மனோமயம் விஞ்ஞானமய கோசங்கள் நாசமாகிற நித்திரையை அடைந்து, ஆனந்தமயன் அல்லவா ஆனந்தத்தை அனுபவிக்கிறான். இந்த ஆனந்தத்தை, விஞ்ஞானமயனான சீவனின் மனதில் உதிப்பது எவ்வாறு பொருந்தும்? தேவரும் போற்றும் குருவே, எல்லாச் சந்தேகங்களும் நீக்கும் தாங்கள் இதனையும் விளக்கி அருள வேண்டும். (சுழுத்தியில் பிராக்ஞன் அனுபவித்த ஆனந்தம், சாக்கிரத்தில் விசுவனுக்கு எவ்வாறு தோன்றும் எனச் சீடன் வினவுகிறான்.)

**127.** **நெய்யும் வெண்ணெயும் இருபேர் களும்அறி**
**நினைவில் பிறிவுஅறி வினில்இல்லை**
**செய்யும் நனவினில் இறுகும் மனத்தொடு**
**சேரும் சின்மய விஞ்ஞானன்**
**நையும் துயர்மனம் நழுவும் பொழுதுஉணர்**
**ஞானச் சுகம்உணும் ஆனந்தன்**
**பெய்யும் துளிகளும் நீரும் குளமொடு**
**பாகும் போல்இவர் பிறிவுஅன்றே.**

நெய்யும் வெண்ணெயும் (வெவ்வேறாகத் தோன்றினும், பொருள் ஒன்றே) போல, ஆனந்தமயன் விஞ்ஞானமயன் எனும் பெயர்களில்தான் வேறுபாடே தவிர (அவித்தை, அந்தக்கரண உபாதிகளால் பிரிவே தவிர) இரண்டிலும் உள்ள அறிவு ஒன்றே ஆகும். விவகாரங்களைச் செய்யும் சாக்கிரத்தில் மனம் முதலியவற்றோடு கூடி இருக்கும் விஞ்ஞானமயன், மனம் ஒடுங்கிய சுழுத்தி நிலையில், ஆனந்தத்தை அனுபவிக்கும் ஆனந்தமயன் ஆவான். இது எவ்வாறெனில், மேகம் பொழியும் மழைத்துளிகளும், குளத்து நீரும் ஒன்றே என்பது போலவும், வெல்லமும் பாகும் வெவ்வேறு ஆகாதது போலவும், ஆனந்தமயன், விஞ்ஞானமயன் என்போர் வெவ்வேறல்லர் என்பதை அறிவாயாக. (ஆதலால் ஆனந்தமயனின் அனுபவம், விஞ்ஞானமயனுக்கும் தோன்றுகிறது.)

**128.** **ஒன்றுஆ கியபிர மானந் தச்சுகம்**
**ஒழிவான் ஏன்வெளி வருவான்ஏன்**
**என்றால் முன்செய்த கருமம் வெளியினில்**

**இழுக்கும் சுழுத்திவிட்டு எழுந்தோனும்**
**நன்றுஆ யின்சுகம் அகலான் வெளியிலும்**
**நடவான் மறதியும் பெறமாட்டான்**
**அன்றாம் எனஇருந்து உறங்கும் சிலகணம்**
**அதுவே வாதனை ஆனந்தம்.**

ஆனந்தமயன் பிரமானந்த சுகம் அனுபவிப்பதை விட்டு விட்டு சாக்கிரத்திற்கு வெளிவருவது ஏன் என வினவிடில், சீவனின் முன் வினைகள் அவனைச் சுழுத்தியினின்றும் சாக்கிரத்திற்கு இழுக்கின்றன. அவன் சுழுத்தி நிலையிலிருந்து நீங்கிய பின்னரும் சிறிதுநேரம் பிரம்மானந்த அனுபவம் நீங்காது இருக்கிறான். அதனால்தான், புறத்தே மனம் செல்லாதவனாயும் அகத்தே அனுபவித்த ஆனந்தத்தை மறவாதவனாயும் உள்ளான். இதனால் சுழுத்தி சாக்கிரம் இரண்டுக்கும் நடுப்பட்ட நிலையில் சிறிது பொழுது உறங்குவான். அப்போது தோன்றுவதே வாசனானந்தமாம்.

**129.** **அந்தக் கணம்உடல் அகம்என்று இடர்களில்**
**அலைந்தே சுகம்தனை மறந்தேபோம்**
**முந்தைச் செயும்வினை சுகதுக் கம்தரும்**
**மோனம் உறுநடு வடிவில்காண்**
**எந்தப் புருடனும் ஒருசிந் தையும்அற**
**இருந்தேன் எனல்அநு பவம்ஆகும்**
**இந்தப் படிதன்உ தாசீ னச்சுகம்**
**இதுவே நிசம்எனும் ஆனந்தம்.**

விழிப்பு நிலை தோன்றிய அக்கணமே, தேகமே தான் என்னும் அபிமானத்தோடு பற்பல செயல்களில் அலைந்து, முன் அனுபவித்த ஆனந்தத்தை மறந்துபோய், முன்னர்ச் செய்த வினைகளுக்கு ஏற்ப சுகதுக்கங்களை அனுபவிப்பான். இடையிடையே இவை இரண்டுமற்ற மோன (வெறுப்பு விருப்பற்ற உதாசீன) நிலை உண்டாகும். யாவருமே, 'நான் ஒரு சிந்தனையும் இன்றிச் சும்மா இருந்தேன்' எனக் கூறுவது அனுபவமாகும். இவ்வாறு உதாசீன காலத்துத் தோன்றும் ஆனந்தமே நிசானந்தமாகும்.

**130.** **நிசம்ஆ னதுமுக் கியமோ குடத்துஉள நீர்அன் றேவெளி ஈரம்தான்**
**வசமா அகங்கரம் மறைந்தால் நிசம்அது படிந்தால் முக்கிய வகைஆகும்**
**திசையார் திரிசயம் அறியா தேதுயில் செறியா தேஉடல் தறிபோலே**

அசையா தேமதி சமம்ஆ கியநிலை அதுதான் முக்கிய ஆனந்தம்.

உதாசீன காலத்து உண்டான நிசானந்தமானது, அகங்காரத்தின் வசமாகி மறைக்கப்படுவதால் அது முக்கிய ஆனந்தம் இல்லை. இது குடத்தின் வெளியிலுள்ள குளிர்ச்சி, குடநீர் அல்ல என்பது போலாகும். அகங்காரம் லயமாகி எல்லாத் திசைகளிலும் காணப்படுவனவற்றை மறந்து, உறக்க நிலை அடையாமல், (சரீரம்) கம்பத்தைப் போல அசையாதிருக்க, மனம் பிரம்மத்தில் நிலைத்து இருக்கும் போது தோன்றும் ஆனந்தமே முக்கியானந்தமாகும்.

131. மனுடன் மனுடகந் தருவன் தேவநன்
மாகந் தருவன்ஒண் பிதிரோடே
பனும்ஆ ஜானர்கள் கருமத் தேவர்கள்
பகர்முக் கியர்இந் திரன்ஆசான்
கனம்ஆர் பிரஜா பதிஎன் விராட்டுபொன்
கர்ப்பப் பிரமன்என்று இன்னோர்கள்
பினஆ னந்தங்கள் நுரைஆம் பிரளய
வெள்ளக் கடல்பிர மானந்தம்.

மனிதருள் மேலான அரசன், மனிதனாய் இருந்து புண்ணியத்தால் கந்தர்வ பதவியடைந்தவன், அதற்கும் மேலான தேவகந்தர்வன், சிறந்த பிதிரர், ஆஜானதேவர், கருமத்தேவர், யமன், அக்கினி போன்ற முக்கியத் தேவர், தேவ அரசனான இந்திரன், தேவகுருவான பிருகஸ்பதி, பிரஜாபதி என்னும் விராட்புருடன், இரணியகர்ப்பன் என்னும் பிரமதேவன் என்னும் இவர்கள் அனுபவிக்கும் ஆனந்தடங்கள், (ஒருவருக்கொருவர் மென்மேலும் நூறு மடங்கு மிகுதியாக) நீர்த்துளிக்குச் சமம் ஆகும். பிரம்மானந்தம் என்பது பிரளயகாலப் பெருங்கடல் போன்றதாம்.

132. எவன்ஆ கிலும்இந்தத் துரியா தீதத்தில்
ஏழாம் பூமியில் இருந்தானேல்
அவன்நா ரதன்சுகன் சிவன்மால் அயன்முதல்
அறிவோர் அனுபவ சுகபோதம்
விவகார அதிர்சயம் இதுவே அனுபவம்
எனமுன் சொல்லிய விவகாரி
உவமா னமும்அறி மகனே அவன்அடி

**உதிரும் பொடிகள்என் முடிமேலே.**

மைந்தனே, துரியாதீதம் என்னும் இந்த ஏழாம் பூமியில் யாரேனும் இருந்தார் எனில், அவர் நாரதர், சுகன், சிவன், திருமால், பிரமன் முதலியோருக்குச் சமமான ஆனந்த நிலையை அனுபவிப்பவர். உலக விவகாரமற்று உறக்கம் இன்றி சச்சிதானந்த வடிவாய் இருக்கும் இந்நிலையே முக்கிய நிசானந்த அனுபவம் என அறிவாய். முன்னர் (130ம் பாடலில்) கூறிய முக்கிய நிசானந்தத்தை அனுபவிப்பவர்களுக்கு அந்த நாரதன், சிவன் முதலியோர் உவமானமும் ஆவர் என்று அறிவாய். இந்த அனுபவத்தைப் பெற்றவரது பாதத் தூசுகள் எனது முடிமேல் தரிக்கத் தக்கதாம்.

**133.** **இந்தவா றுஐந்து சுகம்சொல் லினோம்வித் தைசுகம்**
**இனிமேல் சொல்வோம்**
**முந்தமா யையும் சச்சி தானந்தப் பொருளுமே**
**மொழியும் போதில்**
**அந்தம்ஆம் அத்துவித சுகம்ஆன்ம சுகம்இ ரண்டும்**
**அங்கே சொன்னோம்**
**தொந்தம் மாற்றிய மகனே இன்னம்உனக்கு ஐயம்உண்டேல்**
**சொல்லு வாயே.**

இவ்வாறு ஐவகை ஆனந்தங்கள் பற்றிச் சொன்னோம். வித்யானந்தத்தின் இயல்பை இனிக்கூறுவோம். முன்னர் மாயையின் இயல்பும், சச்சிதானந்தப் பதங்களுக்கு அர்த்தமும் கூறியபோது, வேதத்தின் முடிவான, அத்வைதானந்தம், ஆன்மானந்தம் என்னும் இரண்டின் இயல்புகளைக் கூறினோம். சுக, துக்கம் போன்ற இரட்டைகளை நீக்கிய மைந்தனே, உனக்கு மேலும் ஐயம் உண்டாயின் கேட்பாயாக.

**134.** **குகன்தனையும் எனையும்உல கினையும்ஈன்று அளித்துஅருளும்**
**குருவே கேளீர்**
**புகன்றசச்சி தானந்தப் பதங்கள்தனித் தனிஆகிப்**
**பொருள்வேறு ஆனால்**
**உகண்டமனம் உறைப்பதுஎங்ஙன் பரியாய பதங்களைப்போல்**
**உறவு காணேன்**
**அகண்டம்ஆய் ஒருசுவையாய்த் தேனீக்கூட் டியமதுவா**
**அறிவிப் பீரே.**

குகனையும், என்னையும், உலகினையும் (சுக, சீவ, பரம் என்னும் மூன்றையும்) படைத்துக் காக்கும் குருவே, முன்னர், ஆன்ம வடிவம் சத்து, சித்து, ஆனந்தம் எனக் கூறினீர்கள். இம்மூன்று பதங்களும் வெவ்வேறாகித் தம்முள் பொருளும் வேறுபடுமாயின், சஞ்சலப்படும் மனம் ஆன்ம சொரூபத்தில் எவ்வாறு நிலைத்து நிற்கும். (பதத்திற்குப் பதம் தாவுமே). ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்கள் போன்ற பரியாயத்தை யான் இங்கு அறியவில்லை. தேனீக்கள் பற்பல மரங்கள் பூக்களிலிருந்து எடுத்தாலும், தேன் ஒரே சுவை உடையதாய் இருத்தல் போல, அவற்றின் அர்த்தங்கள் ஒன்றே என அடியேனுக்கு அறிவித்தருளல் வேண்டும்.

**135.** **குளிர்இளகல் வெண்மைஎன்ற பதங்களினால் நீர்மூன்று கூறுஆ**
**யிற்றோ**
**ஒளிதவனம் செம்மைஎன்ற பதங்களால் அக்கினியும் ஒருமூன்று ஆமோ**
**வெளிமுதலாம் சகம்அசத்து மூடம்இடர் எனப்பிரித்து விலக்கி வேதம்**
**எளிதுஅறிய முரண்மொழிந்த சத்துஆதி எனும்பிரமம் ஏகம் தானே.**

குளிர்ச்சி, நெகிழ்ச்சி, வெண்மை என்னும் பதங்களால் நீர் மூன்று கூறு ஆனதா? பிரகாசம், உஷ்ணம், சிவப்பு என்றதால் அக்னி மூன்றாகப் பிரியுமா? ஆகாசம் முதலான உலகத்தை, அசத்து, சடம், துக்கம் என அறிந்து ஒதுக்கிவிட்டு, ஆத்மாவை எளிதில் அறிவதற்காக, அந்த அசத்து முதலியவற்றிற்கு மாறாக வேதமானது சத்து, சித்து, ஆனந்தம் என்று கூறிய பிரமம் ஒன்றேயாகும்.

**136.** **நித்தியம்பூ ரணம்ஏகம் பரமார்த்தம் பரப்பிரமம்**
**நிதானம் சாந்தம்**
**சத்தியம்கே வலம்துரியம் சமம்திருக்கு கூடஸ்தன்**
**சாட்சி போதம்**
**சுத்தம்இலக் கியம்சனா தனம்சீவன் தத்துவம்விண்**
**சோதி ஆன்மா**
**முத்தம்விபு சூக்குமம்என்று இவ்வண்ணம் விதிகுணங்கள்**
**மொழியும் வேதம்.**

நித்தியம் (உற்பத்தி நாசமற்றது), பூரணம் (எங்கும் நிறைந்தது), ஏகம் (சஜாதீய, விஜாதீய, ஸ்வகத பேதமற்றது), பரமார்த்தம் (உண்மையானது), பரப்பிரம்மம் (ஞானவடிவானது), நிதானம் (நாம ரூபமாகிய அனைத்துக்கும் அதிட்டானமானது), சாந்தம் (எப்போதும் ஒரே தன்மையானது), சத்தியம் (காரிய காரணம் அற்றது), கேவலம்

(மோட்ச வடிவானது), துரியம் (மூன்றவத்தைகட்கு சாட்சி), சமம் (விவகாரம் ஏதுமற்றது), துரியம் (மூன்றவத்தைகட்கும் சாட்சி), சமம் (விவகாரம் ஏதுமற்றது), திருக்கு (திருசியமெல்லாம் அறிவது), கூடஸ்தன் (கொல்லன் அடைக்கல் போல விகாரமடையாதது), சாட்சி (சர்வ பதார்த்தம் அறிவது), போதம் (அறிவு வடிவானது), சுத்தம் (அசுத்தம் அற்றது), இலக்கியம் (லக்ஷணாவிருத்தியால் அறிவது), சனாதனம் (எப்போதும் ஒரே வடிவானது), சீவன் (சரீர அபிமானி), தத்துவம் (தற்பதம், தொம்பதங்களால் உணர்வது), விண் (ஆகாசம்போல வியாபித்தது), சோதி (சுயம் பிரகாசமானது, ஆன்மா (அன்னியமற்ற ஆனந்தவடிவம்), முத்தம் (பந்தமற்றது), விபு (கால தேசம் கடந்தது), சூக்குமம் (காண்பதற்கு அரிது) இவ்வாறு ஆத்மாவின் விதி குணங்களை வேதம் (உடன்பாடு வாயிலாக ) கூறும்.

**137.** **அசலம்நிரஞ் சனம்அமிர்தம் அப்பிரமே யம்விமலம் வசனா தீதம்**
**அசடம்அநா மயம்அசங்கம் அதுலம்நிரந் தரம்அகோ சரம்அ கண்டம்**
**அசம்அநந்தம் அவிநாசி நிர்க்குணம்நிட் களம்நிரவ யவம்அ நாதி**
**அசரீரம் அவிகாரம் அத்துவிதம் எனவிலக்குஆம் அநேகம் உண்டே.**

அசலம் (சலனம் அற்றது), நிரஞ்சனம் (மலின சுபாவம் அற்றது), அமிர்தம் (மரணம் அற்றது), அப்பிரமேயம் (கண்ணால் காணாதது), விமலம் (மலம் அற்றது), வாசனாதீதம் (வாக்கிற்கு எட்டாதது), அசடம் (சடம் ஆகாதது), அநாமயம் (நோய், கவலை அற்றது), நிரந்தரம் (இடைவெளி அற்றது), அகோசரம் (பிரமாணத்திற்கு விஷயமாகாதது), அகண்டம் (கண்டம் அற்றது), அசம் (பிறப்பு அற்றது), அனந்தம் (முடிவு அற்றது), அவிநாசி (நாசமற்றது), நிர்க்குணம் (குணம் அற்றது), நிட்களம் (உருவம் அற்றது), நிரவயவம் (அவயவம் அற்றது), அநாதி (உற்பத்தி அற்றது), அசரீரம் (சரீரம் அற்றது), அவிகாரம் (அறுவகை விகாரம் அற்றது), அத்துவிதம் (துவிதம் அற்றது) இவ்வாறு அளவிறந்த விலக்கு நாமங்கள் பிரம்மத்திற்கு உண்டு.

**138.** **இன்னவகை விதிவிலக்குக் குணங்கள்நன்றாய்ச்**
**சேர்ந்துஒருமித்து எல்லாம் கூடிச்**
**சொன்னபொருள் ஒன்றுஅன்றி இரண்டுஇல்லை**
**ஒருபொருளைச் சொல்லும் சொற்கள்**
**பின்னபதம் ஆம்அதனால் சத்துஆதி**
**குணப்பொருள்ஆம் பிரமம் ஏகம்**
**அன்னபொருள் ஒருமைஅறிந்து அகண்டபரி**

பூரணம்ஆய் ஆவாய் நீயே.

இவ்வாறு விதிகுணங்களாகவும், விலக்கு குணங்களாகவும் கூறியவை யாவும் நன்றாகச் சேர்ந்து, ஒருமித்துத் திரண்டு கூறிய பொருள் ஒன்றே, இரண்டு இல்லையாம். ஒன்றேயான பிரம்மத்தைக் கூறும் சொற்கள், தம்முள் வேறுபட்ட பதங்களாகும். இக்காரணங்களால், சத்து, சித்து, ஆனந்தம் எனக் கூறப்பட்ட பொருள் ஆன பிரம்மம் ஒன்றே ஆகும். இவ்வாறு ஒன்றாயிருக்கும் தன்மையை உணர்ந்து, நீ அகண்ட பரிபூரணமாய் இருப்பாயாக.

139. நிர்க்குணவத் துவின்குணங்கள் உரைப்பதுதாய்
மலடிஎனல் நிகர்என் னாதே
சற்குணனே வத்துநிலை உரையாமல்
அறியவல்ல சதுரர் உண்டோ
நற்குணவே தங்கள்இந்தச் சீவன்முத்தி
பெறப்பிரம ஞானம் தோன்றச்
சொற்குணங்கள் பிரமத்தின் குணங்கள்அன்று
பிரமம்ஆம் சொரூபம் தானே.

குணமற்றது என்று கூறப்படும் பிரம்மத்திற்கு, வேதமானது குணங்களைக் கூறியது, ‘என் தாய் மலடி’ என்று கூறுவதற்கு நிகராக, முன்னுக்குப் பின் முரணானது என நினையாதே. நற்குணங்களை உடைய மைந்தனே, ஒரு பொருளை அறிய விரும்பியவர், அப்பொருளின் குணங்களைப் பிறர் கூறாது, தாமே அறியும் சாமாத்தியம் உடைய விவேகிகள் யார் உள்ளனர்? நற்குணமுடைய வேதங்கள், இச்சீவன் முத்தி சுகம் அடையவும், பிரம்ம ஞானம் உண்டாகவும் சொல்லப்பட்ட குணங்கள், பிரம்மத்தின் குணங்களல்ல, அவை பிரம்மத்தின் வடிவமேயாகும்.

140. மோகஇருள் கெடக்கோடி அருணன்என வருகுருவே மொழியக் கேளீர்
ஏகபரி பூரணம்ஆம் என்சொரூபம் என்உளத்தில் இறுகும் வண்ணம்
ஆகமங்கள் சொன்னபடி என்னைஅகண் டார்த்தமா அறிந்தேன் ஐயா
ஊகம்ஒத் திடஉரைத்தால் பசுமரத்தில் ஆணிபோல் உறைக்கும் நெஞ்சே.

அஞ்ஞான இருள் நீங்கக் கோடி சூரியர் உதித்தது போல் வந்துள்ள குருவே! அடியேன் கூறுவதைக் கேளீர். ஒன்றாயும் பரிபூரணமாயும் உள்ள என் நிச வடிவம் என் உள்ளத்தில் உறுதியாகும் படியாகச் சுருதிகள் சொன்னபடி என்னை அகண்ட அறிவு ஆனந்த

வடிவமாய் அறிந்தேன். (சச்சிதானந்தம் ஏகமே என்பதை) பசு மரத்தில் ஆணி போல, என் நெஞ்சில் பதியுமாறு, உத்தியுடன் கூறியருளினால், தெளிவடைவேன்.

**141. சத்தேசித்து ஆகும்அயல் எனில்அசத்தாம் அசத்துஆனால் சாட்சி எங்கே**
**சித்தேசத்து ஆகும்அயல் எனில்சடம்ஆம் சடங்களுக்குத் திதியும் இல்லை**
**ஒத்தேதோன் றியசத்தும் சித்தும்நல்ல சுகம்ஆகும் ஊகத் துக்குஓர்**
**வித்தேஅன் னியம்ஆகில் சடம்அசத்துஆம் சுகானுபவம் விளைந்தி டாதே.**

சத்தே சித்தாயிருக்கிறது. இவை வேறுபட்டன என்றால் சித்து என்பது அசத்து (இல்லாதது) ஆகிவிடும். அசத்து என்பது எங்ஙனம் சாட்சியாகும்? சித்து என்பதே சத்தாகும். அல்ல எனில், அப்போது சத்து என்பது சடமாகிவிடும். சட பதார்த்தங்களுக்கு இருப்பு இல்லை. தம்முள் ஒத்து விளங்கும் சத்தும் சித்தும் எதுவோ அதுவே ஆனந்தமாகும். சத்திற்கும் சித்திற்கும் வேறுபட்டது ஆனந்தம் எனில், ஆனந்தம் சடமும் அசத்தும் ஆகிவிடும். அப்போது ஆனந்த அனுபவம் உதியாது. சத்து சித்து ஆனந்த வடிவாகிய பிரம்மம் ஒன்றே என ஊகிப்பதற்கு இதுவே சிறந்த உத்தியாம்.

**142. வீயாத சத்துமுன்னம் விளங்குவது தன்னாலோ வேறுஒன் றாலோ**
**வாயால்வேறு எனில்அதுவும் அசத்தோசத் தோஅசத்தேல் மலடி மைந்தன்**
**பேயாகா ரியம்செயுமோ சத்துஎனஇப் படிஅதையும் பிரித்துச் சொன்னால்**
**ஓயாத அவத்தைஆம் குதர்க்கவிகற் பங்களைவிட்டு ஒழிந்தி டாயே.**

முக்காலத்தும் மாறுதல் அடையாத சத்து, தானாகவே விளங்குகின்றதா அல்லது மற்றொன்றாலா? வேறு ஒன்றால் எனக் கூறினால், அந்த வேறொன்று சத்தா அசத்தா என்னும் கேள்வி வரும். பேயனே! அந்த வேறொன்று அசத்து என்றால், மலடி மகன் காரியம் செய்வதுண்டோ? (ஆதலால் அசத்தால் சத்தை விளக்க முடியாது). அல்லது அந்த வேறொன்று சத்து என்றால், மறுபடியும் அது தன்னால் விளங்குகிறதா, வேறொன்றாலா என்னும் கேள்வி வந்து (சங்கிலித் தொடர் போல) தொடர்ந்து வரம்பின்றிச் சுற்றிக்கொண்டே இருக்கும். ஆகையால் குதர்க்கம், வேறுபாடுகளை விட்டு நீங்குவாய். (சத்து என்பதை அசத்தால் விளக்க முடியாது. அதனை விளக்குவது மற்றொரு சத்து என்று கூறினால் அநவஸ்தா தோஷம் ஏற்படம். ஆதலின் அதுவும் தகாது).

**143. சுருதியுத்தி ஒத்ததுபோல் அனுபவமும் கேள்சுழுத்திச் சுகஆ னந்தம்**
**மிருதிவடிவு ஆதலால்இவ் ஆனந்தமே அறிவுஆம் வேறுஅங்கு இல்லை**
**கருதுபிர ளயம்சுழுத்தி இரண்டிலும்நீ இருந்துஇருளைக் காண்கின் றாயே**

**இருதயத்துஇப் படிநோக்கி ஏகபரி பூரணமாய் இருந்தி டாயே.**

சுருதி வாயிலாகவும் யுத்தி வாயிலாகவும், சத்து சித்து ஆனந்த பதங்கள் ஒன்றே, அதுவே, பிரம்மம் என விளக்கியதை, 'அனுபவ வாயிலாக விளக்கக் கேள். உனது சுழுத்தியின்கண் அனுபவித்த ஆனந்தத்தை அப்போதே அறியாது, விழித்தபின் நினைத்து அறிவதால் அதுவே அறிவாகும். சுழுத்தி நிலையில் ஆனந்தத்தைத் தவிர வேறு இல்லை ஆதலால் அந்த ஆனந்தமே அறிவாகும். பிரளயம், சுழுத்தி ஆகிய இரண்டு அவத்தைகளிலும் ஆனந்த வடிவமாகிய நீ இருந்தே அஞ்ஞானமாகிய இருளை அறிகின்றாய். அதனால் உனது நிச வடிவம், சத்து, சித்து, ஆனந்தமாம். இவ்வாறு இருத்தலைப் புத்தியால் ஊகித்தறிந்து, நீ அகண்ட பரிபூரண, சச்சிதானந்த வடிவமாய் இருப்பாயாக. (சுழுத்தியில் ஆனந்தம் அஞ்ஞானம் இரண்டையும் அறிகிறது. ஆதலால் அதுவே சித்து. அப்போது ஆனந்தமும், சித்தும் இருந்தே அறிவதால் அவை சத்து எனவும் விளக்கினார்).

**144. பலகலையும் உணர்ந்தகுரு மொழிந்தபடி இவனும்அனு பவம்வி டாமல்**
**பலமலரின் மதுப்போலே சச்சிதா னந்தம்ஒன்றாம் பரமார்த் தத்தைப்**
**பலபொழுதும் கண்மூடிச் சமாதிஇருந் தான்விழித்துப் பார்த்த போது**
**பலவடிவுஆம் சராசரசித் திரங்கள்எலாம் தோன்றும்ஒரு படம்ஆ னானே.**

பல ஞான நூல்களைக் கற்றறிந்த குருவானவர், பலவகை மலர்களிலிருந்து சேர்த்த தேன் ஒரே சுவையாய் இருத்தல்போல, சச்சிதானந்தம் என்னும் உண்மை நிலையை சுருதி, யுக்தி, அனுபவத்தோடு மொழிந்தபடி, சீடனும் தொடர்ந்து, பலகாலும் கண்மூடிச் சமாதி நிலையில் இருந்தான். பிறகு விழித்தபோது, அநேகவித வடிவங்களான சர, அசரங்களாகிய சித்திரங்கள் எல்லாம் அகண்ட சச்சிதானந்தப் பிரம்மமாகத் தோன்றும் ஒரு வஸ்திரம்போல ஆனான். (பிரபஞ்சத்தை ஆரோபமான சித்திரமாகவும், பிரம்மத்தை, சித்திரத்திற்கு ஆதாரமான வஸ்திரம் எனக் கூறினார்)

**145. இதயம்ஒத்த சற்குருவே நமக்குஇதுவே வினோதம்அன்றி**
**இனிவேறு உண்டோ**
**அதைஉரைத்தும் அதைநினைத்தும் இருப்பதுஅன்றோ**
**ஞானிகளுக்கு ஆன நீதி**
**முதல்உரைத்த துரியாதீ தமும்ஏழாம் பூமியும்முக்**
**கியம்ஆம் என்ற**

**பதமும்அதின் வகையும்எனக்கு எளிதுஆகத் தெளியும்வண்ணம்**
**பணித்தி டீரே.**

அடியேன் இதயத்திற்கு உகந்த குருவே! பிரம்மத்தை உணர்ந்தவாறு இருப்பதே நமக்கு ஆனந்தமானது. இதைவிட வினோதமானது ஏதும் உண்டா? பிரம்மத்தை அடையும் வழியை உபதேசித்தும், சிந்தித்தும் இருப்பது அல்லவா ஞானிகளுக்குரிய நீதி ஆகும். ஆனால் தாங்கள் முன்னம் துரியாதீதமும் ஏழாம் பூமியும் மிக முக்கியமாகும் என அருளிச் செய்தீர்களே? அதைப்பற்றிய விவரங்களையும் அடியேன் எளிதாகப் புரிந்துகொள்ளும் வண்ணம் கூறியருளல் வேண்டும்.

**146. வினவும்இடத்து அஞ்ஞான பூமிகள்ஏழ் ஞானபூ மிகழ்ஏழ் என்பார்**
**இனிஅவற்றுள் அஞ்ஞான பூமிகள்ஏ ழையும்முந்தி இயம்பக் கேளாய்**
**தனிவித்துச் சாக்கிரம்சாக் கிரமகா சாக்கிரம்சாக் கிரத்தைச் சார்ந்த**
**கனவுகனாக் கனவுசாக் கிரம்சுழுத்தி என்றுஎழுபேர் கணித்தார் மேலோர்.**

ஆராய்ந்து பார்த்தால், அஞ்ஞான பூமிகள் ஏழென்றும், ஞான பூமிகள் ஏழு என்றும் பெரியோர் கூறுவர். இனி அவற்றுள் அஞ்ஞான பூமிகள் ஏழினை முன்னர்க் கூற, நீ கேட்பாயாக. முதலாவது, கலப்பற்ற பீஜ சாக்கிரம். இரண்டாவது, சாக்கிரம். மூன்றாவது, மகா சாக்கிரம். நான்காவது, சாக்கிரத்தில் சொப்பனம். ஐந்தாவது, சொப்பனம். ஆறாவது சொப்பனத்தில் சாக்கிரம். ஏழாவது சுழுத்தி, என்பனவாம்.

**147. முந்தஅகண் டத்துஎழும்ஓர் அறிவுமாத் திரம்அதுதான் முதல்வித்து ஆகும்**
**இந்தஅறி வில்பண்டுஇல் லாதஅகந்தை முளைபோல்ஆம் இதுந னாவாம்**
**வந்துவந்து பிறவிதொறும் அகமமதை வளரும்அது மகாந னாவாம்**
**நந்தும்அகம் கொடுநனவில் மனோராச்சி யம்செயலே நனாக்க னாவே.**

சிதாபாசனோடு கூடிய அறிவு மாத்திரமான நிலை பீஜ சாக்கிரம் எனப்படும். (அந்தக் கரணத்தில் தோன்றும் பிரம்மத்தின் பிரதிபிம்பம் சிதாபாசன்.) இந்த அறிவில் முன்னர் இல்லாது இருந்து, பின்னர் முளைவிட்ட அகங்காரம் (நான் எனது என்னும் அபிமானம்) சூட்சுமமாக உண்டாகும் நிலை சாக்கிரமாம். அகங்காரம் திடப்பட்டும் விரிவாகவும் வளர்ந்த நிலை மகா சாக்கிரமாம். தான் அறிந்தவற்றை நினைவுபடுத்தியும், அறியாதனவற்றைக் கற்பனை செய்தும், மனதில், பயனற்ற வீண் எண்ணங்களுக்கு இடம் கொடுத்தல் (மனோராச்சியம் அல்லது பகல் கனவு) சாக்கிர சொப்பனம் ஆகும்.

**148.** **உண்டுஉறங்கி மனோராச்சி யம்செயல்சொப் பனம்எனும்பேர்**
**உடையது ஆகும்**
**பண்டுகனாக் கண்டுமறந் ததைமீண்டும் நினைப்பதுசொப்**
**பனந னாவாம்**
**மண்டும்இருள் மூடுவது சுழுத்திஆம் அஞ்ஞான**
**வகைகள் சொன்னோம்**
**விண்டுநிறை முத்திதரும் ஞானபூ மிகள்ஏழும்**
**விளம்பக் கேளாய்.**

உண்டு உறங்கும்போது மனோராச்சியம் செய்தல் சொப்பனம் எனப்படும். (நித்திரை மயக்கத்தில் நாம ரூபம் காண்பது). முன்னர்க் கண்டு மறந்த சொப்பனத்தை மறுபடி நினைவு கூர்ந்து, சாக்கிரத்தில் அதனை நினைப்பது சொப்பன சாக்கிரம் ஆகும். அஞ்ஞான இருளால் சூழப்பட்ட நிலையே ஆழ்ந்த உறக்கமே சுழுத்தியாகும். இதுவரை அஞ்ஞான பூமிகளின் ஏழு வகை கூறினோம். இனி சர்வ வியாபகமாக விளங்கி மோட்சத்தைத் தருகின்ற ஞான பூமிகள் ஏழினையும் கூறக் கேட்பாயாக.

**149.** **புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணைஇரண்டுஆம்**
**பூமி ஆகும்**
**நலதனுமா னசிமூன்றாம் பூமிசத்து வாபத்தி**
**நாலாம் பூமி**
**சொலும்அசம்சத் திப்பேரும் பதார்த்தாபா வனைப்பேரும்**
**துரியப் பேரும்**
**மலினம்அறு மகனேஐந்து ஆறுஏழு பூமிகளா**
**வகுத்தார் மேலோர்.**

பெரியோரால் போற்றப்படும் சுபேச்சை முதல் பூமியாகும். விசாரணை என்பது இரண்டாம் பூமியாகும். நல்லதான தனுமானசி மூன்றாம் பூமி ஆகும். சத்துவாபத்தி நான்காம் பூமி ஆகும். அசம்சத்தி, பதார்த்தாபாவனை மற்றும் துரியம் எனப் பெயர் சொல்லப்படுவனவற்றை, முறையே ஐந்து, ஆறு, ஏழாம் பூமிகளாக வகுத்தனர் பெரியோர்.

**150.** **துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சை ஆகும்**
**நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசா ரணையா நம்பி**
**முற்சங்க ஏடணைகள் விடல்தனுமா னசிஇந்த மூன்றி னாலும்**
**சற்சங்க மனதில்உண்மை அறிவுஉதித்தல் சத்துவா பத்தி தானே.**

துற்சங்கம் நீங்கிப் பிரம்ம ஞானத்தை அடைய விரும்பும் தீவிர இச்சை சுபேச்சையாகும். சத்சங்கம் சேர்ந்து ஞான சாத்திரங்கள் கேட்டு, திடமாதற் பொருட்டு மனனம் செய்தல் விசாரணையாகும். குரு சாத்திரம் நம்பி, முன்னுள்ள மனைவி மக்கள் செல்வம் மீதான இச்சை நீக்குதல் தனுமானசி ஆகும். இம்மூன்று பூமிகளின் அப்பியாச வலியால், அநான்ம வாசனைகள் நீங்கிய மனத்தில் தன் நிசவடிவம் பிரம்மமே என்பதை உணர்தல் சத்துவாபத்தியாகும்.

**151. தத்துவத்தில் மனம் உறைத்து மித்தை எலாம் மறத்தல் அசம்சக்தி ஆகும்**
**அத்துவிதஆ னந்தம் வரும் திரிபுடிபோம் பதார்த்தாபா வனைஅ தாகும்**
**வத்துநிலை இருந்தபடி இருந்தமவு னசுபாவம் துரியம் ஆகும்**
**இத்துரிய பூமியைமுன் துரியாதீ தப்பதம் என்ற அதுவும் கேளாய்.**

முன்கூறிய நான்கு பூமிகளின் அப்பியாச வலியால், சீவ பிரம்ம ஐக்கியத்தில் மனம் அழுந்தி, மித்தையான நாமரூபங்களை நீக்குதல் அசம்சத்தி ஆகும். மேற்கண்டவற்றின் அப்பியாச மிகுதியால், திரிபுடிகளற்று, அத்துவிதானந்தம் மேலிட்டு இருத்தல் பதார்த்தாபாவனை ஆகும். இந்த ஆறு பூமிகளின் அப்பியாச வலியால், ஆன்ம சொரூபத்தில் நீடித்து நிலைத்த மௌன நிலை துரியமாகும். இந்நிலையை யாம் முன்னர் துரியாதீதப் பூமி என்று கூறியதை விளக்கக் கேட்பாயாக.

**152. முற்புவிமூன் றினும்உலகம் தோன்றுதலால் சாக்கிரம்ஆம்**
**மூன்றற்கு அப்பால்**
**சொற்பனம்ஆம் அதுவும்மெள்ள நழுவும்ஐந்துஆம் பூமியே**
**சுழுத்தி ஆகும்**
**அற்புதம்ஆம் சுகானுபவம் மிகும்ஆறுஆம் புவிதுரியம்**
**அதற்குஅப் பால்ஓர்**
**கற்பனைஇ லாதஇடம் அதீதம்என்று மௌனமாக்**
**காட்டும் வேதம்.**

சுபேட்டை முதலான மூன்று பூமிகளில் உள்ளோருக்கு உலகம் சத்தியமாகத் தோன்றுவதால், அம்மூன்றும் சாக்கிர அவத்தையாம். சத்துவாபத்தியில் உலகம், சொப்பனம் போன்று மித்தையாகத் தோன்றுவதால் அது சொப்பன அவத்தையாம். நாமரூபங்கள் கிரமமாக நீங்கி, யாதொன்றும் தோன்றாத ஐந்தாம் பூமி சுழுத்தியாகும். பதார்த்த பாவனை (என்னும் ஆறாம் பூமியில்) ஆனந்த அனுபவம் மிகுந்து உண்டாகும். இந்தநிலை மேற்கூறிய மூன்று அவத்தைகளினின்றும் வேறுபட்டது. இந்த அற்புத

நிலையே துரியமாகும். அதற்கும் மேலே, சத்து அசத்து என்னும் கற்பனைகள் ஒரு சிறிதும் இல்லாத அதீத நிலை ஏழாம் பூமியாகிய துரியாதீதமாகும் என வேதமானது மௌனமாகத் தரிசிப்பிக்கும்.

**153. துரியநிலம் தனைத்துரியா தீதம்எனின் மயக்கம்என்று கருதி மேலோர்**
**அரியதுஒரு விதேகமுத்தி அதீதம்என்பார் அதுகணக்கில் ஆறாம் பூமி**
**மருவுசுழுத் தியில்காட்சி சுழுத்திஎன்பார் என்பதுநீ மனத்தில் கொள்ளாய்**
**பெருமைதரு ஞானபூ மியின்விகற்பம் இன்னம்உண்டு பேசக் கேளாய்.**

துரிய பூமியைத் துரியாதீதம் எனக் கூறினால், மந்த புத்தியினர் மயங்குவர் எனக் கருதிய பெரியோர்கள், அரிதான விதேக முத்தியைத் துரியாதீதம் என்றனர். அத்தகைய கணக்குப்படி, (சுழுத்தி நிலையை இரண்டாகப் பிரித்து) ஐந்தாம் நிலை க்ஷீன சுழுத்தி (ஆழ்ந்து உறங்காத நிலை) என்றும், ஆறாவது நிலையைப் பதார்த்தபாவனையால் உண்டான காட (ஆழ்ந்த உறக்கம்) சுழுத்தி என்றும் கூறுவர். இந்தக் கணக்கு முறையால் ஏழாம் நிலையைத் துரியாதீதம் எனக் கூறாது, துரியம் என்றனர். இவ்வாறு ஞானபூமிகளின் வகையை வேறுபடுத்திக் கூறுவதையும் நீ மனத்தில் கொள்வாய். இதுபோலவே, பெருமை மிக்க ஞானபூமிகளின் வேறுபாடுகள் இன்னமும் உண்டு. அவற்றையும் கேட்பாயாக.

**154. முன்நிலங்கள் ஏறியமூ வரும்அப் பியாசிகள்ஆம் முத்தர் அல்லர்**
**பின்நிலங்கள் வரன்வரியான் வரிட்டன்எனும் சீவன்முத்தர் பேதம் ஆகும்**
**சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்துஆம் தூய முத்தர்**
**இன்னமும்அப் பூமிகளின் பெருமைதனை நீஅறிய யான்சொல் வேனே.**

முதல் மூன்று பூமிகளை (சுபேச்சை, விசாரணை, தனுமானசி) அடைந்தோர் அப்பியாசிகள் எனப்படுவர். அவர்கள் சீவன் முத்தர் அல்லர். பின் மூன்று பூமிகளை (அசம்சத்தி, பதார்த்தபாவனை, துரியம்) அடைந்தோர் முறையே வரன், வரியான், வரிட்டன் என வேறுபடுத்திக் கூறப்படுவர். இவற்றிற்கிடையே (நான்காவதாகச்) சொல்லப்பட்ட பூமியை (சத்துவாபத்தி) அடைந்த ஞானிகளே பிரம்ம வித்தாகிய தூய முத்தர் எனப்படுவர். இப்பூமிகளின் பெருமைகள் மேலும் உண்டு. நீ அறியுமாறு நான் சொல்லக் கேட்பாயாக.

**155. நாலாம்பூ மியில்வருமுன் மூன்றுபூ மியும்அடைந்து நடந்து மாண்டோர்**
**மேலான பதம்அடைந்து பிறந்துமெள்ள மெள்ளவந்து வீடு சேர்வார்**

**மாலான பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்தம் மைந்தா**
**காலான முதற்பூமி கைவந்தால் முத்தியும்கை வந்தது ஆமே.**

சத்துவாபத்தி எனும் நான்காம் பூமியை அடைவதற்கு முன்னதாகவே, முதல் மூன்று பூமிகளை அப்பியாசித்து, மரணம் அடைந்தோர், உயர் பதங்களை (சுவர்க்க போகம்) அனுபவித்து மறுபடி பூமியில் பிறந்து காலப் போக்கில் மோட்சம் அடைவர். மயக்கத்திற்குக் காரணமாகும் பிறவிகளைப் பெறமாட்டார்கள். சுபேச்சை என்னும் முதல் பூமியை அடைவதே கடினமாம். மைந்தனே, அடிப்படையான முதல் பூமி ஒருவனுக்குச் சித்திக்குமாயின், அவன் முத்தியும் கைவரப் பெற்றவன் ஆகிறான்.

**156. இப்புவியில் இஞ்ஞான பூமிஒன்றில் இரண்டில்அடைந்து இருந்தார் ஆனால்**
**அப்புருடர் மிலேச்சர்ஆ கிலும்முத்தர் குருபாதத்து ஆணை மெய்யே**
**தப்புஉரைஎன் றவர்கெடுவார் நடுவான மறைகளைநீ சங்கி யாதே**
**செப்புமொழி வழிதிடமாய் அகம்பிரமம் என்றுஇருந்து தெளிந்தி டாயே.**

இவ்வுலகில் எவரொருவர் முதல் பூமி அல்லது இரண்டாவது பூமி அடைந்து அப்பியாசம் செய்கிறாரோ, அவர் மிலேச்சராக (உலகியலில் கொடிய மற்றும் தாழ்ந்த நிலையினர்) இருந்தாலும் கூட, சீவன் முத்தன் ஆவார். குரு பாதத்தில் ஆணையாக இது சத்தியம். இதனைத் தவறு என்பவர் கேடு அடைவார். நடுநிலையான சுருதி வாக்கியங்களில் நீ சந்தேகம் கொள்ளாதே. சுருதி உபதேசித்த வாக்கிய நெறியில் உறுதியுடன், 'நான் பிரம்மம்' என எப்போதும் சிந்தித்து தெளிவடைவாயாக.

**157. பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தருஞான பூமி என்று**
**நெல்ஆகி முளைக்கும்எனைத் தண்டுலம்ஆக் கியகுருவே நீர்சொன் னீரே**
**இல்லாளும் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்துஏ காங்கி ஆனோர்**
**அல்லாமல் முத்திபெறார் என்றுசிலர் சொலும்மயக்கம் அகற்று வீரே.**

நெல்லைப் போலிருந்த ( பிறந்து இறக்கும் தன்மையுடைய) என்னை, அரிசிபோல (மறுபடி பிறவாமல்) ஆக்கிய குருவே! ஞானபூமியை அடைந்த மிலேச்சர்கூட முத்திபெறுவார் எனக் கூறினீர்களே. மனைவியையும் குடும்பத்தையும் துறந்து, சன்னியாச ஆசிரமம் பெற்று, தனித்து இருந்தோர் அன்றி மற்றவர்கள் மோட்சம் அடைய மாட்டார்கள் எனச் சிலபேர்கள் மாறுபாடாகக் கூறுவதன் மயக்கத்தைத் தெளிவிப்பீராக.

**158. சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன்று தெரியக் கேளாய்**

**கட்டுஅழியும் துறவுநால் வகைஆகும் அவைகளுக்குஅங்கு ஆகும்**
**பேர்கள்**
**பட்டதுயர் கெடும்குடீ சகம்வெகூ தகம்அஞ்சம் பரம அஞ்சம்**
**விட்டுஅகலும் துறவுக்கு விராகம்கா ரணம்அன்றி வேடம் அன்றே.**

பெரியோர் புகழும் மைந்தா! உனது சந்தேகம் சரியானதே. அதற்கான விளக்கம் கேட்பாயாக. குடும்ப பந்தம் நாசமாக ஏதுவான சன்னியாசம் நால்வகைப்படும். அவை குடீசகம், வெகூதகம், அஞ்சம் (ஹம்ஸம்), பரம அஞ்சம் (பரம ஹம்ஸம்) என்பனவாம். இவைகளால் சம்சாரத்தில் பட்ட துன்பங்கள் நாசமாகும். குடும்பத்தை விட்டுத் துறவு மேற்கொள்வதற்குக் காரணம் வைராக்கியம் ஆகும். இதுவே காரணமல்லாது, (காவி உடை தரித்தல் முதலிய) வேடம் காரணமாகாது.

**159. மந்தமும்தீ விரமும்தீ விரதரமும் எனமூன்று வகைவி ராகம்**
**வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரும் விராகம் மந்தம்**
**இந்தஉடல் அளவுமனை தனம்வேண்டாம் எனவிடல்தீ விரம்என் பார்கள்**
**அந்தணன்ஊர் மித்தைஎன விடல்அதுதீ விரதரம்ஆம் அறிந்தி டாயே.**

வைராக்கியம் என்பது மந்தம், தீவிரம், தீவிரதரம் என மூவகைப்படும். கொடியதுக்கம் (மனைவி மக்கள், பொருள் இழப்பு) நேரும்போது, குடும்ப வாழ்வினை வெறுப்பதால் ஏற்படும் வைராக்கியம் மந்தம் ஆகும். இந்த சரீரம் உள்ள வரை மனைவி செல்வம் (முதலிய சம்சார பந்தம்) வேண்டாம் என வெறுத்து அவற்றை விடுதல் தீவிர வைராக்கியமாகும். பிரம்மலோகமும் பொய்யெனக் கண்டு அதனையும் துறத்தல் தீவிரதரம் ஆகும் என அறிவாயாக.

**160. பாவிமந்த விராகத்தில் சந்நியா சங்கள்ஒன்றும்**
**பலித்தி டாதே**
**தீவிரத்தில் குடீசகமும் வெகூதகமும் என்றுஇரண்டு**
**திறங்கள் உண்டாம்**
**தாவிநடந் திடத்திடம் இலாதவர்க்குக் குடீசகமும்**
**சகங்கள் எங்கும்**
**மேவிநடந் திடத்திடம்உள் ளவர்க்குவெகூ தகமும்என**
**விதித்தார் மேலோர்.**

மந்த வைராக்கியம் உடைய தீவினையாளனுக்கு நால்வகைச் சன்னியாசத்தில்

எதுவுமே சித்திக்காது. தீவிர வைராக்கியம் உடையவனுக்கு, குடீசகம், வெகூதகம் என்னும் இருவகைச் சன்னியாசங்கள் சித்திக்கும். நடந்து செல்லச் சக்தியற்றவருக்குக் குடீசகமும், உலகெங்கும் யாத்திரை செய்யக்கூடிய திடம் உள்ளவருக்கு வெகூதகமும் உரியன எனப் பெரியோர் விதித்தனர்.

**161. இருவகைதீ விரதரத்தும் அஞ்சன்என்றும் பரமாஞ்சன் என்றும் சொல்வர்**
**வரும்அஞ்ச னுக்குமுத்தி சத்தியலோ கத்துஅன்றி வாராது என்பார்**
**பரமாஞ்ச னுக்குமுத்தி இவ்வுலகில் ஞானத்தால் பலிக்கும் என்பார்**
**திரம்மருவும் பரமாஞ்சன் தானும்இரு வகைஆகும் செப்பக் கேளாய்.**

தீவிரதர வைராக்கியம் உடையவனுக்கு அஞ்சன் (ஹம்ஸன்) பரமஞ்சன் (பரம ஹம்ஸன்) என்னும். இருவகைச் சன்னியாசங்கள் உரியன என்பர். இவற்றில் ஹம்ஸ சன்னியாசிக்கு மோட்சமானது பிரம்ம லோகத்தில் கிடைக்குமே அன்றி, இவ்வுலகில் கிடைப்பதில்லை என்பர். பரமஹம்ஸனுக்கோ, தத்துவஞானத்தால், மோட்சம் இவ்வுலகில் இருக்கும்போதே சித்திக்கும் என்பர். இத்தகைய திட வைராக்கியம் உடைய பரமஹம்ஸ சன்னியாசிகளும் இரு வகைப்படுவார்கள். அது கூறக் கேட்பாயாக.

**162. சிஞ்ஞாசு ஞானவான் என்றுஇரண்டு பேர்கள்அவ**
**ரில்சிஞ் ஞாசு**
**மெய்ஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூமி யுள்நடக்கும்**
**விவேகி ஆனோன்**
**சுஞ்ஞான வான்என்போன் சீவன்முத்தி அடைந்துஇருக்கும்**
**தூய மேலோன்**
**அஞ்ஞானம் அகலும்அந்தச் சிஞ்ஞாசும் இருவகையாம்**
**அதுவும் கேளாய்.**

பரமஹம்ஸ சன்னியாசிகள், சிஞ்ஞாசு, ஞானவான் என இருவேறு திறத்தவர் ஆவர். சிஞ்ஞாசு (தன்னை அறிய விரும்புபவன்) முற்கூறிய ஏழு ஞான பூமிகளுள் முதல் மூன்று பூமிகளில் ஒன்றினை அப்பியாசிக்கும் விவேகம் உடையவன். ஞானவான் என்னும் நல்லவன் (பின்னுள்ள நான்கு ஞான பூமிகள் ஒன்றில் நிலைபெற்று, உலகில் உயிருடன் இருக்கும் போதே) சீவன் முத்தி பெற்ற தூய பெரியோன் ஆவான். அஞ்ஞானத்தை நீக்கும் விவேகியான சிஞ்ஞாசுவுக்கும் இருவகைப் பாகுபாடு உண்டு. அதுவும் கேளாய்.

**163. பந்தமனை துறந்துசிலர் அதிதிகளாய் இருந்துஅடைவர் பரம ஞானம்**
**அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரராய் இருந்துசிலர் அடைவர் ஞானம்**
**இந்தவகை சாத்திரத்தும் உலகத்து நடப்பதுகண்டு இருந்தும் மைந்தா**
**சிந்தனையில் மயக்கம்என்னே சுருதியுத்தி அனுபவத்தால் தெளிந்தி டாயே.**

ஒரு வகையினர், பந்தம் தரும் குடும்பம், செல்வம் ஆகிவற்றைத் துறந்து, குருவை அடைந்து, சன்னியாசி ஆகி, சிரவண மனன நிதித்தியாசனத்தால் பிரம்ம ஞானம் அடைவர். இரண்டாம் வகையினர், தத்தம் வருண தர்மங்களில் இருந்து (பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என) நிஷ்காம்ய கர்மம் செய்து, (அகத்துறவு பெற்று) ஞானம் அடைவர். மைந்தனே, இவ்வாறாக சாத்திரம் வாயிலாகவும் உலகிலும் நடப்பதை அறிந்து இருந்தும், உன் சிந்தனையில் (பாடல் 157ல் சன்னியாசி அல்லாதோருக்கு மோட்சம் உண்டா) என்னும் மயக்கம் எவ்வாறு ஏற்பட்டது. சுருதி யுக்தி அனுபவத்தால் இந்தச் சந்தேகம் நீங்கி தெளிவு அடைவாய்.

**164. பிறந்ததுஉண்டு ஆனால்அன்றோ பிறகுசா வதுதான் உண்டாம்**
**பிறந்ததே இல்லைஎன்னும் பிரமம்ஆ வதுவும் நானே**
**பிறந்தது நான்என்று ஆகில் பிரமம்அன்று அந்த நானே**
**பிறந்ததும் இறந்தது அற்ற பிரமம்ஆம் நானே நானே.**

முன்னம் பிறந்து இருந்தால் அல்லவா பின்னர் இறத்தல் என்பது உண்டாகும்? (நானோ பிறப்பு இறப்பு அற்றவன்). பிறந்ததே இல்லை என்பதால் அசம் என்று சுருதி கூறும் அந்தப் பிரம்மம் ஆகவே நான் இருக்கிறேன். உலகில் பிறந்தது 'நான்' என்று கூறப்படுமாகில், அந்த 'நான்' என்பது (வாக்கிய அர்த்தமான அகங்காரமே அல்லாமல்) இலட்சிய அர்த்தமான பிரம்மம் ஆகாது. பிறப்பும் இறப்புமற்ற பிரம்மாகிய நானே, நானாக ('நான்' என்பதன் பொருளாக) இருக்கிறேன்.

**165. நான்என்ற பிரமம் ஆன நானேநான் அறியேன் என்றால்**
**நான்என்பது ஏது பின்னை நம்முடைப் புந்தி என்னில்**
**தான்அது மயக்கம் தன்னில் சாகுமே சாவாது ஆகி**
**நான்என நிறைந்து இருந்த ஞானம்ஆம் நானே நானே.**

சிந்தனையற்ற, உதாசீன நிலையில், நான் இருக்கிறேன் என்று கூறும் (பிரம்மவடிவ)

---

* *நிதானம் = முதற் காரணம்*

ஆன்மாவே நான் ஆகும். அத்தகைய ஆன்மாவை அறியவில்லை எனக் கூறினால், அப்போது 'நான்' என்று கூறுவது எது? அங்ஙனம் கூறுவது நம்முடைய புத்தி என்றால், அப்புத்தி ஆனது சுழுத்தி நிலையில் அழிவதல்லவா? அத்தகைய சுழுத்தியிலும் அழியாது 'நான், நான்' எனப் பூரணமாய் இருக்கும் ஞானவடிவான ஆன்மாவே 'நான்' என்னும் பதத்தின் உண்மைப் பொருளாகும்.

**166.** **நிறைந்தவாறு எந்தவாறு நிலைதெரிந்து இலன்என் றாயேல்**
**அறிந்ததாம் சுழுத்திதன்னில் ஆனந்தம் அதுவே ஆகும்**
**குறைந்ததற்கு ஆனந்தம்தான் குவலயம் தன்னில் இல்லை**
**நிறைந்ததே இந்தஆன்மா *நிதானம்இவ் அறிவு தானே.**

நான், பூரணமாய் இருக்கும் தன்மை எக்காரணத்தினால்? அதனை நான் அறியவில்லையே என நீ வினவினால், சுழுத்தி நிலையில் (அஞ்ஞானத்தை) அறிந்து இருப்பதாகிய அந்த ஆன்மா ஆனந்தமாகும். (அந்த ஆனந்தத்தை, பரிபூரணம் என்பது எங்ஙனம் எனில்) குறைந்திருக்கும் நிலையில் முழு ஆனந்தம் உலகில் எங்கேயும் காணப்படுவதில்லை. ஆதலால் இந்த ஆன்மா பரிபூரணமானது. இந்த பரிபூரண பிரம்மமே உலகத்திற்கு முதற் காரணமாம்.

**167.** **மனத்தினால் எண்ணித் தானே வந்ததுஇவ் உலகம் ஆகும்**
**நினைத்திடில் அநேக லோகம் நிற்பதுஅவ் அறிவில் அன்றோ**
**அனைத்தையும் கடந்துஅப் பாலும் அந்தமற்று அறிவுஇது ஆம்என்று**
**எனைத்தனி விசாரித் திட்டால் ஏகம்ஆய் நிறைந்தோன் நானே.**

இந்த உலகமானது மனாபாவனையால் உண்டானது ஆகும். ஆராய்ந்து பார்த்தால், மனாபாவனையால் உண்டான அநேகவித உலகங்களும் நிலைத்திருப்பது அந்தப் பிரம்மத்தில் அல்லவா? அதில் கற்பிதமான மனம், பிரபஞ்சம் ஆகிய எல்லாம் பிரம்மமே ஆகும் என்று அறிவாகிய என்னைச் சுத்தமாக விசாரித்தால், அனைத்தையும் கடந்து அவற்றிற்கும் அப்பாலாய், முடிவின்றி ஒன்றாய் நிறைந்து விளங்குபவன் நானே.

**168.** **அந்தவாறு இருந்து கொண்டே ஆனந்தம் அனுப விக்க**
**எந்தவாறு இருந்து கொண்டால் எனக்குஇது தெரியும் என்னில்**
**இந்தமூன்று அவஸ்தை தம்முள் எழுந்திடும் விருத்தி நீக்கில்**
**அந்தவாறு இருந்து நீயும் ஆனந்தம் அடைய லாமே.**

நானும் மேற்கூறியவாறு இருந்து கொண்டு ஆனந்தம் அனுபவிக்க விரும்புகிறேன். எவ்வாறு இதனை அறிவது எனக் கேட்டால், மூவகை (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி) அவத்தைகளில் உண்டாகும் சாந்தி, கோர, மூட விருத்திகளை நீக்கினால் நீயும் அப்படி அகண்டமாய் இருந்து, பரிபூரண ஆனந்தம் அனுபவிக்கலாம்.

**169. வாதனா வசத்தி னாலே வருகிற விருத்தி எல்லாம்**
**ஏதினால் அடக்கல் ஆகும் என்றுதான் விசாரம் செய்யில்**
**போதம்ஆம் இராசன் தானாய்ப் புந்திஐம் புலன்கள் எல்லாம்**
**தாதராய் இருக்கப் பெற்றால் சகலமும் அடங்கும் தானே.**

வாசனைகளால், மனதில் உண்டாகும் விருத்திகளை எல்லாம் எந்த உபாயத்தால் அடக்க இயலும் என ஆராய்ந்தால், ஒருவன் ஞான வடிவ அரசனாகி, ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், அந்தக்கரணம் என்பனவற்றையெல்லாம் தன் வசமாக்கி (அடக்கி) வைத்தால், அப்போது, சகல விருத்திகளும் தானாகவே அடங்கிப்போகும்.

**170. விருத்திகள் அடக்க இன்னம் வினோதமாம் யோகத் தாலே**
**துருத்திபோல் ஊதும் மூச்சைச் சுகமுடன் அடக்கி நிற்கும்**
**கருத்துஅதற்கு இல்லை என்னில் காரண சரீரம் ஆகிப்**
**பெருத்ததுஓர் அவித்தை தன்னைப் பிடுங்கிடில் அடங்கும் தானே.**

விருத்திகளை அடக்க மேலும் உபாயங்கள் கேட்டால், புதுமையான யோக அப்பியாசத்தால், கொல்லனது துருத்தி ஊதுவது போலச் செல்லும் மூச்சுக் காற்றைத் தடை செய்தால் (பிரணாயாமம்) விருத்திகள் அடங்கும். அவ்வாறு செய்ய விருப்பம் இல்லையெனில், (தூல சூட்சும சரீரங்களுக்குக்) காரணமான தடித்த அவித்தையை நாசம் செய்தால் விருத்திகள் தாமே அடங்கும். (தத்துவ ஞானத்தால் அவித்தை நாசமானால், அவித்தையின் காரியமான அந்தக்கரணமும், விருத்திகளும் அடங்கும்.)

**171. காரண சரீரம் தன்னைக் களைவதுஎவ் வாறுஎன்று ஓதில்**
**ஆரணம் பொய்சொல் லாதே அதன்பொருள் அகத்தில் உய்த்துப்**
**பூரணம் ஆகும் என்மேல் புவனங்கள் தோற்றம் என்று**
**தாரணை வந்தது ஆகில் தரித்திடும் அவித்தை எங்கே.**

காரண சரீரமான அவித்தையை கெடுப்பது எவ்வாறு என்று கேட்டால், வேதமானது பொய் சொல்லாது. ஆதலின், அதில் கூறியதன் பொருளை (ஈது அனைத்தும் பிரம்மம்

என்பதை) மனதில் உறுதியாகக் கொண்டு, பரிபூரணமான என்னிடம் பிரபஞ்சங்கள் (பழுதையில் பாம்பு போல) மித்தையாக தோன்றுகின்றன என்ற நிச்சயம் உனக்கு வந்துவிட்டால், அவித்தை எங்கே இருக்கும். (ஓரிடத்தும் இராமல் நாசமாகிவிடும்.)

**172. அப்படி இருக்கச் சித்தம் அலைதலால் விவகா ரத்தில்**
**எப்படிக் கூடும் என்னில் என்னைவிட்டு ஒன்றும் இல்லை**
**இப்படிக் கண்ட எல்லாம் என்மயம் என்க னாப்போல்**
**கற்பிதம் என்று தானே காண்கின்ற சித்து நானே.**

அனுபவத்தில், சித்தமானது உலக விவகாரங்களில் சலனப்பட்டுக் கொண்டே இருப்பதால், தாங்கள் மேலே கூறியபடி பரிபூரணமாய் இருத்தல் எவ்வாறு கூடும் எனில், என்னைத்தவிர எதுவுமே இல்லை. பிரபஞ்சத்தில் நாமரூபத்தை நீக்கிப் பார்த்தால் எல்லாம் என் மயமாகும். ஆதலால் காணப்படும் எல்லாம் கனவு போலக் கற்பிதமானது என்றும் அதனை அறிகின்ற சித்து வடிவமே நான், என்றும் நிச்சயிக்க வேண்டும்.

**173. சித்துநான் நிறைந்தோன் என்ற திடம்மற வாது இருந்தால்**
**எத்தனை எண்ணி னாலும் ஏதுசெய் தாலும் என்ன**
**நித்திரை உணர்ந்த பின்பு நிற்கின்ற கனாவே போல**
**அத்தனை யும்பொய் தானே ஆனந்த வடிவு நானே.**

சித்தாகிய நானே பரிபூரணமாக நிறைந்தோன் என்னும் உறுதியை மறவாதிருந்தால், மனதால் எத்தனை எண்ணினாலும், சரீரத்தால் ஏது செய்தாலும் அவற்றால் கெடுதி இல்லை. உறக்கம் நீங்கி விழித்ததும் மித்தையென உணரப்படும் கனவினைப்போல யாவும் (மனம் வாக்கு காய விவகாரங்கள்) பொய்யாம். ஆனந்த வடிவமே நான் ஆம்.

**174. நான்என உடலைத் தானே நம்பினேன் அநேக சன்மம்**
**ஈனராய்ப் பெரியோர் ஆகி இருந்தவை எலாம்இப் போது**
**கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே**
**நான்என என்னைத் தானே நம்பி ஈடேறி னேனே.**

அளவிறந்த முன் பிறவிகளில் சரீரமே நான் என்னும் மயக்கத்தில் இருந்தேன். அப்போது, உயர்ந்தோர் தாழ்ந்தோர் எனக் கண்டது எல்லாம், கானல்நீர் போல மித்தை என்று குரு அருளால் உணர்ந்தேன். நானே பிரம்மம் என அறிந்து உய்வுற்றேன்.

175. **என்னபுண் ணியமோ செய்தேன் ஏதுபாக் கியமோ காணேன்**
**நன்னிலம் தனில்எ ழுந்த நாரணன் கிருபை யாலே**
**தன்னியன் ஆனேன் நான்உத் தரீயத்தை வீசு கின்றேன்**
**தன்னியன் இன்னும் நானே தாண்டவம் ஆடு கின்றேன்.**

எப்படிப்பட்ட புண்ணியங்களை யான் செய்தேனோ? யாது என் பாக்கியமோ அறியமாட்டேன். நன்னிலத்தில் எழுந்தருளியுள்ள நாராயண தேசிகரின் அருளால், நான் பெறும் பேறு பெற்றவன் ஆனேன். (ஆனந்த மிகுதியால்) மேலாடையை எறிந்து விளையாடுகிறேன். தன்னியன் ஆகிய நான் இன்னும் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருக்கிறேன்.

176. **தத்துவ ஞானம் வந்த சந்தோட அதிச யத்தால்**
**நித்தம்ஆ டுவன்காண் என்ற நிலைமுன்ன மேஅறிந்த**
**சத்தியம் அதனால் அன்றோ தாண்டவா என்றுஅ ழைத்தார்**
**அத்தனை மகிமை உள்ளோர் அன்னையும் பிதாவும் தாமே.**

தத்துவ ஞானத்தால் உண்டான அதிசய ஆனந்தத்தால், எப்போதும் ஆனந்தக் கூத்தாடுவேன் என்னும் நிலையை முன்னமேயே (குருவின் திருவடியைச் சரணடைந்த போதே) நிச்சயமாக உணர்ந்ததனால் அன்றோ, (அப்போதே என்னைத்) தாண்டவா என்னும் பெயரிட்டு, குரு அழைத்தார். அத்தகைய மகிமை உடைய குருவே, எனக்குத் தாயும் தந்தையுமாவார்.

177. **வந்ததுஒர் இவ்ஆ னந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்**
**சிந்தையில் எழுந்து பொங்கிச் செகம்எலாம் நிறைந்து தேங்கி**
**அந்தம்இல் லாதது ஆயிற்று அப்படிக் குருவே தாந்த**
**மந்திரம் அருளும் ஈசன் மலரடி வணங்கி னேனே.**

தத்துவ ஞானத்தால் வந்த இம்மகிழ்ச்சியை யான் எவரிடத்துக் கூறுவேன்? சாந்த விருத்தியில் தோன்றி மேலிட்டு, பிரபஞ்சம் முழுதும் வியாவித்துப் பூரணமாய் நிலைத்து, முடிவற்றதாயிற்று. அத்தகைய குரு, வேதாந்த மந்திர உபதேசம் செய்யும் ஈசுவரனே ஆவார். அத்தகைய ஈசனின் மலரடி வணங்குகின்றேன்.

178. **வித்தியா னந்தம் இந்த விதம்என விளம்பி னோமே**
**பத்தியால் இந்த நூலைப் பார்த்துஅனு பவித்த பேர்கள்**

**நித்திய தரும நிட்டை நிலைதனை அறிந்து சீவன்**
**முத்தியை அடைந்துஇ ருந்த முனிவரர் ஆகு வாரே.**

தத்துவ ஞானத்தால் உண்டான வித்தியானந்தம் இத்தகைய விதமானது என்பதைக் கூறினோம். கைவல்லிய நவநீதம் என்னும் இந்நூலை விரும்பி, பக்தியுடன், குருவின் வாயிலாக சீவ பிரம்ம ஐக்கியத்தைக் கேட்டு அனுபவித்தவர்கள், புண்ணிய கரும விசேடத்தால் நிட்டை கூடி, தமது நிச வடிவத்தை அறிந்து, நித்தியமான சீவன் முத்தி நிலையை அடைந்து, முற்காலத்து இருந்த முனிவர்களுக்கு நிகர் ஆகுவார்கள்.

**179.** **ஆரணப் பொருள் ஆம் வித்தி யானந்தம் விளங்க ஏதும்**
**காரணம் குறைவுஇ லாமல் கைவல்ய நவநீ தத்தைப்**
**பூரணம் ஆக்க வேண்டிப் பூர்வம்ஆம் நன்னி லத்தில்**
**நாரண குருந மக்கு நவின்றனர் யோகில் வந்தே.**




சுருதியின் பொருள் ஆன சாதன சதுஷ்டயம் முதல் வித்தியானந்தம் முடிவாக, சுருதி விளக்க வேண்டிய காரணங்களுள் குறையேதுமின்றி, நன்கு விளங்கச் செய்து, கைவல்லிய நவநீதம் என்னும் இந்நூலை நிறைவுசெய்து அருளும் பொருட்டு, பழம்பெருமை வாய்ந்த நன்னிலம் என்னும் இத்தலத்தின்கண் நாராயண குருவானவர் எமது தியானத்தில் தோன்றி நவின்று அருளினார்.

**180.** **குலவுசற் குருவின் பாதக் குளிர்புனல் தலைமேல் கொண்டால்**
**உலகினில் தீர்த்தம் எல்லாம் உற்றபேறு அடைவார் போல**
**நலமைஆ கும்கை வல்ய நவநீத நூலைக் கற்றோர்**
**பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார்.**

சற்குருவின் பாதங்களை நீராட்டிய குளிர்ந்த நீரை நம் தலைமீது தெளித்துக்கொண்டால், உலகிலுள்ள புண்ணிய தீர்த்தம் எல்லாவற்றிலும் நீராடியோருக்குக் கிடைக்கும் நற்பேறு அடைவார்கள். நற்பயன்களைத் தரும் கைவல்லிய நவநீத நூலைக் கற்றறிந்தவர்கள், பல கலைகள், ஞான நூல்கள் அனைத்தையும் கற்றுணர்ந்த ஞானிகளைப்போல சிறப்புற்று வாழ்வார்கள்.

**சந்தேகம் தெளிதல் படலம் முற்றிற்று.**

**கைவல்லிய நவநீதம் முற்றிற்று.**

---